# ஆய்வு நோக்கில்

# அண்ணா





## தமிழியற்புலம்

மதுரை காமராசர் பல்கலைக்கழகம்

# ஆய்வு நோக்கில் அண்ணா

பதிப்பாசிரியர்கள்

முனைவர் சரசுவதி வேணுகோபால்

முனைவர் தூ. சேதுபாண்டியன்

முனைவர் மு. மணிவேல்

முனைவர் தொ. மனோன்மணி

தமிழியற்புலம்

மதுரை காமராசர் பல்கலைக்கழகம்

மதுரை - 21

முதற் பதிப்பு : திசம்பர், 1996



வெளியீடு : தமிழியற்புலம்

மதுரை காமராசர் பல்கலைக்கழகம்

மதுரை - 625 021

அச்சுப்பணி : தி முல்லை அச்சகம்

வாடிப்பட்டி - 625 218

✆ 54333

விலை : ரூ. 50/-

# பதிப்புரை

> "கேட்டார்ப் பிணிக்குந் தகையவாய்க் கேளாரும்
> வேட்ப மொழிவதாஞ் சொல்"

என்ற குறளுக்கு இலக்கணமாகத் திகழ்ந்த, எதையும் தாங்கும் இதயம் கொண்ட, ஏழைகளின் இதயத்தில் நிரந்தரமான இடம் பெற்ற, மாற்றான் தோட்டத்து மல்லிகைக்கும் மணமுண்டு என்று கூறி மாற்றாரின் மனங்களிலும் இடம் பெற்ற ஆயிரமாயிரம் 'அன்புத் தம்பி'களின் உயிராக விளங்கிய—விளங்குகின்ற அறிஞர் 'அண்ணா'வின் படைப்புகளின் மீதான ஆய்வுக் கட்டுரைகள் அடங்கிய, "ஆய்வு நோக்கில் அண்ணா" என்ற நூல் உங்கள் கையில் தவழ்ந்து கொண்டிருக்கும் இந்த நேரத்தில் நூல் வெளியீடு குறித்துச் சில சொல்லுதல் எம் கடன்.

'பேரறிஞர் அண்ணா அறக்கட்டளை' என்னும் பெயரில் மதுரை காமராசர் பல்கலைக் கழகத்தில் கடந்த ஆண்டு நிறுவப்பெற்ற அறக்கட்டளையின் சார்பாக, பல்கலைக் கழகத்தின் தமிழியற் புலத்திடம் சிறந்த நூல்களை உருவாக்கும் பணி ஒப்படைக்கப்பட்டது. நூல்களைப் படிப்பதிலும், படைப்பதிலும் அண்ணா கொண்ட பெருந் தாகத்தின் காரணமாகச் சிறந்த நூல்களை உருவாக்கும் பணியினைப் பல்கலைக்கழகம் ஏற்றுக் கொண்டிருக்கிறது.

இதற்கான நிதி கிடைக்கப் பெற்றதும், தமிழியற்புலத்தைச் சேர்ந்த ஆசிரியர்களாகிய நாங்கள் 'அண்ணாவின் படைப்புகளின் மீதே ஆய்வுகள் நிகழ்த்தி நூலை வெளியிடலாம் என்று முடிவுசெய்தோம். கதை, கட்டுரை, கவிதை, கடிதங்கள், புதினம், நாடகம் ஆகிய பல்வேறு இலக்கிய வகைகளிலும் அண்ணா கைதேர்ந்தவராதலின் நாங்கள் எங்கள் விருப்பத்திற்கேற்றவாறு தலைப்புகள் தேர்ந்தெடுப்பதிலும் குறிப்புகள் எடுப்பதிலும் அண்ணாவின் நூல்களைப் படிப்பதிலும் ஈடுபட்டோம். புலத்தின் நூலகத்தில் உள்ள அண்ணாவின் படைப்புகள் ஒரே நாளில்

காணாமல் போயின; அதாவது ஆசிரியர்களின் கைகளுக்கு மாறிவிட்டன. பல்வேறு தலைப்புகளில் அண்ணாவின் படைப்புகள் பற்றிய ஆய்வுக் கட்டுரைகள் புலத்தில் வாசிக்கப்பெற்று விவாதிக்கப் பெற்றுக் கட்டுரை உருப்பெற்று நூலும் உருப்பெற்றுவிட்டது. இந்நூலில் பன்னிரு கட்டுரைகள் இடம் பெற்றுள்ளன. அண்ணாவைப் பற்றிய சிந்தனை தமிழியற்புலத்தில் தொடர்ந்து மூன்று மாதங்களுக்கு நீடித்திருப்பது ஆசிரியர்களுக்குப் புத்துணர்வு தந்துள்ளது எனலாம்.

இவ்வாறு ஒரு தலைசிறந்த அறிஞரின் படைப்புகள் தொடர்பான நூலை வெளியிடுவதில் நாங்கள் பெருமகிழ்வடைகிறோம். கட்டுரைகளில் காணப்பெறும் கருத்துகள் அந்தந்த ஆசிரியருடையனவே. இந்நூலைத் தமிழ்கூறு நல்லுலகம் விரும்பி ஏற்றுப் படித்துப் பயன்பெறும் என்று நம்புகிறோம்.

எல்லாவற்றிற்கும் மேலாக, இந்நூலிற்கு அழகிய அணிந்துரை அளித்து எங்களை ஊக்கப்படுத்திய எங்கள் துணைவேந்தர் பேரா கு. ஆளுடையபிள்ளை அவர்களுக்கு எங்கள் நன்றியைத் தெரிவிக்கக் கடமைப்பட்டுள்ளோம்.

நூலைச் சிறந்த முறையில் அச்சிட்டுத் தந்த வாடிப்பட்டி முல்லை அச்சகத்தாருக்கும் அட்டைப்படத்தை வடிவமைத்துத் தந்த திரு. இரவிக்குமாருக்கும் எங்கள் நன்றி உரியது.

*பதிப்பாசிரியர்கள்*

# அணிந்துரை

பேராசிரியர்ரு. ஆறுமுகம் பிள்ளை
துணை வேந்தர்
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்
மதுரை - 625 021

"இவ்வுலகம் எதனால் இயங்குகிறது?" என்றதோர் வினாவை எழுப்பிக்கொண்டு, "பண்புடைய சான்றோர்களால்" எனும் விடையும் அளித்தவர் வள்ளுவர்.

"பண்புடையார்ப் பட்டுண் டுலகம்"

என்பது அவர் வாக்கு. "பண்பெனப் படுவது பாடறிந்து ஒழுகல்" என்பது சங்க இலக்கியம். இத்தகைய 'பண்பு' க்கு இலக்கியமாகத் திகழ்ந்தவர்களில் ஒருவர் 'அறிஞர் அண்ணா'.

அறிஞர் அண்ணா தொடாத இலக்கியத்துறை எதுவும் இல்லை என்று சொல்லுமளவுக்குச் சிறுகதை, நாவல், நாடகம், கவிதை எனப் பலவற்றிலும் நுண்மாண் நுழைபுலமிக்கவராய்த் திகழ்ந்தவர். சாதிகளிலே - சமயங்களிலே - சரித்திரச் சகதிகளிலே அலைப்புண்டு கிடந்த தமிழ்ப் பெருமக்களைத் தம் கூரிய எழுத்து முனையாலும், சீரிய பேச்சாலும் தட்டி எழுப்பிப் புது நெறி காட்டிய புத்துலகச் சிற்பி என அண்ணாவைப் போற்றலாம். 'தம் உயிர்க்கு இறுதி' என்று நன்றாகத் தெரிந்திருந்தும், மருத்துவர்களின் கருத்தினையும் செவிமடுக்காமல், சென்னை மாநிலத்திற்குத் 'தமிழ் நாடு' என்னும் பெயர்சூட்டு விழாவில் பங்கு கொண்டு, விரைவிலேயே தமிழ் மக்களை மீளாத்துயரில் ஆழ்த்திவிட்டு இறந்துபோன மாமேதை அவர்.

இத்தகு பண்பாளரின் பெயரால், மதுரை காமராசர் பல்கலைக்கழகத்தில், 'பேரறிஞர் அண்ணா அறக்கட்டளை' ஒன்று, சென்ற ஆண்டில் நிறுவப் பெற்றது. இவ் அறக்கட்டளையின் சார்பில், அண்ணாவைப் பற்றித் தலைசிறந்த நூல்களை ஆண்டுதோறும் வெளியிட வேண்டும் என்பது திட்டம். இவ் அடிப்படையில் முதலாவதாக வெளிவரும் நூலே 'ஆய்வு நோக்கில் அண்ணா' என்பது.

இந்நூலின்கண் பன்னிரு பாங்கான கட்டுரைகள் இடம் பெற்றுள்ளன. இவற்றுள், அண்ணா எழுதிய சிறுகதைகளைப் பற்றி மட்டும் நான்கு திறனாய்வுக் கட்டுரைகள் உள்ளன. நாடகம், நாவல் இவற்றில் ஒவ்வொன்று; வாய்மொழித் தொடர்பு, சொற்களஞ்சியம், மொழிநடை ஆகியன 'மொழி-யியல்' நோக்கிலமைந்தவை எனலாம். இவை தவிர 'ஆளுமை', 'இலக்கியத் திறன்', 'அரசியல் தொடர்பியல் கொள்கைகள்' எனப் பிறவும் உண்டு.

அண்ணாவைப் பற்றிய ஒரு சிறு அறிமுகத்தோடு, பத்துச் சிறுகதைகளைப் பற்றிய திறனாய்வு, முதற்கட்டுரையில் இடம் பெற்றுள்ளது. 'விடுதலை' என்பதற்கு அண்ணா தரும் விளக்கத்தைக் கட்டுரையாளர் எடுத்துக் காட்டியிருப்பது இவண் குறிக்கத்தகும்.

> ''நமது நாட்டிலேயே, நம்து நாட்டவராலேயே மூட்டிவிடப்படுபவை, பூட்டிவிடப்படுபவை ஆகிய தளைகளில் இருந்த மக்களை விடுவிக்கும் போரும் விடுதலைப் போரே!'' (ப. 3)

'அண்ணாவின் சிறுகதைகள் காட்டும் சமூகம்' எனும் கட்டுரையில், ''இந்திய சமூகக் கட்டமைப்பில் சாதி அடிப்படை மேலாதிக்கம் செலுத்துகிறது...... நீதிக்கட்சி, திராவிடக் கட்சிகள் யாவும் இந்த அமைப்பை மாற்றிச் சமத்துவம் ஏற்பட வேண்டும் எனப் பகுத்தறிவுக் கோட்பாட்டு அடிப்படையில் சமுதாய மறுமலர்ச்சியை முன் வைத்தன'' (ப. 28) என எடுத்துக் காட்டப்பட்டுள்ளது.

அண்ணாவின் ''சிறுகதைகள் பல, சமூகச் சீர்திருத்தக் கருத்துக்களை எடுத்துக் கூறுவனவாகவும், சமூகச் சீர்கேடுகளைச் சாடுவனவாகவும் உள்ளன'' (ப. 37) என்பதை விளக்குவது ஒரு கட்டுரை. ''கதைக்குத் தலைப்பு என்பது உடலுக்கமைந்த தலை போன்றது... அண்ணாவின் சிறுகதைகளில் பெரும்பான்மை கதைமாந்தர்களைக் குறிக்கும் வகையில் தலைப்புக்கள் அமைதல் காணத்தக்கதாகும்'' என்பதைச் சான்றுகளுடன் ஒரு கட்டுரை ஆராய்கிறது (ப. 179). அண்ணாவின் சமூக நாடகங்களை அவற்றின் பாடுபொருள் அடிப்படையில் ஒன்பது வகையாகப்

பகுத்துக் காண்கிறது ஒரு கட்டுரை (பக். 103-104); ''ஆரிய-திராவிட இன உணர்வு முரண்பாட்டினைச் சித்திரிப்பதே இவரது (அண்ணா) முதன்மை நோக்கம் என்பதால், அதற்குத் தகுந்த வகையில் 'கலிங்கராணி' நாவல் படைப்பைச் செம்மையாக அமைத்திருக்கிறார்'' (ப. 133) எனத் திறனாய்வு செய்கிறது ஒரு கட்டுரை.

பேச்சாளர், தொடக்கத்திலேயே கேட்போரைத் தம்வசம் கவர்தல் வேண்டும்; அதற்கு பதினொரு விதமான வழிமுறைகள் உண்டு எனக்கூறி இவற்றுள், மூன்று விதமான உத்திகளைக் கையாண்டு வெற்றிகண்டவர் அண்ணா என்கிறது ஒரு கட்டுரை (பக். 49, 50). ''அண்ணாவின் மொழியில் முப்பத்தாறுவிழுக்காடுகள் காரணச் சொற்கள் காணப்படுகின்றன'' (ப. 89) என்று சான்று-களுடன் மெய்ப்பிக்கிறது ஒரு கட்டுரை. ''செய்யுளுக்குரியதான எதுகை, மோனை ஆகியவை, அண்ணாவின் உரைநடையில் விரவிக்கிடக்கின்றன'' என்பதனைப் பல்வேறு எடுத்துக்காட்டுக்-களுடன் ஆராய்கிறது ஒரு கட்டுரை (பக். 135, 136).

'ஆளுமை' என்பதற்கு விரிவான விளக்கமளிக்கும் ஒரு கட்டுரையில், ''மக்கள் மத்தியில் இவருக்குப் (அண்ணா) புகழும் பெருமையும் கிடைக்கக் காரணமாக அமைந்தவை, (1) பெரி-யாரின் அன்புத் துணையும் மிகுதியான சமூக ஈடுபாட்டுத் தூண்டுதல் உணர்வும்; (2) அண்ணாவின் பேச்சாற்றல் எழுத்-தாற்றல், தன்னலம் கருதாது பொதுநலத் தொண்டில் கொண்ட ஈடுபாடும் எனலாம்'' (ப. 74) என்ற குறிப்பும் இடம் பெற்-றுள்ளது. ''அண்ணாவின் கடிதமே ஓர் இலக்கியந்தான்'' என்று விளக்கும் கட்டுரையில், தன் வரலாற்றுக் குறிப்பு, எதுகை மோனை அடுக்கு, நகைச்சுவை, பழமொழி ஆகியன இடம் பெற்றுள்ள பாங்கு இனிது எடுத்துரைக்கப்படுகிறது. 'அண்ணாவின் அரசியல் தொடர்பியல் கொள்கைகளைப் பற்றி, இறுதிக் கட்டுரை விளக்குகிறது. சமூகவியலாக்கம் முன்கூட்டித் தீர்-மானித்த இடுமானக் குறியீட்டாக்கம், தடமே தகவல், தகவல் மற்றும் மொழி அரசியலாக்கம் என்னும் தலைப்புகளில் ஆராயப்படுகின்றன (பக். 202 - 211).

இவ்வாறு, மனிதருள் மாணிக்கமாக—சிந்தனைச் சிற்பி-யாக—தன்னலம் கருதாச் சான்றோராக விளங்கிய அண்ணாவைப் பற்றிப் பல்வேறு கோணங்களில் திறனாய்வு செய்ததோடன்றி, அவற்றையெல்லாம் காற்றோடு காற்றாகச் சென்றுவிடாதபடி நூல்வடிவில் கொணர்ந்த தமிழியற்புலத்திற்கு — சிறப்பாகத் துறைத்தலைவர்—மற்றும் பதிப்பாசிரியர்கள் ஆகியோர்க்கு என் வாழ்த்தும் பாராட்டும் உரியன.

இவை போன்ற நல்ல ஆக்கப் பணிகளைச் செய்து இப்பல்கலைக் கழகப் பெருமையை உயர்த்த வேண்டும் என்பது எனது ஆவல்!

மதுரை - 21 கு. ஆளுடையபிள்ளை

# உள்ளே ......


1. அண்ணாவின் சிறுகதைகளில் கதைக்கூறு ஆய்வு 1
சரசுவதி வேணுகோபால்

2. அண்ணாவின் சிறுகதைகள் காட்டும் சமூகம் 22
சு. வேங்கடராமன்

3. அண்ணாவின் வரலாற்றுச் சிறுகதைகள் 37
குளோரியாவிக்டர்

4. அண்ணாவின் வாய்மொழித் தொடர்பு 47
சிவ. சசிரேகா

5. அண்ணாவின் ஆளுமைத் திறன் 61
செ. சாரதாம்பாள்

6. அண்ணாவின் சொற்களஞ்சியம் 89
ஏ. ஆதித்தன்

7. அண்ணாவின் நாடகங்களும் சமூக மாற்றங்களும் 100
இரா. காஞ்சனா

8. அறிஞர் அண்ணாவின் 'கலிங்கராணி' 126
ம. திருமலை

9. அண்ணாவின் மொழிநடை 134
தூ. சேதுபாண்டியன்

10. அறிஞர் அண்ணாவின் கதை இலக்கியத்திறன் 155
இரா. மோகன்

11. அண்ணாவின் சிறுகதை உத்திகள் 176
மு. மணிவேல்

12. அண்ணாதுரையின் அரசியல்
தொடர்பியல் கொள்கைகள் 197
தொ. மனோன்மணி

# அண்ணாவின் சிறுகதைகளில் கதைக்கூறு ஆய்வு

சரசுவதி வேணுகோபால்

ஏழைகள் இதயத்திலே இடம்பெற்றுவிட்ட தாய்த்திரு-நாட்டின் தலைமகன், விடுதலை வீரன், சொல்லேர் உழவன், தெரிவோடு ஆற்றல் மிக்கோன், அறவழி காட்டும் அண்ணல், குறள்நெறி நிற்கும் குணக்குன்று, பொன்மொழி புகலும் பொய்யாமொழி, புன்னகை தவழும் பெரும் பலவர், அறிவுக்-கடல், என்று பலவாறாகப் போற்றப்படுகின்ற அறிஞர் அண்ணாவின் சிறு கதைகள் பற்றிய ஆய்வு இது.

கதை பற்றிய ஆய்வினைத் தொடங்கும் முன்னர்க் கதை ஆசிரியரின் பண்பு நலன்களையும் காலம், இடச் சூழலையும் மற்ற பின்னணிகளையும் அறிந்துகொள்வது பயனுடையது. அறிஞர் அண்ணாவைப் போன்ற பல்வேறு திறன்கள்பெற்றுள்ள, மிகப் பல அறிஞர்களாலும், நண்பர்களாலும்பாராட்டப்பெற்றுள்ள கதை ஆசிரியர்கள் எண்ணிக்கையில் குறைவாகவே இருப்பர் எனலாம். எனவே, அவருடைய பண்பு நலன்கள் அனைத்தையும் தெளிவாக அறிந்துகொள்வது தேவையாகின்றது எனவே, இக் கட்டுரை அவரைப்பற்றி அறிந்துகொள்வதாகிய முதல் பகுதி-யையும், கதைக்கூறு ஆய்வு ஆகிய இரண்டாவது பகுதியையும் கொண்டு விளங்குகிறது.

## உயர் பண்புகள்

தமிழகத்தில் மக்கள் மனதில் படிந்துகிடக்கும் அழுக்கு-களைத் துடைத்திடும் பணியை முதன்மைப் பணியாகக் கொண்டு எழுதியும் பேசியும் சிந்திக்கத் தூண்டியும் வந்தவர் அண்ணா சமுதாயத்தைத் துளைத்துக் கொண்டிருக்கும் மதப்புரட்டு, சாதிக் கொடுமைகள், தீண்டாமை மூடப்பழக்கவழக்கங்கள், பொலிந்தோற்றம்; எண்ணம்; எழுத்து; பேச்சு; புலமை; கலை

வணிக நரித்தனம், பொருளாதார ஏற்றத்தாழ்வு, தன்னலம், பண ஆதிக்கம், நிலமுதலைகள் ஆதிக்கம், மது, சூது, பெண்மை இழிவு வரதட்சணை, பொருந்தா மணம், வலியோர் கொடுமை, விலைமகள் வாழ்வு, கைம்பெண் அவலம், கல்விக் களைகள், ஏழ்மை, அச்சம், அடிமைத்தனம், பழமைப் பாசம், ஒற்றுமையின்மை, மொழிப்பற்று, நாட்டுப்பற்றின்மை களையப்பட-வேண்டும் என்ற சீர்திருத்தப் பணியை மக்கட்பணியைத் தமது தொழிலாகக் கொண்டார் அண்ணா (ஆறுமுகம், ப, 1988:125).

*சாதிமத வேறுபாட்டை வெறுத்தல்*

"இது என் நாடு. இயற்கை இதைப் பொன்னாடு ஆக்கும்-இங்குச் சாதி கூடாது - மதத்தின் கொடுமை கூடாது. பொருளாதாரப் பேதம் கூடாது-வடநாட்டுச் சுரண்டல் கூடாது; உரிமை வேண்டும். புதுவாழ்வு வேண்டும் போன்ற பகுதிகள்-சாதிமதங்களின் பேரில் நிகழும் கொடுமைகளை எவ்வாறு எதிர்த்தார் என்பதற்குச் சான்றுகளாகும் (ஆறுமுகம், ப, 1988:64).

*மனிதத்தன்மை*

அண்ணா தமது இறுதிப் பொங்கல் வாழ்த்துரையில் மனிதத் தன்மையைப் பற்றிக் குறிப்பிடுதல் நோக்கத்தக்கது. "தம்பி அந்த மனிதத் தன்மையிலேதான் முழுக்க முழுக்க நம்பிக்கை கொண்டிருக்கின்றேன் மனிதத்தன்மை திகழ்ந்திடச் செய்வதைக்காட்டிலும் மகத்தான வேறோர் வெற்றி இல்லை என்றே கருதுகிறேன். அரசுகள் அமைவதே இந்த மனிதத்-தன்மையின் மேம்பாட்டினை வளர்த்திடத்தான் என்று கருது-கிறேன். என்னால் எந்தப் பிரச்சனையையும் மனிதத்தன்மை கலந்ததாக மட்டுமே கொள்ளமுடிகிறது. அதனால் கொடுமை நேரிட்டுவிடும்போது குமுறிப்போகிறேன். அக்கிரமம் நடை-பெற்றிடும்போது நெஞ்சில் வேல் பாய்கிறது" (ஆறுமுகம், ப, 1988; 44).

*கூரிய மதி*

அண்ணா ஓர் அரசியல் கட்சித்தலைவன் எத்தகைய போராட்டத்தை நடத்தவேண்டும் என்பதற்குக் கொடுத்த அரிய விளக்கம் பின்வருமாறு:

"போராட்டங்களைத் தேர்ந்தெடுக்கும்போது நமக்கிருக்கும் தாங்கும் சக்தியை அளவுகோலாக வைத்துத் தேர்ந்தெடுத்தல் கூடாது. கட்சியில் உள்ள கடைசிக் கோழையின் தாங்கும் சக்தியைத்தான் அளவுகோலாக வைத்துத் துவக்க வேண்டும்" (சண்முகம், ப. உ. 1974:54).

அவரது கூர்மதியில் முகிழ்த்த சிந்தனைகளின் தெளிவுக்கு ஓர் எடுத்துக்காட்டு, விடுதலையைப் பற்றி அவர் எழுதிய கருத்து "விடுதலை என்றால் ஒரு நாட்டைப் பிறிதொரு நாட்டார் பற்றிக்கொண்டுள்ளதனை நீக்கிவிடுவது மட்டுமே என்பேர் குறை அறிவினர் நமது நாட்டிலேயே, நமது நாட்டவராலேயே மூட்டிவிடப்படுபவை, பூட்டிவிடப்படுபவை ஆகிய தளைகளில் இருந்த மக்களை விடுவிக்கும் போரும், விடுதலைப் போரே." (ஆறுமுகம், 1988;45),

*தியாக மனப்பான்மை*

பொதுவாழ்வில் தம்மை முழுவதும் அர்ப்பணித்துக்கொண்ட அண்ணா அடிக்கடி சிறைவாசம் அனுபவித்தார் சிறையில் ஒரு முறை இருந்தபொழுது அவர் மனைவி வேறு சில நண்பர்களோடு வந்தார்; அவரோடு அண்ணா பேசியது இரண்டு நிமிடந்தான் இது குறித்து அவரே வேடிக்கையாக, "தம்மைக் கட்டிக்கொண்ட புண்ணியவதி அவ்வளவு கொடுத்து வைத்தவன்" என்றார் (சண்முகம், ப உ. 1974:13).

*உயிர்களிடத்து அன்பு*

தம்மைச் சேர்ந்தவர்கள் துன்புறும்பொழுது அண்ணா பதறிடுவார் என்ற செய்தியை மற்றவர்கள் எழுத்தின்மூலம் அறியலாம் (சண்முகம், ப. உ 1974 ; 61)

கொள்கையில் எதிரிகளாக இருந்த காங்கிரஸார் ஆகஸ்டுப்போரில் சிறையில் துன்புறக்கண்டு இராசாசி வருந்துவதாக, அவருக்கு ஆறுதல் கூறும் அண்ணா ஒரு பாடலைப் புனைந்தார்.

அடுப்பிலிட்ட கட்டை போல்—அவர்
அனைவரும் தேய்வதா
அணைத்திட வேண்டாமா.
அண்டை அயலார்களே! — நீங்கள்
ஆவன செய்திடத்
தேவைதான் இல்லையா. (திராவிடநாடு 5.9.'43)

இதன் மூலம் பகைவருக்கும் அருளுகின்ற அவருடைய நெஞ்சு தெரிகின்றது.

## கொள்கையாளர்

பார்ப்பனர் அல்லாதாரின் உயர்வு, தன்மானம் காத்தல், கம்பராமாயண எதிர்ப்பு, திராவிடநாடு பிரிவினை, மொழிவழி மாநில அமைப்பு ஆகிய கொள்கைகளில் மிகத் தீவிரமான பிடிப்புடையவர் அண்ணா என்பது பலரும் அறிந்த செய்தி ஆயி-னும் அவற்றைப் பற்றிய நுணுக்கமான செய்திகளை கண்டுச் சற்றுச் சிந்தித்தல் இன்றியமையாதது.

## பார்ப்பனர் அல்லாதார் இயக்கமும் தன்மானம் காத்தலும்

'ஆரியமாயை' என்னும் நூலின் தலைப்பு ஒன்றே அண்ணா பார்ப்பனர் மீது கொண்டிருந்த பெருஞ்சீற்றத்தை உணர்த்தவல்லது. அந்நூலின் மூன்றாவது பதிப்புக்குப் பின் மிகப் பல அரசியல் நிகழ்ச்சிகள் ஏற்பட்டன; வழக்குத் தொடரல், சிறையிலிடல், அபராதம், விதித்தல், அச்சகத்தைச் சூறையாடல் போன்ற பல நிகழ்ச்சிகளை அண்ணாவும் பிறரும் சந்தித்தனர். ஆயின் பின்னர் அந்நூல் பதினாறு முறை பதிப்பிக்கப்பெற்றது. அந்நூலின் தொடக்கமே ஒரு புதுமையான போற்றித் திருப்-பாவோடு அமைகின்றது.

பேராசைப் பெருந்தகையே போற்றி!
பேச நா இரண்டுடையாய் போற்றி!
தந்திர மூர்த்தி போற்றி!
தாசர்தம் தலைவா போற்றி!
வஞ்சக வேந்தே போற்றி!
வன்களை நாதா போற்றி!
கொடுமைக் குணாளா போற்றி!

கோழையே போற்றி ! போற்றி !
பயங்கொள்ளிப் பரமா போற்றி !
படுமோசம் புரிவாய் போற்றி !

என்று அமைந்துள்ள அப் 'போற்றித் திருப்பா' ஆபிடியூபா என்னும் பிரெஞ்சுப் பாதிரியார் தம் நூலில் ஆரியரை அர்ச்சித்திருப்பதன் தமிழ் ஆக்கம்தான் என்று அண்ணா எழுதுகிறார் (அண்ணாதுரை, 1981: 9).

தென்னகத்தில் ஆரியர்கள் ஊடுருவல் (ஆரியமாயை' 70) நால்வகைப் பாக்களில் வெண்பா பார்ப்பனருக்கு, ஆசிரியப்பா அரசர்க்கு, கலி வைசியர்க்கு, வஞ்சிப்பா சூத்திரருக்கு என்ற விதிமுறைகள், ஆரியர் திராவிடரை வென்று அடிமைப்படுத்திய இராமன், கிருஷ்ணன் ஆகியோர் ஆரிய ஆதிக்கத்தை ஏற்படுத்தியமை போன்ற பலப்பல செய்திகள ஆரியமாயையில் பெருஞ் சினத்தோடு பேசப்பட்டுள்ளன.

ஜானகி ராமமூர்த்தி என்னும் நெல்லூர் வக்கீல் (பிராமணர்) சென்னையில் நீலா வேங்கடசுப்பம்மா என்ற திராவிடப் பெண்ணை இரண்டாம தாரமாக மணந்து அவர் இறப்புக்குப் பின அந்தப் பெண் தனக்கும் தன் பிள்ளைகளுக்கும் ஜீவனாம்சம் வேண்டி வழக்குப் போட்டபொழுது மாவட்ட நீதிபதி மாதம் ரூ. 25 தரப்பட வேண்டும் என்று தீர்ப்பளிக்க, மூத்த மனைவி மீண்டும் எதிர் வழக்குத் தொடர, 2 பார்ப்பன நீதிபதிகள் இந்தத் திராவிட - ஆரியர் திருமணம் செல்லாது எனத் தீர்ப்பளித்தனர் (மனுதர்மநீதி, 9 : 178).

ஒரு திராவிடர் ஒருதிராவிடப்பெண்ணை 3 மாதக் கருவுற்ற நிலையில தெரியாமல் மணந்தார், பின் விவாக விடுதலைக்கு வழக்குத் தொடர, நீதிபதி சூத்திர விபசாரக் குற்றம் கற்பித்து மனைவியை விலக்கமுடியாது என்றார்.

"இத்தகைய அநீதிகளை ஒழிப்பதற்காகத்தான் இன்று ஆரியர், திராவிடர் கிளர்ச்சி நடைபெறுகிறது. ஆரியர்களின் ஆதிக்கம் ஒழியவேண்டும்; ஆரியர்களின் அக்கிரமமான ஸ்மிருதிகள் அழிய வேண்டும்; அப்பொழுதுதான் இந்த நாட்டில் சம

நீதியைக் காணமுடியும். உத்தியோகங்களில் திராவிடருக்குக் கிடைக்கவேண்டிய சரியான பங்கு கிடைக்கவேண்டும் என்பது சமநீதி பெறுவதற்குத்தான்'' என்று எழுதுகிறார் அண்ணா (அண்ணாதுரை, 1981 : 61).

ஆட்சிக்கு வருமுன்னர்த் தாம் கொண்டிருந்த கருத்துக்களுக்கு மிகுந்த சிறப்புக் கொடுத்து 1967-ஆம் ஆண்டு சுயமரியாதைத் திருமணச் செல்லுபடிச் சட்டத்தை முதலமைச்சர் அறிஞர் அண்ணா நிறைவேற்றி வைத்தது தன்மான இயக்கத் திற்குப் பெரும் வெற்றியாகும் (சுந்தரவடிவேலு, நெ. து., 1980 : 208-209).

பிராமணரை வெறுக்கும் அண்ணா அவர்கள் வழங்கும் பல தொடர்கள், பிராமணப் பேச்சுத் தமிழ் ஆகியவற்றைச் சிறப்பாகக் கையாளுவது (ஒன்றிரண்டு தவறுகளைத் தவிர) வியப்பிற்குரியது, சான்றுகள் சில காட்டுவேன்.

'பிராமணா போஜனப் பிரியா'
'பிராமணப் பிரீதி தேவதாப் பிரீதி'

(அண்ணாதுரை 1981 : 62)

பிராமணர்களிடம் ஏமாந்து நிற்கும் பிராமணரல்லாதாரைப் பற்றி

''சற்சூத்திரர்கள்', 'இளித்தவாயர்', 'ஏமாந்த சோணகிரிகள்' என்று பலவாறு இகழ்கின்றார் (அண்ணாதுரை 1981 : 62, 63)

ஐங்குறுநூற்றில் ஒரு பாட்டிற்கு விளக்கம் கூறும் அண்ணா, ''பார்ப்பனரின் உச்சிக் குடுமி கூத்தாடுவது போல் குதிரையின் பிடரிமயிரும் ஆடுகிறது. அதைப் பார்க்கையில் சிரிப்பு வருகிறது'' என்று தோழி கூறுவதாகவும் ''போடி குறும்புக்காரி'' என்று தலைவி கூறுவதாகவும் எழுதுகிறார்.

''அன்னாய் வாழி வேண்டன்னை நம்மூர்ப்
பார்ப்பனக் குறுமகப் போலத் தாமுங்
குடுமித் தலைய மன்ற
நெடுமலை நாடன் ஊர்ந்த மாவே''

என்று ஐங்குறுநூற்றுப் பாடல் (202) அமைந்துள்ளதேயன்றித் தோழி சிரிப்பு வருவதாகக் கூறுவது போலில்லை. அண்ணா தம் கருத்தை வலியுறுத்துவதற்காக இத்தகைய மிகையான விளக்கத்தைத் தருகிறார்.

தம்பிக்கு அண்ணாவின் கடிதங்கள் எனும் நூலில் "அசித்து வாரத்தில் கொழுத்த சாதுக்களின் வாழ்வு" பற்றி சாடுதல் துறவிகளைப் பற்றியும், ஆரியத் தவசிகளைப் பற்றியும் அவர் காண்டிருந்த எண்ணங்களைத் தெளிவாகக் காட்டவல்லது (அண்ணாதுரை 1974 : 41-49)

*கம்பராமாயண எதிர்ப்பு*

இராமனையும், கிருஷ்ணனையும் ஆரியர் ஆதிக்கத்தை ஏற்படுத்தியவர்கள் என்ற கருத்தே கம்பராமாயணத்தை எதிர்ப்பதற்கு அடித்தளமாக அமைந்தது.

'தீ பரவட்டும்' என்ற நூலில் "நான் சிறுபிள்ளையில் படித்தது ஆரியமத உபாக்கியானம் என்பதைத்தான். பின்னர் மனோன்மணீய ஆசிரியர் சுந்தரம்பிள்ளை அவர்களும், சைவத் திருவாளர் வி. பி. சுப்ரமணிய முதலியாரும் திராவிட நாகரீக மேம்பாட்டை எடுத்துரைத்தனர். மறைமலை அடிகளாரும் இது குறித்துக் கூறினார். நாங்கள் கூறுவதைக் காட்டிலும் கடுமை-யாகவே, ஆரிய மன்னன் மகன் இராமனைத் தெய்வமாக்கித் தமிழரைச் சிறுதெய்வ வழிபாடாற்றும் சிறுமதியினர் ஆக்கிற்று ஆரியம் என்று கூறினார். அரசியலில் வேறுபாடான கருத்தைக் கொண்ட பண்டிதர் ஜவஹருங் கூட ஆரியதிராவிடப் போராட்டக்-கதையே இராமாயணம் என்று உரைத்ததைக் கூறவிழைகிறேன். ... அதனைக் கம்பர் எழுதியுள்ள முறை, தமிழர் ஆரியத்தை ஏற்றுக்கொள்ளும் தூண்டுகோலாகவும், தமிழ் இனம் ஆரிய இனத் தலைவனிடம் தோற்றுவிட்டது என்பதை ஒப்புக்கொள்ளச் செய்வதாகவும் இருப்பதனால் அந்நூலைப் படித்திடும் தமிழினம் தன்னம்பிக்கை, தன்மானம் இழந்து கெடுகிறது என்று கூறு-கிறோம். தமிழினம் என்பது புத்துயிர் பெற, இத்தகைய ஆரியக் கலையை அழிப்போம் என்று உரைக்கிறோம். இது, இன

எழுச்சியின் விளைவு'' என்று உணர்ச்சிமயமாகக் கூறுகிறார் (அண்ணாதுரை 1969 : 10-11).

*புராண எதிர்ப்பு*

''இத்தகைய புராணங்களில் மக்களின் அறிவு பாழ்படுவதைக் கண்டே நாங்கள் அப்புராணங்களைக் கண்டிக்கிறோம். எனவே, கலை, இடம், இனம், காலம் எனபவற்றிறகே உரியது. ஆரியக் கலை வேறு, திராவிடக்கலை வேறு. ஆரியக்கலை நமபொணாக் கருத்துக்களும் ஆபாசங்களும் நிரம்பி உள்ளன. திராவிட இனத்தை அடக்கவும், பண்பை அழிக்கவும் பயன்பட்டுப் பாமரரின் மனத்தைப் பாழாக்குகிறது என்ற குற்றச்சாட்டுகளைக் கூறி, கம்பராமாயணத்தையும், பெரியபுராணத்தையும் கண்டிக்கிறோம் கொளுத்துக' என்று கூறுகிறோம்'' என்ற பகுதியில புராண எதிர்ப்பினை மிகத்துணிவாகவும் ஆழமாகவும் சாடி உள்ளது நினைவில் நிற்கவல்லது.

இப்பகுதியில் கதைக்கூறு (Motif) என்பது பற்றிய விளக்கமும் அண்ணாவின் சமூகச் சிறுகதைகளில் அதனை எவ்வாறு காண்பது என்பதும் இடம்பெறும்.

ரஷ்யநாட்டு அறிஞர் விளாடிமிர் பிராப் என்பார் 1928-இல் தேவதைக் கதைகளில் அமைப்பியல் ஆய்வினை நிகழ்த்தினார். அது ரஷ்யமொழியிலிருநது 1958-இல ஆங்கிலத்தில் மொழி-பெயர்க்கப் பெற்றது. அதனைப் பின்பற்றி அமெரிக்க அறிஞர் வட அமெரிக்க இந்தியர்களின் நாட்டுப்புறக் கதைகளில் அமைப்-பியல் ஆய்வினை நிகழ்த்தினார். பிராப் தம் ஆய்வில் அடிப்படை அலகுக்கு வினை (function) என்றும் துணை வினைகள என்றும் பெயரிட்டார்.

காட்டு : குறை (lack) என்பது வினை; பார்வையின்மை, குழந்தையின்மை, செல்வமின்மை என்ற ஒவ்வொன்றும் துணை வினைகள். ஏதேனும் ஒரு குறை கதைத் தொடக்கததில காட்டப்-படும் அதனைத் தீரபபதற்காகக் கதைத்தலைவன் புறப்படு-வான். இறுதியில் குறை தீர்க்கப்பெறும்.

ஆலன் டண்டிஸ் பிராப்பின் சொல்லை நீக்கிவிட்டுக் கென்னத் பைக் என்ற மொழியியலறிஞரின் வழியில் 'motifeme', 'allomotif' என்ற கலைச் சொற்களை உருவாக்கிப் பயன்படுத்தினார். தமிழில் அவற்றைக் கதைக்கூறன் என்றும் மாற்றுக் கதைக்கூறு என்றும் கூறலாம்.

இவ்வாய்வில் நினைவில் கொள்ளவேண்டிய முக்கியமான செய்தி, இது குறிப்பிட்ட வகைக் கதைகளில் மட்டுமே செய்யக்கூடியது என்பதாகும். பிராப் தேவதைக் கதைகளிலும் டண்டிஸ் அமெர்-இந்தியர்களின் கதைகளிலும் ஆய்வு செய்தனர்.

நாட்டுப்புறக் கதைகளைப் போலவே எழுத்திலக்கியத்திலும் ஒரு குறிப்பிட்ட ஆசிரியரின் குறிப்பிட்ட வகைக் கதைகளிலும் இவ்வாய்வின் ஒரு பகுதியை நிகழ்த்திப் பார்க்கலாம் என்ற விழைவில் அண்ணாவின் சிறுகதைகளில் சமூகச் சிறுகதை என்னும் வகைக் கதைகள் இவ்வாய்வுக்கு உட்படுத்தப்படுகின்றன. சமூகச் சிறுகதைகளில் உள்ள கதைக்கூறன், மாற்றுக் கதைக்கூறுகளை ஈண்டுக் காண்போம்.

இவ்வாய்வில் அண்ணாவின் சமூகச் சிறுகதைகளில் பத்துக் கதைகள் எடுத்துக்கொள்ளப்படுகின்றன. அவை,

1. செவ்வாழை
2. பூபதியின் ஒரு நாள் அலுவல்
3. வழக்கு வாபஸ்
4. பேய் ஓடிப்போச்சு
5. சோணாசலம்
6. பலாபலன்
7. சமூகசேவகி சாருபாலா
8. சூதாடி
9. சொல்லாதது
10. காமக்குரங்கு

ஆகியவை.

ஒவ்வொரு கதையின் சுருக்கத்தையும் கூறுவதும் இன்றியமையாதது.

## 1. செவ்வாழை

செங்கோடன் எனும் பண்ணையாள் தன்வீட்டுத் தோட்டத்தில் ஒரு செவ்வாழையைக் கண்போல வளர்த்து வருகிறான். அவன் பிள்ளைகள் கனியை உண்பதற்குக் கனவு காண்கின்றனர். அவன் பணியாற்றுகின்ற பண்ணையின் சொந்தக்காரர் பரந்தாம முதலியாரின் மருமகளின் பிறந்தநாள் வருகின்றது. கோயிலுக்குக் கொண்டு போகும் பழம் செவ்வாழையாக இருந்தால் நன்றாக இருக்குமென்று கணக்கப்பிள்ளை கூறி, செங்கோடன் வீட்டில் அது இருக்கிறது என்றும் கூறுகிறான். பண்ணையார் செங்கோடனிடம் கூற, மிகப்பெரும் மனவேதனையோடு குழந்தைகளின் துன்பத்தையும் பொருட்படுத்தாமல் அந்தச் செவ்வாழைக் குலையைக் கணக்கப்பிள்ளையிடம் ஒப்படைக்கிறான். இடையில் கணக்கப்பிள்ளை அதில் பெரும்பகுதியைத் திருடுகிறான். அவன் மகனின் ஆசையை நிறைவுசெய்ய அவன் மனைவி காலணா கொடுக்க அதைக்கொண்டு கடையில் இருக்கும் செவ்வாழைப் பழத்தைத் தன் வீட்டுப் பழந்தான் என்று அறியாத நிலையில் வாங்கச் செல்லவும், கடைக்காரன் விரட்டியடிப்பதுமாகக் கதை முடிகிறது. இறுதி வாக்கியமாகத் தொழிலாளர் உலகிலே இது ஒரு சர்வ சாதாரண சம்பவம் என்று ஆசிரியர் கருத்து வெளிப்படுகிறது

## 2. பூபதியின் ஒரு நாள் அலுவல்

1. ஒய்வூர் மிட்டாதார் ஒயிலானந்த பூபதி 'பிரதர்' துரைசிங்கம் என்பவரின் தூண்டுதலால் யுத்தநிதி வசூல் செய்வதற்குக் கச்சேரிகள் ஏற்பாடு செய்கிறார். 2. பூபதியின் தந்தை பொன்னுராமர் தன் இளமைக்காலத்தில் நவராத்திரி உற்சவம் நடத்தியபொழுது பெண்கள் பழக்கம், உசத்தச்சரக்கு சாப்பிடும் பழக்கம் ஏற்பட்டதை எண்ணிப் பார்க்கிறார். 3. சீமானின் தோழன் ஆடம்பரங்களைப் பற்றிய, செல்வர்களைப் பற்றிய வர்ணனை செய்து அவனைத் தூண்டுகிறான். 4. செல்வம் இருந்தால் விலைமாதர் தொடர்பு ஏற்படும் என்ற கருத்து இடையே வருகிறது. 5. உழைக்காமல் உல்லாசமாய் இருப்போரைச் சாடுபவன் ஒருவன் காட்டப்பெறுகிறான் 6. சப்-கலெக்டர் (ஐயர்) பூபதியின் அறியாமை பற்றித் தன மாமனாரிடம் (சமையல்காரர்) விளாசுகிறார். 7. சப் இன

பெக்டர் அஞ்சாமை நிரம்பியவர் ஒருவர் இடம் வெறுகிறார். 9. பொதுக்கூட்டம் நிகழ்ந்து கொண்டிருக்கும்பொழுது பூபதி அவ்வழியே காரில் செல்ல உழைப்புறிஞ்சி என அவனைப் பார்த்துச் சிலர் இகழ்கின்றனர். 10. ரேடியோவில் பிரெஞ்சுப் புரட்சி பற்றிய பேச்சு கேட்கிறது. 11. பூபதி விஸ்கி பாட்டிலை அடித்து உடைத்து மயக்கமுறுகிறான்.

### 3. வழக்கு வாபஸ்

இடம் : நீதிமன்றம் 1. மாணிக்கஞ்செட்டியார் தன் கடையில் வேலை செய்யும் சிவநேசன் பத்துவீசைக் கற்பூரத்தைத் திருடிய குற்றவாளி எனல். 2. சிவநேசன் வாதி வக்கீலிடம் இடக்காகப் பதில் சொல்லுதல். 3. பாவபுண்ணியம் பற்றிய கிண்டல்-பாத்திரங்களின் பேச்சு-சிவநேசன் 10 வீசைக் கற்பூரத்தையும் கொளுத்தி விட்டமை. 4. செட்டியார் வீட்டில் பக்த ராமதாஸ் கதை நடத்தல்-செட்டியார் 'நாமெல்லாம் பக்திமானாய் இருக்கணும்' எனல். 5. மாஜிஸ்திரேட்டிடம் சிவநேசன் 'நான் பக்தன்' எனல். 6. 'மாணிக்கவாசகரும், இராமதாசரும் கள்வர் என்றால் நானும் கள்வன்' எனல். திருமங்கை ஆழ்வாரின் வழிப்பறிக் கொள்ளை பற்றிக் கூறுதல். 7. மாஜிஸ்திரேட், அக்கால நீதி வேறு, இக்கால நீதி வேறு எனல். 8. சிவநேசன் முன்பு நம்பியதையேதான் மக்கள் இன்னும் நம்புகிறார்கள். புராணப் பிரச்சாரம் நடக்கிறது; ஆனால் அதை நம்பக்கூடாது என்று மாஜிஸ்திரேட் கூறுகிறார். அடுத்தவீட்டுப் பத்மா வறுமையால் தன் குழந்தையைக் கிணற்றில் போட்டாள்-அதற்கு 7 வருடக் கடுங்காவல் தண்டனை. அவள் நல்லதங்காள் கதை கேட்டிருக்கிறாள். நல்லதங்காள் 7 பிள்ளைகளைக் கிணற்றில் போட்டாள். ஏன் பத்மாவுக்குத் தண்டனை எனல். மாஜிஸ்திரேட்டின் மனைவி அரசமரம் சுற்றியதைக் கூறுதல். 9. மாஜிஸ்திரேட்டும் வாதி வக்கீலும் தனியே பேசுதல். புராணங்கள், இராமாயணம ஆகியவற்றில் நிறைய அக்கிரமங்கள், ஒரு சில நன்மைகள் உள்ளன. பிரஹஸ்பதி குரு-சந்திரன் சீடன்-குருபத்தினி தாரா சீடனுடன் தொடர்பு கொள்ளுதல், திரௌபதி ஐவருக்கு மனைவி-கோர ஏற்பாடு-எப்படி அந்தம்மையார் ஒத்துக்கொண்டார் எனல். படித்தவர்கள் திருந்த வேண்டும் எனல். 10. வழக்கை வாபஸ் பெற்றுக் கொள்ளச் சொல்லி மாஜிஸ்திரேட் வாதி வக்கீலிடம் கூறுதல்'

### 4. பேய் ஓடிப்போச்சு

1. பூசாரியின் மந்திரசக்தியில் கிராமமக்கள் நம்பிக்கை வைத்தல். 2. கிராம மக்களைப் பிடித்திருந்த பேய் ஓடிப்போதல். 3. அண்ணா கிராமத்தாரை உயர்வாகப் பேசுதலும், நகரத்தாரை தாழ்வாகப் பேசுதலும் காணப்பெறுதல். 4. சினிமா டைரக்டரின் ஏமாற்றுவேலை தெரிய வருகின்றது. கதைத்தலைவியின் அண்ணன் இதனைக் கண்டுபிடித்துச் சரி செய்கின்றார்.

### 5. சோணாசலம்

சோணாசலம் மிக நல்லவன்; தயாள குணம் படைத்தவன் தனது வியாபாரத்தில் மோசம் நடந்து, வறுமையை அடைகிறார் அந்த வருடத்தில் இவரது மகளின் திருமணம் நடககிறது. வறுமையான சூழ்நிலையில் மகளின் கணவனான மருமகன் அதிகமாக வரதட்சணை (சீர்) கேட்டல். இதனால் சோணாசலம் ஆத்திரம் அடைகிறார். இதன் காரணமாக இவரது மகள் மூன்று வருடங்களாகக் கணவனுடன் வாழாது, தனது தந்தை வீட்டிலேயே இருக்கிறாள். திரும்பவும் மருமகன் மாமனாரின் வீட்டிற்கு வருகிறார். இச்சமயத்தில் சோணாசலம் வருந்துகிறார். ஓர் ஆயா குழந்தையைத் தள்ளுவண்டியில் வைத்துத் தள்ளிக்கொண்டு செல்லும்போது வலிப்பு வர, சோணாசலம் காப்பாற்றுகிறார். பிறகு செயினைத் திருடிக் கொண்டு ஓடுகிறார். வேறொரு வாலிபன் அந்த நேரத்தில் வரத் திருட்டுப்பழி அவன் மீது விழுகிறது.

### 6. பலாபலன்

கதைத்தலைவனுக்குக் கடன் அதிகமாக இருக்கிறது. அதன் காரணமாக உடல் நிலை சரியில்லாது போகிறது. கதைத்தலைவனின் மனைவி சோசியத்தில் அதிக நம்பிக்கை கொண்டிருந்த காரணத்தால் தனது கணவனுக்கு ஜாதகப்பலன் எவ்வாறு இருக்கிறது என்று கேட்கிறாள். சூரியனின் பார்வை, சனி பார்வை என்று சோசியர் சிறப்பாகப் பேசுகிறார். பின்பு, வைத்தியரை அழைத்து வந்து மருத்துவம் பார்க்கச் செய்கிறாள்.

ஆனால், உடல் குணம் அடையவில்லை. தனது கணவனின் நிலைக்குக் காரணம் கடன் தொல்லை என்று அறியாத மனைவி இவ்வாறு செய்கிறாள். சேட்டின் பார்வை ஜுரத்தை ஏறச் செய்தது. சுட்டுப்பட்டி ஜமீன்தாரின் பார்வை ஜுரத்தை குறைத்தது என்று கதைத்தலைவன் எண்ணுகிறான்; அதாவது கடன் தீரும்பொழுது காய்ச்சலும் தீர்கிறது.

7. *சமூகசேவகி சாருபாலா*

கோதண்டராம ஐயர் புத்திரி—வருணனை, ஐயர் மனைவி தாசனாக இருத்தல். மனைவி பணக்கார வீட்டுப் பெண்ணாக இருத்தல். மருத்துவம் பார்க்க வருகின்ற மருத்துவர் மீசை வைத்திருத்தல் (ஐயர் மீசை இல்லாதவர், அதனைக் கூட வைத்துக்கொள்ள முடியாதவராய் இருக்கிறார் என்று சுட்டுதல்). டாக்டருக்கும் சாருபாலாவிற்கும் காதல் ஏற்படுதல். சாருபாலா-வின் சமூகசேவை காரணமாக ஒரு சேரிக் குழந்தை மரணமடைதல் அவளை ஒரு போலியான சமூக சேவகியாகக் காட்டல்.

8. *சூதாடி*

பார்த்தசாரதி முதலியாரின் டிரைவர் பாலு, முத்துசாமி ஐயரின் டிரைவர் மோசஸ் இருவரும் சீட்டு ஆடுதல். முத்துசாமி ஐயர் மோசசைச் சூதாடுகின்றாயே என்று திட்டுதல். முத்துசாமி ஐயர், சீனு ஆகியோரின் ஷேர் பற்றிய பேச்சு. முத்துசாமி ஐயர் முதலியாரை ஏமாற்றியது பற்றிப் பேசுதல். சீனு இறங்கிப் போதல். மோசசிடம் மறுபடி ஐயர் 'சூதாடலாமா' எனல். மோசஸ் ஊழியன், முதலாளியிடம் பேச முடியுமா? என ஆசிரியரின் கருத்து வெளிப்படுதல்.

9. *சொல்லாதது*

ஏழைப்பெண்-அழகியாக இருத்தல். பணக்காரன் ஒருவன் அப்பெண்ணை விரும்புதல்; ஏழைப்பெண் கருவுற்றுவிடுகிறாள். அப்பணக்காரன் ஏழைப்பெண்ணை ஏமாற்றிவிட்டு வேறொரு பெண்ணை மணந்து கொள்கிறான். பணக்காரனின் செல்வம் அழியும் அதே சமயத்தில், ஏழைப்பெண்ணின் தந்தை பணக்-காரனாகிவிடுகிறார். அவளை முன்பு ஏமாற்றிச் சென்றவன் மீண்டும் வந்து காதலியின் கரம் பிடிக்கிறான்;

10. காமக்குரங்கு

வயதான மிராசுதார் ஒருவர் இளம்பெண்ணைத் திருமணம் செய்து கொள்கிறார். இரவு விருந்தின்போது நாடகத்தில் பெண் வேடமிட்ட ஆணை அடைய விரும்புதல். அவன் புதுப்பெண்ணிடம் தஞ்சம் புகுதல். அவன் ஆண் என்றறிந்து அவனோடும் தந்தையோடும் மிராசுதாரை விட்டு நீங்குதல்.

மேற்கூறப்பெற்ற கதைகளில் உள்ள கதைக்கூறுகளைப் பின்வருமாறு கூறலாம்.

I. செவ்வாழை

1. குடிசைவாழ் மக்கள்
2. பண்ணையார்-வைரமாலை, பொன்னிற மேனி
3. உழைப்பின் விளைவு
   தரகர் இல்லை
   முதலாளி இல்லை—என்ற ஆசிரியரின் கருத்துகள்
4. உழைப்பவனுக்குத்தான் நிலம் சொந்தம் எனச் சொல்லும் காலம் வருமா என ஏங்குதல்.
   பிறந்தநாள் கொண்டாட்டம்
   அபிஷேக ஆராதனை
   ஐயரிடம் சொல்லுதல்
5. கணக்கப்பிள்ளையின் திருட்டு
6. ஏழையின் துயரம்-இழப்பு

2. பூபதியின் ஒருநாள் அலுவல்

1. செல்வந்தர் வாழ்வு- பெண்கள் பழக்கம்-மது அருந்துதல்- ஆடம்பரங்கள்.
2. உழைக்காமல் உல்லாசமாய் இருப்போரைச் சாடுதல் ஆலைத் தொழிலாளர்கள் வெறுத்தல்-சிலர் உழைப்புறிஞ்சி எனக் கூறுதல்.
3. சப்-கலெக்டர் (ஐயர்) பேச்சு - சப் - இன்ஸ்பெக்டர் (பார்ப்பனர் அல்லாதார்) அஞ்சாதவர்.
4. பிரெஞ்சுப்புரட்சி, ரஷ்யப்புரட்சி பற்றிய எண்ணம்.

3. *வழக்கு வாபஸ்*

1. ஏழைப்பணியாள் குற்றவாளி எனச் செல்வர் (செட்டி-யார்) குற்றம் சாட்டுதல்.
2. பாவ புண்ணியம், புராணங்கள், மூடநம்பிக்கைகள் ஆகியவற்றைச் சாடுதல்.
3. எதிர்த்தரப்பினர் சப்பைக்கட்டு கட்டுதல்.
4. அவர்களே படித்தவர்கள் திருந்தவேண்டும் என்றி பேசிக்கொள்ளுதல்.

4. *பேய் ஓடிப்போச்சு*

1. பூசாரி—மந்திரம்—நம்பிக்கை—பேய் ஓட்டல்.
2. கிராமத்தார் நல்லோர்; நகரத்தார் இழிந்தோர்—சினிமா டைரக்டர் (நகரத்தான்) ஏமாற்று.
3. கதைத்தலைவியின் அண்ணன் (கிராமத்தான்) ஏமாற்று வேலையைக் கண்டுபிடித்துச் சரிசெய்தல்.

5. *சோணாசலம்*

1. மிக நல்லவன், தயாளன்—வியாபாரம் படுத்துவிட அவன் துன்புறுதல். மருமகன் சீர்கேட்டல், மகள் தந்தை வீட்டிலேயே 3 ஆண்டுகள் வாழ்தல்.
2. (வலிப்பு வந்த) ஒரு பெண்ணுக்கு உதவுதல்.
3. செயினைத் திருடுதல்.
4. இன்னொருவன் மீது பழிவிழுதல்.

6. *பலாபலன்*

1. ஜோசியம், ஜாதகம் கேலி செய்தல்.
2. ஆங்கில வைத்தியரையும் கேலி செய்தல்.
3. கடன் கவலை தீர்ந்ததும் காய்ச்சல் போயிற்று.

7. *சமூகசேவகி சாருபாலா*

1. பணக்கார ஐயர், மனைவி, மகள், வீடு வருணனை
2. சமூகசேவை—போலி
3. ஏழைகளுக்கு இரங்கல்

8. சூதாடி

1. முதலியார், ஐயர் இருவரின் டிரைவர்களும் சீட்டு ஆடுதல் (ஏழைகள் சிறு தவறிழைத்தல்).
2. ஐயரும் இன்னோர் ஐயரும் ஷேர் பற்றிப் பேசுதல், முதலியாரை ஏமாற்றியது பற்றி முன்னவர் கூறுதல் (செல்வர், ஐயர் பெரிய தவறிழைத்தல்).
3. ஐயர் டிரைவரைக் கண்டித்தல்.
4. தொழிலாளி முதலாளியிடம் அடங்கிப் போக வேண்டியுள்ளது என்ற குமுறல்.

9. சொல்லாதது

1. ஏழைப்பெண் அழகி—பணக்காரன் விரும்புதல்.
2. பணக்காரன் ஏமாற்றுதல்—பெண் கருவுறுதல்—வேறு பெண்ணை மணத்தல்.
3. பணக்காரன் (மாமனார்) செல்வம் அழிதல்.
4. ஏழை (கதைத்தலைவியின் தந்தை) பணக்காரன் ஆதல்
5. ஏமாற்றியவன் மீண்டும் காதலியின் கரம்பிடித்தல்.

10. காமக்குரங்கு

1. வயதான மிராசுதார்—இளம்பெண் திருமணம்.
2. இரவு விருந்து நாடகத்தில் மிராசுதார் பெண் வேடமிட்ட ஆணை (பெண் என்று எண்ணி) அடைய விரும்புதல்.
3. அவன் புதுப்பெண்ணிடம் தஞ்சம் புகுதல்.
4. அவள் ஆண் என்றறிந்து அவனோடும் தந்தையோடும் கதைத்தலைவி மிராசுதாரை விட்டு நீங்குதல்.

மேலே கண்ட கதைக்கூறுகளை இனி வாய்பாட்டு முறையில் பிரித்துக்காணுதல் வேண்டும்.

| ஏழைகள் மீது | பணக்காரர் மீது |
|---|---|
| அன்பு | வெறுப்பு |
| குடிசை | வைரமாலை, பொன்னிறமேனி |
| உழைப்பு | பிறந்தநாள் கொண்டாட்டம் |

| | |
|---|---|
| தரகர், முதலாளி இல்லை | பெண்கள், விலைமாதர் பழக்கம் |
| உழைப்பவனுக்கு நிலம் சொந்தம் | மது அருந்துதல் |
| ஏழையின் துயரம் | ஆங்கில வைத்தியம் |
| உழைக்காதவரைத் தொழிலாளர் வெறுத்தல் | சமூகசேவை போலித்தனமானது |
| சிறு தவறிழைத்தல் | பெருந் தவறிழைத்தல் |
| அழகு வாய்ந்தோர் | ஏழைப்பெண்களை ஏமாற்றுதல் |
| ஏழை பணக்காரன் ஆதல் | (வயதான) மிராசுதாரின் பொருந்தா மணம் |
| துணிவான முடிவு எடுத்தல் | மனைவிக்குத் துரோகம் |

| | |
|---|---|
| *பார்ப்பனர் மீது சீற்றம்* | *பார்ப்பனர் அல்லாதார் மீது அன்பு* |
| அபிஷேக ஆராதனை | (சப்—இன்ஸ்பெக்டர்) அஞ்சாதவர் |
| சப்—கலெக்டர் செருக்கு | புறத்தோற்றம்—சிறப்பு (மீசை) |
| பாவபுண்ணியம், புராணங்கள் மூடநம்பிக்கைகள் ஆகியவற்றைச் சாடுதல் | |
| ஜோசியம், ஜாதகம் } கேலி | |
| ஐயர்—மனைவி தாசர் | |

| | |
|---|---|
| *கிராம மக்கள்* | *நகர மக்கள்* |
| நல்லோர் | தீயோர் |
| பூசாரி, மந்திரத்தில் நம்பிக்கை கொண்டோர் (எளியோர்) | ஏமாற்றுவோர் |

இக்கட்டுரையின் முதற்பகுதியில் அண்ணாவின் உயர்பண்புகள், பார்ப்பனர் எதிர்ப்புணர்வு உட்பிரிவுகளாகத்

கம்பராமாயணம், புராணங்கள் ஆகியவற்றை எதிர்த்தல்), போன்றவற்றை இங்கு நினைவூகூர்தல் வேண்டும்.

சிறந்த திறனாய்வாளர்களாகிய சுந்தரராஜன் (சிட்டி), சிவபாதசுந்தரம் ஆகியோர் ''சமுதாயத்தில் பெரிய மனிதர்களென்று வேடம்போட்டுத் திரியும் தீயவர்களின் இயல்பை சி.என். அண்ணாதுரையின் ரங்கோன்ராதா திரை விளக்கிக் காண்பிக்கிறது. இத்தகைய பெரிய மனிதர்களின் ஆதிக்கத்துக்குட்பட்ட சமுதாயத்தை நேர்மை மனப்பான்மை கொண்ட தனிமனிதன் எதிர்க்கும் நிலையில் சிந்திக்கும் இடையூறுகளையும் அண்ணாதுரை ரசமான கதைப்போக்கில் காண்பிக்கிறார்'' என்றும்,

''அண்ணாதுரையின் அடுக்குச்சொல் நிறைந்த அலங்கார நடையும் புராண இதிகாசங்களிலிருந்து அவர் பல முரண்பாடுகளை எடுத்துக்காட்டுவதும் கதையின் பிரச்சாரத் தொனிக்கு அழுத்தம் கொடுக்கின்றன.'' என்றும் கூறுதல் மிகப் பொருத்தமானது (சுந்தரராஜன் பெ.கோ. (சிட்டி), சிவபாதசுந்தரம், சோ.,1977 : 213, 214).

அறிஞர் மு.வ.வும் அறிஞர் அண்ணா படைத்தளித்துள்ள சிறுகதைகள், அவருடைய நாடகங்கள் போலவே ஆற்றல்மிக்க நடையில் அமைந்தவை. ராஜாதி ராஜா, பேய் ஓடிப்போச்சு, செவ்வாழை, சொர்க்கத்தில் நரகம், பிடிசாம்பல் முதலான சிறுகதைகள் புதிய கற்பனைச் செல்வங்கள். அவருடைய படைப்புகள் சமுதாய நலத்திலும் சீர்திருத்தத்திலும் அவருக்கு இருந்த ஆர்வத்தை விளக்குவன (வரதராசன், மு. 1978 : 306) என்றும்.

''சமுதாயத்தில் உள்ள சாதி வேறுபாடு, பொருளாதார ஏற்றத்தாழ்வு முதலியவற்றின் கொடுமைகளை விளக்கும் நாடகங்கள் இயற்றப்பட்டன. கண்ணீர்த்துளி, வேலைக்காரி, ஓர் இரவு, சந்திரமோகன், நீதிதேவன் மயக்கம் முதலான நாடகங்கள் சிறந்த நோக்குடன் அறிஞர் அண்ணாதுரையால் இயற்றப்-

பட்டவை. அவர் நாடகங்களில் கையாண்ட உரைநடை புதுமை-யானது. சிந்தனையைக் கிளறுவது, சமுதாயத்தின் இருண்ட பகுதிகளை - மேல்மட்டத்தில் உள்ளவர்களின் வாழ்க்கையின் ஊழல்களை - மறைக்காமல் பலரும் கண்டு சிரிக்கும் வகையில் வெளிப்படுத்திச் சீர்திருத்தக் கருத்துக்களுக்கு நாடகங்களை நன்கு பயன்படுத்தியவர் அவர். அவர் எழுதிய நாடகங்களில் அவரே திறம்பட நடித்து மகிழ்ந்தவர்; பல நாடகக் குழுக்-களையும், கலைஞர்களையும், எழுத்தாளர்களையும் இத்துறையில் ஊக்கமூட்டிப் போற்றி வளர்த்தவர் (வரதராசன், மு. 1978 : 283) என்றும்,

''கடிதம் எழுதும் வடிவில் பல அருமையான கருத்துகளை விளக்கி நூல்களாகத் தரும் எழுத்தாளர்களும் தமிழ் இலக்கிய வளர்ச்சிக்குத் துணைபுரிந்துள்ளனர். அறிஞர் அண்ணா, மு வரதராசன் முதலானவர்களின் நூல்கள் இவ்வகையில் மக்க-ளிடையே நன்கு பரவியவை அறிஞர் அண்ணாதுரை தமிழ்நாட்-டின் பழம்பெருமைகளையும் இன்றைய அரசியல் சிக்கல்களையும் கடிதநூல்களாகத் தந்துள்ளார். அவருடைய நடை விறுவிறுப்-பும் ஆற்றலும் வாய்ந்தது; உள்ளத்தின் ஆர்வத்தைப் புலப்படுத்-துவது'' என்றும் கூறுதலைக் காண்கையில் அறிஞர்கள் பார்வை-யில் அண்ணாவின் செல்வர்கள் பற்றிய எண்ணங்கள், புராண இதிகாச எதிர்ப்பு, சமுதாய நலம், சீர்திருத்தம் ஆகியவற்றில் ஆர்வம், சாதி வேறுபாடு, பொருளாதார ஏற்றத்தாழ்வு முதலிய-வற்றின் கொடுமைகளை உணர்ந்து மனதில் கொண்ட வெறுப்பு மேல்மட்டத்தில் உள்ளவர்கள் வாழ்க்கையில் உள்ள ஊழல்கள் மீது வெறுப்பு போன்ற செய்திகள் சிறப்பிடம் பெற்றுள்ளன எனலாம்.

சுருங்கக் கூறின் அண்ணாவின் சமூகக் கதைகளில் கதைக் கூறன்களாக, ஏழை-பணக்காரன், பார்ப்பனர்-பார்ப்பனர் அல்லாதார், கிராமமக்கள்-நகரமக்கள் ஆகிய பிரிவினரின் செய்தி-களும் மாற்றுக் கதைக்கூறன்களாக ஏழை, பார்ப்பனரல்லாதார், கிராம மக்கள் ஆகியோரின் நற்குணங்கள், அழகு, கள்ளமின்மை போன்ற பண்புகள் பல்வேறு முறைகளில் வெளிப்படுதலும்

பணக்காரர், பார்ப்பனர், நகரமக்கள் ஆகியோரின் நேர்மாறான பண்புகள் பல்வேறு முறைகளில் வெளிப்படுதலும் தெளிவாகப் புலப்படுகிறது.

இவ்வாய்வு அண்ணாவின் 10 சமூகக் கதைகளின் அடியாக அமைந்தது என்றாலும் அவர் எழுதிய பிற சமூகக் கதைகளிலும் மேற்கூறப்பெற்ற கதைக் கூறுகளும் மாற்றுக் கதைக்கூறுகளும்-தாம் பெரும்பாலும் அமைந்திருக்கும் என நம்பலாம். இத்தகைய எண்ணங்கள் அவர் நெஞ்சில் ஆழப் பதிந்துள்ளமையால் அவர் சமூகக் கதைகளில் ஆணித்தரமாகவும் தவிர்க்க முடியாமலும் அவை வெளிப்படுகின்றன.

## துணைநூற் பட்டியல்

1. அண்ணாதுரை, சி.என்., ஆரியமாயை, திராவிடப் பண்ணை, திருச்சி, பதினாறாம் பதிப்பு 1981.

2. அண்ணாதுரை, சி.என்., தம்பிக்கு அண்ணாவின் கடிதங்கள், பாரி நிலையம், சென்னை 1974

3. அண்ணாதுரை, சி.என். தீ பரவட்டும், திராவிடப்பண்ணை திருச்சி, ஏழாம் பதிப்பு 1969.

4. ஆறுமுகம், ப., அண்ணாவின் பொங்கல் வாழ்த்துரை இலக்கியம், பூம்புகார் பதிப்பகம், சென்னை, 1968.

5. ஆறுமுகம் ப., அண்ணாவின் இறுதி வாழ்த்துரை, பூம்புகார் பதிப்பகம், சென்னை, 1969.

6. சண்முகம், ப.உ., அண்ணாவுடன் 62 நாட்கள், புதுமைப் பிரசுரம், சென்னை, மூன்றாம் பதிப்பு 1975.

7. சுந்தரராஜன், பெ. கோ. (சிட்டி), சிவபாதசுந்தரம், சோ., தமிழ் நாவல் நூற்றாண்டு வரலாறும் வளர்ச்சியும், கிறிஸ்தவ இலக்கிய சங்கம், சென்னை, 1977.

8. பரிமளம் (தொ.ஆ.) அண்ணாவின் சிறுகதைகள், பரிமளம் பதிப்பகம், சென்னை. 1969.

9. வரதராசன், மு., தமிழ் இலக்கிய வரலாறு, சாகித்திய அகாதெமி, புதுதில்லி, மூன்றாம் பதிப்பு, 1978.

10. Richard M. Dorson, Folklore and Folklife, University of Chicago Press, Chicago, 1972.

# அண்ணாவின் சிறுகதைகள் காட்டும் சமூகம்

சு. வேங்கடராமன்

அறிஞர் அண்ணா திராவிட இயக்கத்தில், பெரியாரின் பாசறையில் வளர்ந்து, பின்னர் திராவிட முன்னேற்றக் கழகம் கட்சியை உருவாக்கித் தமிழக அரசின் ஆளுங்கட்சியாக ஆக்கி, முதல்வர் ஆனவர். அடிநாட்களில் திராவிட இயக்கத்தில் இருந்த நாட்கள் தொட்டு அவர் சிறுகதைகளை இயக்க இதழ்களில் எழுதிவந்தார் அக்கதைகள், பின்னர் பல்வேறு தொகுப்புகளாக வெளிவந்தன. ஒரு தொகுப்பில் இடம்பெற்ற கதைகள் வேறு தொகுப்புக்களில் அதே பெயரிலும் வேறு பெயரிலும் இடம் பெற்றன. அண்ணாவின் சிறுகதைகள் என்ற பெயரில் ஒரே தொகுப்பாக, 1969 ஆம் ஆண்டில் பரிமளம் பதிப்பக வெளியீடாக வந்த தொகுப்பில் உள்ள 25 கதைகளும், பித்தளையல்ல பொன்னேதான் (1965) தொகுப்பிலுள்ள 12 கதைகளும், சிறுகதைகள் (1947) என்ற தொகுப்பிலுள்ள 3 கதைகளும், செவ்வாழை (1980) என்ற தொகுப்பில் உள்ள ரு கதையும் தனித்தனியான 4 கதைகளும் சேர்ந்து மொத்தம் 45 சிறுகதைகளை அடிப்படையாகக் கொண்டு இக்கட்டுரை அமைகிறது. தம்முடைய அரசியல் இயக்கத்தின் பிரச்சார சாதனமான இதழ்களில் அவர் இச்சிறுகதைகளை எழுதியுள்ளார். சமூகநோக்கத்தை மையமிட்டு பகுத்தறிவு நோக்கில் அவர் கதைகளைப் படைத்துள்ளார். எனவே, இப்பின்னணியிலே அவருடைய கதைகளை நாம் ஆராயவேண்டும். மேற்குறிப்பிட்ட கதைகளுள் புராண வரலாற்றுக்கதைப் பின்னணியில் எழுதப்பட்டுள்ள தஞ்சை வீழ்ச்சி, துணைநடிகை, பிடிசாம்பல், திருமலை கண்ட திவ்யஜோதி, புலிநகம், சொர்க்கத்தில் நரகம் ஆகிய கதைகள் 6) இவ்வாய்வில் விவாதத்திற்கு உட்படுத்தப்படவில்லை. அவை சமூகக் கதைகளாக அமையாததால் அவை விடப்பட்டுள்ளன. கதைகள் காட்டும் சமூகம், அதன் கட்டமைப்பு, அவற்றைக் காட்டும் முறையின் வழி புலனாகும் அண்ணாவின் சமுதாய உணர்வு என்பனவற்றை எடுத்துரைப்பதே இதன் நோக்கமாகும். அவருடைய அரசியல் சமூக இயக்கச் சார்பு இந்த வெளிப்பாட்டிற்கு அடித்தளமாகின்றது என்பதும் சுட்டப்படும்.

### சமூக அமைப்பு

அண்ணாவின் இக்கதைகளில் காட்டப்படும் சமூக அமைப்பில் சாதிவேறுபாடு, பொருளாதார வேறுபாட்டால் வரும் வர்க்க முரண்பாடு, பெண்ணடிமை நிலை காணப்படுகின்றன. கிராம வாழ்க்கை, நகர வாழ்க்கை இரண்டும் கதைக்களனாக உள்ளன நில உடைமையாளர்களான செல்வர்கள், வணிகர்கள், அரசு அலுவலகங்களில் பணிபுரியும் ஊழியர்கள், நகரங்களில் வாழ்ந்து கொண்டு கிராமங்களில் நிலஉடைமையாளர்களாக உள்ள புதுப்பணக்காரர்கள், கிராமங்களில் வாழும் ஜமீன்தார்கள், ஏழை உழைப்பாளிகள் ஆகியோரை அவர் கதைகளில் படைத்துள்ளார். செல்வந்தர்களைப் படைத்து உள்ள முறையிலே ஒரேபடித்தான அச்சுவார்ப்பு முறை காணப்படுகிறது. அவர்களைப் படைத்துள்ள உருவாக்க முறையில் ஒரேபடித்தான அச்சுவார்ப்பு முறை காணப்படுவதற்குக் காரணம் ஏதும் உண்டா? என்று காண வேண்டும். தனநல வேட்கை, மிதமிஞ்சிய போகவாழ்க்கை, ஒழுக்கமின்மை, மனிதநேயமற்ற பண்பு, ஏழை எளிய மக்களை இம்சைப்படுத்தித் துன்பங்கண்டு சுவைக்கும் மனவக்கிரம் என்பன போன்ற பண்பு நலன்களின் மொத்த உருவங்களாகச் செல்வந்தர்கள் படைக்கப்பட்டுள்ளனர் இப்பாங்கு ஒரே படித்தாக அனேகமாகப் பெரும்பாலான கதைகளில் வருகின்றது. 'ராஜாதிராஜாவில்' பண்ணையாரான முதலியார், 'சொல்வதை எழுதேண்டா' கதையில் வரும் திவான் பகதூர் தீர்த்தகிரி முதலியார். 'தேடியது வக்கீலை' கதை சொக்கலிங்கம் செட்டியார், 'குமரிக்கோட்டம்' குழந்தைவேல் செட்டியார், 'செவ்வப்பிள்ளை' கதையில் வரும் சீமான், 'செவ்வாழை' கதை பரந்தாம முதலியார், போன்ற படைப்புக்கள் இதற்குச் சான்றாகும் 'சொல்வதை எழுதேண்டா' சிறுகதையில் சீமான் தீர்த்தகிரி முதலியாரின் பண்புகள் சுட்டப்படுகின்றன கடிதம் எழுதும் பையனுக்கு ராகவாசாரியார் சொல்வதாக. ''முதலியார் அவர்களுக்குச் சர்வமங்களானி இஷ்டசித்திரஸ்து'' என்று கூறினார் ராகவாசாரியார். மண்டு எழுதிக் கொண்டிருக்கையில் ''அவன் இஷ்டம் என்ன தெரியுமோ? ஊர்த்தாலியை அறுக்கணும் திவான் பகதூர் முதலியார் என்றால் தேசமே நடுங்கவேணும் கவர்னர் பங்களாவை விலைக்கு வாங்கணும். இப்படி எல்லாமிருக்கும்'' என்று வருணித்தார் (அண்ணாவின் சிறுகதைகள் ப 76,) ''சீ கழுதை அடக்க ஒடுக்கத்தைப் பார். இங்கே பண்ணையில் ஒன்றும் கொட்டிக் கிடக்கவில்லை முதலியார் பண்ணையில் திருடர்களுக்கு

ஒன்றும் வேலை கிடையாது. என்னெதிரே நிற்காதே, ஓடிப்போ. மறுபடியும் இந்தப்பக்கம் வந்தால் தோலை உரிச்சுடுவேன் என்று வேலையாளை ஏசும் பண்ணையார் ராஜாதி ராஜா கதையில் இடம் பெறுகிறார். கொஞ்சமும் ஈவு இரக்கமின்றி ஏழைச் செங்கோடனின் வீட்டுச் செவ்வாழைக் குலையிலிருந்து, "சரிடா அதிலேதான் இரண்டு சீப்பு..." என்று தன்னலத்திற்காக வாங்கச் சம்மதிக்கிறார் செவ்வாழை கதையில் பண்ணையார். இவர்கள் யாவரும் ஒரேபடித்தான அச்சு வார்ப்பாக உள்ளனர். செல்வத்திலே மேல்தட்டிலே உள்ள அதிகாரமிக்க வர்க்கத்தினர் இவர்கள். பணக்கார முதலாளி தன்னிடம் வேலைபார்க்கும் பணியாளை, வேலைக்காரனை அடித்து ஒடுக்குகிறான். அவனுடைய நியாயமான கோரிக்கையை, சம்பள உயர்வை ஏற்காததுடன் அவனைத் தண்டிக்கிறான் என்பதை 'தழும்புகள்', 'பொங்கல்பரிசு' ஆகிய கதைகளில் காட்டுகிறார் அண்ணா. ஏழைச் சிறுவன், ஓட்டலில் மாவு அரைக்கிறவன் மாவில் பல்லிவிழுந்தது கண்டு அதையும் சேர்த்து அரைப்பது கண்டு உண்ண வரும் மக்கள் நலன் கருதி உண்மையைக் கூறுகிறான். அதற்காக அந்த ஓட்டல் முதலாளி அச்சிறுவனை விறகுக்கட்டையால் அடித்து நொறுக்குவதைத் 'தழும்புகள்' சிறுகதை காட்டும். இக்கதைகளில சித்திரிக்கப்படும் பல்வேறு தரத்திலுள்ள பொருளாதாரக் கட்டுமான அமைப்பில் மேல்தட்டில் உள்ளோர்கள் தங்களுக்குக் கீழ் மிகவும் தாழ்ந்த நிலையிலுள்ளோரை அடக்கி ஒடுக்குவதில் ஒரே தன்மையினராகவே இருப்பதை அண்ணா காட்டியுள்ளார்.

இக்கதைகளில் இடம்பெறும் ஏழை எளியவர்கள், உழைப்பாளர்கள், தொழிலாளர்கள், கடைப்பணியாளர்கள் அனைவரும் மேல்தட்டு வர்க்கத்தினரின் ஆதிக்கப் போக்கிற்கும் ஒடுக்குமுறைகளுக்கும் கொடுமைகளுக்கும் அஞ்சி அடங்கிப் போகின்றவர்களாக உள்ளனர். அதிகார மையத்தை ஏற்று, அதை எந்தவித எதிர்ப்பும் காட்டாமல், உள்வாங்கி, செரித்து வாழும் வாயில்லாப் பூச்சிகளாகவே பெரும்பாலான கதைகளில் இவர்களைப் படைத்துள்ளார். 'தழும்புகள்' கதையில் வரும் மாகாளி ஒருவன் மட்டுமே ஆதிக்கப்போக்கை எதிர்த்து நிற்பவனாக, போராடும் குணம் கொண்டவனாகப் படைக்கப்பட்டுள்ளான். அக்கிரமம், அநீதி எங்கு நடப்பினும் அதை எதிர்த்துநின்று போராடி, தான் துன்பப்படினும் மானமிழக்காமல் மாகாளி

துன்பத்தைப் பொறுத்துக்கொண்டு எதிர்த்து நிற்கிறான் என்பதை இக்கதை மீண்டும் மீண்டும் காட்டுகிறது. சமத்துவம் வேண்டிப் போராடும் இப்பண்பு, மெய்யான பகுத்தறிவின் அடிப்படை நோக்கம் ஆகும். அண்ணாவின் சிறுகதைகளில், 'தழும்புகள்' மாகாளி ஒருவன் மட்டுமே அத்தகைய பகுத்தறிவு உடைய, அநீதிகளை எதிர்த்துப் போராடும் ஒருவனாக உழைப்பாளர் வர்க்கத்தில் படைக்கப்பட்டுள்ளான். ஏனைய சிறுகதைகளில் வரும் ஏழை மக்கள் அடிமட்டத்து உழைப்பாளர்கள், செல்வந்தர்களின் ஆதிக்கத்தை அப்படியே ஏற்றுக்கொண்டு வாழக் காரணம், நம் சமூக அமைப்பிலுள்ள பொறுத்துப்போகும், இதுதான் நமக்கிடப்பட்ட வாழ்க்கை நியதி என அமைதிகாணும் அடங்கிப்போகும் கீழ்வர்க்கக் குணமாகத் தொடர்ந்து காட்டப்படும் இலக்கியநியதி. ஆளும் ஆதிக்க வர்க்கத்தின் அதிகார மையத்தை நிலைநாட்டவும் அதன் வீச்சுக்களைப் பரவலாக்கவும் இலக்கியப் படைப்பாளர்கள் இவ்வாறு காட்டுவது மரபு. அந்தப் போக்கிலே, அதே வழித்தடத்திலே அண்ணாவின் படைப்புக்களும் செல்கின்றன. ''இழுத்து வந்தது தலைவிதிதான்! இல்லை சாமி பார்க்காம'' (ப.21) என்று 'ராஜாதி ராஜா' கதையில் வரும் மாரியும், 'செவ்வாழை' கதையில் ''கேட்பவர் பண்ணைப் பரந்தாமர். எவ்வளவு அல்பண்டா, வாழைக்குலையை அவர் வாய் திறந்து, உன்னை ஒரு பொருட்டாக மதித்துக் கேட்டனுப்பினால், முடியாது என்று சொல்லிவிட்டாயே! அவருடைய உப்பைத் தின்று பிழைக்கிறவனுக்கு இவ்வளவு நன்றிகெட்ட தனமா? கேவலம் ஒரு வாழைக்குலை! அவருடைய அந்தஸ்துக்கு இது ஒரு பிரமாதமா?'' (ப.167) என்று சிந்திக்கும் செங்கோடனின் கூற்றும் இதை வலியுறுத்தும். அவர் காட்டும் சமூக அமைப்பில் ஒடுக்கப்பட்ட ஏழைகளாக உள்ளவர்களில் 'தழும்புகள்' கதையில் வரும் மாகாளி செயல் மூலம் எதிர்ப்பைக் காட்டுகிறான். ''அக்ரமத்தை எதிர்த்து நின்றேன். என் கடமையைச் செய்தேன். அவ்வளவுதான். அந்த மிராசுதாரன் இனி இவ்விதமான அக்ரமம் செய்ய எண்ணும் போதெல்லாம் என் நினைவல்லவா வரும், அவன் மனக் கண்முன்பு நான் தெரிவேனல்லவா அவ்வளவுதான் என்னால் முடிந்தது.'' (பித்தளையல்ல பொன்னேதான், ப. 139) எனவும் ''நீ ஏழை என்பதை மறந்து, மனிதன் நீதி, நியாயத்துக்காகப் பாடுபடவேண்டியவன். அக்ரமத்துக்கு அடிபணியாமலிருக்க

வேண்டியவன்'' என்றும் மாகாளி பிறரிடம் தன் செயலை - எதிர்த்து நின்று போராடிய பண்பை எடுத்துக் கூறுகிறான். தன் செயலை நியாயப்படுத்துவதற்காகப் பேசும் பேச்சல்ல இது மற்றவர்களும் இவ்வாறு ஊக்கம் பெற்று அநீதியை எதிர்த்து நிற்கப் போராடவேண்டும் என அவன் எண்ணிப் பேசு- கிறான் பிறரைச் செயற்பட இது தூண்டும் என அவன் எண்-ணுகிறான். மிராசுதாரரிடம் மாகாளி, ''பணம் தவிர வேறு என்ன இருக்கிறது உன்னிடம். கொடுக்க பணம் இருக்குது, என்ன பாவம் வேணுமனாலும் செய்து தப்பித்துக் கொளளலாம என்ற நெஞ் சழுததம் '' என்று கூறி அவருடைய தவறான செயலுக்கு உடந்தையாகாமல் எதிர்த்து நின்று நியாயத்துக்குப் போராடு-கிறான். தீமையைத் துணிவுடன் எதிர்த்து நின்று போராடும் குணமுடைய அடிமட்டத்து ஏழை மனிதனாக செயற்பாடு மிக்க ஒருவனாக இவன் படைக்கப்பட்டுள்ளான்.

'செல்லப்பிள்ளை' சிறுகதையில், வேலைக்காரன் குப்பன் தன் முதலாளி தன்முன்னாலே, தன் மனைவியைப் பற்றித் தரக் குறைவாகப் பேசுவதைக் கேட்டுப் பொறுக்கமுடியாமல், அவர் போனபின் அவருடைய நண்பரான படித்தவனிடம் சொல்லால் தன் எதிர்ப்பைக் காட்டுகிறான். ''கழுதே நாயேன்னு ஆயிரம் தடவை திட்டினாக்கூட பரவாயில்லைய்யா, அந்த ஆள் என்ன-தான் பணத்திமிரு இருந்தாலும் எவ்வளவு தலை இறக்கமா பேசினான் அநத மனுஷன். சோத்துக்காக உழைககிறதுக்காக இந்த உடலை ஒப்புவிச்சேன், மான ஈனத்தைக் கூடவாய்யா? (ப. 100) என்று கூறுகிறான். இக்கதையில் எதிர்ப்பு எனபது, முதலாளி இல்லாதபோது அவன் நண்பனிடம சொல் அளவில் வெளிப்படுகிறது. மேலும், அச்சொல் அளவிலான எதிர்ப்புக்கூட தீர்த்துப்போகிறது, கதை இறுதியில் முதலாளியின் மனைவி ஒழுக்கக்கேடானவள் என்பதைக் காட்டும் குரூரமான பழி வாங்கும் மனநிறைவு மூலமாக முதலாளியின் பேச்சை அவன் முன்னால் எதிர்க்காமல் அடங்கியிருப்பவனாகவே அவன் காட்டப்-படுகிறான். அவன் பேச்சில், ''என்னமோ வேலைசெய்து புழைக்-கிறோம். வயித்துக்காக எங்க அப்பன் ஜமீன்தாரனா, நான் குடித்துவிட்டுக் கூத்தி வீடுபோக'' என்ற (பக். 99—100) வரும் இடத்தில் ஏழை - செல்வந்தன் நிலை காட்டப்படுகிறது செல்வச்சீமான் ஒழுக்கக் கேடனாக உள்ளான் என்றும், அவன்

மனைவி அவனுக்குத் (கணவனுக்கு) தெரியாமல் கள்ளக் காதலனுடன் தொடர்பு கொண்டு ஒழுக்கக் கேடுள்ளவளாக உள்ளாள் என்றும் செல்லப்பிள்ளை, சுடுமூஞ்சி, குமரிக்கோட்டம், காமக்குரங்கு ஆகிய கதைகளில் சுட்டப்படுகிறது சமூக அமைப்பில் மேல்தட்டு வர்க்கத்தினருக்கு அவமதிப்புகள் எதுவுமே இல்லை என்று இதன்வழி அண்ணா காட்டுகிறார்.

அடிப்படையில், பொருளாதார வேறுபாடுமிக்க சமூக அமைப்பைக் காட்டும் அண்ணா, மேல்தட்டுச் செல்வந்தர்களை ஒரேபடித்தான அச்சுவார்ப்பினராகக் காட்டியுள்ளார். கதைகளைப் படிக்கும் வாசகர்களிடம் செல்வந்தர்கள் மீது வெறுப்பு ஏற்படுமாறு, அவர்களை வகைமாதிரி மாந்தர்களாக (typical character), ஒருபடித்தான (stero type) மாந்தர்களாக அவர் படைத்துள்ளார் திரைப்படம், நாடகம், பத்திரிகைக் கதைகள் என்ற தொடர்பு சாதனங்களில் வரும் படைப்புக்களில் மேல்தட்டு-வர்க்கத்தாரைக் காட்டும் வாய்பாடு அமைப்பாக (formula) இவை உள்ளன. மாறாக, நடப்பியல்நெறி சார்ந்த வகை வேறுபாடு (variety) மிக்க மனிதர்களாக இவர்கள் படைக்கப்படவில்லை. ஆனால், அந்த நேரத்தில், ஆதிக்க சக்திகளான இச்செல்வந்தர்களின் அடக்குமுறைக்கு ஆளாகி அல்லல்படும் ஏழை மக்களை இச்சமூகக் கட்டமைப்பை மாற்ற, எதிர்த்து நின்று போராடுபவர்களாகப் படைக்கவில்லை; அடங்கிப் போகிறவர்களாகவே படைத்துள்ளார். சமத்துவம், சகோதரத்துவம் ஆகியவைகளுக்கு எதிரான தீமைகள் அனைத்தையும் எதிர்ப்பதும், தீமைகளை எதிர்த்துச் சொல், செயல், எண்ணம் ஆகிய மூன்று நிலைகளிலும் எதிர்ப்பதும் பகுத்தறிவு என்று விளக்குவர். அச்ச உணர்வினின்றும் ஆதிக்கத்திலிருந்தும் மனிதனை விடுவிப்பது பகுத்தறிவின் செயல் என்பர். அந்த அளவுகோல்களில் பார்த்தால், சமூக அமைப்பில், பொருளாதார வேறுபாடு—வர்க்க அமைப்பில் காணப்படும் முரண்பாடு — குறித்த தெளிவான நோக்கு இக்கதைகளில் இடம்பெறவில்லை. பகுத்தறிவு நோக்கில், பொருளாதார வேறுபாடு மிக்க சமூக அமைப்பு விமர்சிக்கப்படவில்லை. இது மேலும் ஆய்விற்குரியது.

*சாதி அமைப்பு*

அண்ணாவின் சிறுகதைகளில் காணப்படும் மற்றொரு சமூகக் கட்டமைப்பு சாதி பற்றியது. இந்திய சமூகக் கட்டமைப்

பில் சாதி அடிப்படை மேலாதிக்கம் செலுத்துகிறது. ஏறுமுக வரிசையில் உள்ள மேற்சாதியினர், கீழுள்ள சாதியினரை ஒடுக்கி ஆதிக்கம் செலுத்துவது காலங்காலமாக உள்ளது. நீதிககட்சி, திராவிடக் கட்சிகள் யாவும் இந்த அமைப்பை மாற்றி சமத்துவம் ஏற்பட வேண்டும் எனப் பகுத்தறிவுக் கோட்பாட்டு அடிப்படையில் சமுதாய மறுமலர்ச்சியை முன்வைத்தன. சமத்துவமும் மேற்சாதியினரின் ஆதிக்கப்போக்கை முற்றுமாக எதிர்ப்பதும் இந்தச் சமூக மறுமலர்ச்சியாளர்களின் முதன்மைப்பணி ஆயிற்று. இதன் வெளிப்பாடாக, பிராமண எதிர்ப்பு - சாதிகளின் ஏறுமுக வரிசையில் மிக முன்னேறிய ஆதிக்க வகுப்பினராக அந்தணர்கள் இருந்தனர் என்பதால் அதை எதிர்த்துப் பிராமணர் அல்லாதார் இயக்கமாக உருவான வரலாற்றுப் பின்னணியை அறியவேண்டும், அந்தநோக்கில் பிராமணர்களின் ஆதிக்கப் போக்கை எதிர்ப்பது என்பது இந்தச் சமூக மறுமலர்ச்சியாளர்களின் முதன்மை நோக்கமாக இருந்தது இந்த அடிப்படையில் அண்ணாவின் சிறுகதைகள் காட்டும் சமூக அமைப்பைக் காணவேண்டும்.

அண்ணாவின் சிறுகதைகளில் சாதி அமைப்பு என்ற நோக்கில் பார்க்கையில் பிராமணர், முதலியார், செட்டியார் என்ற இனத்தவர் மீண்டும் மீண்டும் சுட்டப்படுகின்றனர். நகரம், கிராமம் இரு பின்னணிகளிலும் இவர்கள் காட்டப்பாடுகின்றனர். சமூகக் கட்டமைப்பில் மேல் இருந்து ஆதிக்கம் செலுத்தும் உயர்சாதியினராக இவர்கள் காட்டப்படுகின்றனர். அனைவரிலும் மேலான நிலையில் உள்ள பிராமணர்கள் பற்றியும் அவர்களால் உருவாக்கப்பட்ட சடங்குகளால் ஆன இந்து சமயம், புராணங்கள், கோயில் வழிபாடு ஆகிய அனைத்தையும் எதிர்மறையாக விமர்சிக்கும் மரபே பகுத்தறிவு என்று இச்சிறுகதைகளில் காட்டப்படுகிறது. எதிலும் இரு பக்கங்கள் இருக்கும் என்ற அடிப்படைத் தருக்கநெறிக்கு மாறுபட்டு, இக்கருத்தாக்கங்கள் இக்கதைகளில் முன்வைக்கப்படுகின்றன. 'காமக்குரங்கு' கதையில் வரும் மகாலிங்க ஐயர், வேதாந்தம் ஆகியோர் படைப்பில் அவர்களைத் தன்னலம் மிக்கவர்களாக, சூதுவாது நிறைந்தவர்களாக, பல்வேறு இழிபண்புகளுடன் காட்டுகிறார் 'சுடுமூஞ்சி' கதையில் வரும் ஐயர்சோதிடம் பார்ப்பதில் வல்லவர், ஆறு-

முக முதலியாரின் பேச்சைக் கேட்டு, பெண்ணின் ஜாதகத்தை பிறந்த நட்சத்திரத்தையே மாற்றிப் புதிது கணித்து, காதலர்களைப் பிரிக்கும் இழிசெயல் செய்கிறார். 'ராஜாதி ராஜா' கதையில் வரும் குருக்கள் ஐயர், அக்ரகாரத்திற்குள் வந்து; தேங்காயைத் திருடிவிட்டான் என்று கூறி, வேலையாள் மாரியை ஊர் அம்பலக்காரனைக் கொண்டு தண்டிக்கிறார். மாரி கூறுவதைக் கேட்க, உண்மை எதுவென அறிய, நியாயம் வழங்க அவர் முன்வரவில்லை. 'சொல்வதை எழுதேண்டா' சிறுகதையில் வரும் ராகவாசாரியார், முதலியாரை ஏமாற்றிப் பணம் கறக்க முயல்பவராகவும், பொய், சூதுமிக்கவராகவும், உள்ளொன்று வைத்துப் புறம் ஒன்று பேசுபவராகவும், தன்னலம் மிக்கவராகவும் படைக்கப்பட்டுள்ளார். "நான் சொன்னா அவன் ஆசை எல்லாம் சித்தி ஆகிவிடறதோ?" அவனுக்கு அதனாலே இலாபம் அந்த வார்த்தையைச் சொல்றதாலே நமக்கு நஷ்டம் என்ன? சும்மா எழுதி அனுப்பினா, பய பல்லிளிப்பன், வேறே என்ன எழுது... தீர்த்தகிரி முதலி கொஞ்ச முன்கோபி. வள்ளுன்னு விழுவன் சட்டை செய்யாம கொஞ்ச நேரம் இருந்தா, பணத்தை தந்துவிடுவன். பக்குவமா பேசணும். முகஸ்துதியிலே ரொம்பப் பிரியம்' பெரியகர்மி. இருந்தாலும் நம்மிடம் பணம் தருவதற்கு மறுக்கமாட்டான் (பக்.47,50-51)என்று சமயத்துக்கு ஏற்பப் பேசுவதாக அவரைக் காட்டுமிடத்தில் சுய நலவாதியாக அவரைக்காட்டுகிறார். குமரிக்கோட்டம் சிறுகதையில் குழந்தைவேல் செட்டியார் முதலில் பக்திமானாக—சநாதன தருமத்தைப் பாதுகாக்க—கோயில் கட்டுபவராக இருக்கையில் அவருக்கு உறுதுணையாக நிற்கும் மறையூர் அந்தணர்கள், அச்செட்டியார் தாம் கெடுத்த கீழ்ச்சாதிப் பெண்ணைத் தாமே கலப்பு மணம் செய்துகொள்ளவும், ஆலயக்கட்டிடத்தைச் சுயமரியாதைச் சங்கமாக மாற்றவும் முன்வந்தார். அதுகண்ட அந்தணர்கள் கோபம் கொண்டு இரவில் கூலிமக்களும் தாழ்த்தப்பட்டவர்களும் வசித்த குடிசைகளுக்குத் தீயிட்டனர் என்று காட்டுகிறார். எந்தப் பழிச்செயலையும் செய்யும் கொடுமையாளர்களாக அவர்களைப் படைத்துள்ளார். 'பலாபலன்' கதையில் வரும் சோதிடம் பார்க்கும் குப்பையர், காசு. சேர்ப்பதிலே கருத்து உடையவராக, தன்னலவாதியாக அதே நேரத்தில் கேட்டார் பிணிக்குஞ் சொல் கூறும் வல்லவராக உள்ளார் என்று அண்ணா காட்டுகிறார். "இந்தக் காலத்திலே; கிரக சஞ்சாரத்தைப் பற்றிய

ஞானமே இல்லாதவாளெல்லாம் பலகையை வைத்துப் பார்ப்பது-குருவியைக் கேட்பது என்று ஏதேதோ பொய்யும் புரட்டும் செய்து பணத்தைத் தேடுரா. நான் அப்படியா'' (ப. 143) என்று கூறி, சம்பந்தா சம்பந்தம்,பலாபலன், பார்வை தீட்சண்யம்,கிரஹ சஞ்சாரம் - இவைகளை எல்லாம் விளக்கிவிட்டு, கமலம்மாள் கொடுத்த சில்லறையைக் கணக்குப் பார்த்து, முடிந்து கொண்டு, ஜோதிடர் குப்பையர் வீடு போனார். (ப 144) என்பதில், பிறரை ஏமாற்றிப் பொய் பேசி, காசு பறிப்பவராகச் சோதிடம் கூறும் அந்தணரைப் படைத்துள்ளார். 'சூதாடி' சிறுகதையில் வரும் முத்துச்சாமி ஐயர்,ஏமாற்றுக்காரராகவும், தன்னலம் மிக்கவராகவும், சூதுவாது நிறைந்தவராகவும்; அப்பாவியான பார்த்தசாரதி முதலியாரைப் பொய் சொல்லி ஏமாற்றுபவராகவும் தான் சூதாடியாக இருப்பதை வெளியில் தெரியாமல் மறைத்துக்கொண்டு தன்னுடைய கார் டிரைவர் மோசஸிடம் சீட்டு விளையாடும் சூதாட்டத்தைக் கண்டிக்கும் கபடவேடதாரியாகவும் படைக்கப்பட்டுள்ளனர். ''சூதாட்டத்தைக் கண்டிப்பவர் நடத்திய சூதாட்டத்தைப் பற்றி அவரே பெருமையாகச் சீனுவிடம் பேசியதை மோசஸ் கேட்டுக்கொண்டுதானே இருந்தான். இலாபச் சூதாட்டக்காரர். பொழுது போக்குக்காகவும் மனதிலே கொஞ்சம் கிளர்ச்சி வேண்டுமென்றும் சீட்டு ஆடுவதைச் சூதாட்டம் என்று சொன்னால் அவனுக்குக் கோபம் வராமலிருக்குமா?...ஆனால் அவன் பேசமுடியாதே.. ஊழியக்காரன்'' (பக். 185-186) என்று வரும் கார் டிரைவர் மோசஸின் எண்ணஓட்டம் ஐயரின் வேடதாரி நிலையைக் காட்டும். பொருளாதார நிலையில் கீழேயுள்ள ஊழியன், சீட்டுக்கட்டுக்களை வைத்துச் சீட்டாடுவதைச் சூதாட்டம் என்று கூறி அய்யர் அவனைக் கண்டித்து, அவனுக்கு அற உபதேசம் செய்கிறார் ''மூணு பசங்களுக்குத் தகப்பனாகி இருக்கிறே சூதாட்டத்தை விடமாட்டேன்றேயே. ஏண்டா, சூதாட்டப் புத்தி இருந்தா எப்படியடா உருப்பட முடியும்?'' என்று மறுபடியும் உபதேசம் செய்யலானார்'' ... மோசஸ்! ஒரு விஷயம்கேள், சூதாடி என்னடா சம்பாதிக்க முடியும். இல்லை. பணமே அதிலே கிடைக்கிறதுன்னே வைச்சிக்கோ சூதாடிப் பிழைக்கிறது ஒரு பிழைப்பாகுமா—மோசஸ்'' என்று ஐயர் சூதாட்டத்தின் தீமைகளை விவரிக்கலானார்'' (ப 185) என்ற முத்துசாமி ஐயரின் கூற்றில், ஆதிக்க உணர்வுமிக்க மேல்சாதியினரின, தன் கட்டுக்குள்

உள்ளவன் செய்யும் செயலைத்தான் கண்டிக்க உரிமையுடையவன் என்ற அதிகார குணம் வெளிப்படுகிறது. உபதேசம் செய்யும் அவர் அந்த உபதேசத்தின்படி நடக்கவில்லையே என்ற கோபம் அவனிடம் உள்ளது. ''அடிக்கடி மோட்டார் 'ஆரனை' உபயோகப்படுத்தித். தன் கோபத்தைப் போக்கிக்கொள்ள மோசஸ் முயன்றான்'' (ப. 185) என்பதிலும், ஆனால் ஊழியக்காரன், எப்படி முதலாளி முதல்தரமான சூதாட்டக்காரர், இஸ்பேட். கிளாவர் போன்ற சீட்டுக்களில் அல்ல, லட்சுமி ராஜ் - காமதேனு - காந்தா முதலிய ஷேர்களைச் சீட்டுக்களாகக் கொண்ட சூதாட்டக்காரர் என்ற உண்மையை எப்படிப் பேச முடியும்?'' (ப. 186) என்று வரும் மோசஸின் எண்ண ஓட்டத்திலும் காட்டும் போக்கு இதனைக் காட்டும். சொல்லும் செயலும் வேறுவேறான, பிளவுபட்ட ஆளுமை உடையவராக முத்துசாமி ஐயர் படைக்கப்பட்டுள்ளார். மேற்குறிப்பிட்ட கதைகளில் வரும் அந்தண மாந்தர்கள் யாவரும் தன்னலவாதிகளாகவும், ஏமாற்றுக்காரர்களாகவும் இருப்பதாகச் சித்திரிக்கப்பட்டுள்ளனர். அடிப்படையில், இவர்கள் இத்தகைய பண்பினர் என்ற ஒரேபடித்தான வார்ப்புமுறை மீண்டும் மீண்டும் பல கதைகளில் இடம் பெற்றுள்ளன. நீதிக்கட்சி, திராவிட இயக்கம் என்பவை மீண்டும் மீண்டும் முன்வைத்த பார்ப்பன எதிர்ப்பு என்ற கருத்தாக்கமே இப்படைப்பாக்க நெறிக்கு அடிப்படை. மாறாக, மனிதர்களின் நல்ல பண்புகள், தீய பண்புகள் ஆகிய இருபக்கங்களையும் காட்டும் படைப்பாக்க முறை இக்கதைகளில் காணப்படவில்லை. முன்னரே குறிப்பிட்டபடி, தம்முடைய சார்புக்கேற்றபடியும் கொள்கைப் பிரச்சாரமாகவும் இவ்வாறு படைத்துள்ளார்.

மேல் சாதியினரில் பார்ப்பனர் தவிர முதலியார், செட்டியார் பல கதைகளில் இடம் பெறுகின்றனர் ஓரிடத்தில் மிகக்கூர்மையான அண்ணாவின் படைப்புப் பார்வையுடன், சாதியமைப்பில் பெயரிடும் முறையைச் சுட்டுகிறார், போகிற போக்கில். ''தனபாலச் செட்டியாரின் தூரபந்து, குழந்தைவேலு முதலியார். செட்டியாருக்கு முதலியார் பந்துவா? என்ற சந்தேகம் பிறக்கும். விஷயம் இது 'செட்டியார்' என்று சில பகுதிகளில் வாழும் முதலியார்களுக்குப் பட்டம் உண்டு. தனபாலர் அந்த வகை'' (ப.9) என்று 'இரு பரம்பரைகள்' கதையில் வரும்

ஆசிரியர் கூற்று இதனைக் காட்டும். 'சுடுமூஞ்சி' கதையில் வரும் ஆறுமுக முதலியார், 'இரு பரம்பரைகள்' கதையில் வரும் குழந்தைவேலு முதலியாரின் மகன் அருமைநாதன், 'தேடியது வக்கீலை' கதையில் வரும் சொக்கலிங்கம் செட்டியார், 'குமரிக் கோட்டம்' சிறுகதையில் வரும் குழந்தைவேலு செட்டியார், ஆகியோர் அனைவரும் பெண்கள் மோகம் பிடித்து அலைபவர்களாகக் காட்டப்படுகின்றனர். இவர்களில் குமரிகோட்டம் குழந்தைவேலு செட்டியார் மட்டும் கட்டிடவேலைக்கு வந்த சிற்றாள் பெண்ணிடம்தகாதமுறையில் நடந்துகொண்டு,பின்னர் அவளைக் கலப்புமணம் செய்துகொள்ளும் கட்டாயத்திற்கு ஆளாகிறார். அக்கதையில்கூட அந்தச் சிற்றாள் பெண்குமரியின் சாதி பற்றிய குறிப்பு சுட்டப்படவில்லை. ''கூலி மக்களும் தாழ்த்தப்பட்டவர்களும் கலப்பு மணம் செய்து கொள்ளச் சம்மதித்த செட்டியாருக்குப் பட்டாளமானது கண்டு கோபமுற்று...'' (ப. 93) என்று மட்டும் குறிப்பு உள்ளது. இந்த ஒரு கதையில் மட்டுமே, உயர் சாதியினரான செட்டியார், தாம் முறைகேடாக நடந்துகொண்ட தாழ்ந்த இனப் பெண்ணான கூலி வேலை செய்யும் பெண்ணை நிர்ப்பந்தம் காரணமாகக் கலப்புமணம் செய்துகொண்ட நிகழ்வு இடம் பெறுகிறது. 'காமக்குரங்கு', 'தழும்புகள்' கதைகளில் சாதி குறிப்பிடப்படாமல் மிட்டாதார், மிராசுதாரர் என்று கூறப்படும் இரு மாந்தர் வருகின்றனர். இருவரும் முறைகேடான நடத்தையுள்ளவர்களாகக் காட்டப்பட்டு உள்ளனர். என்றாலும் கலப்புமணம் செய்யும் நிலைக்குப் போவதில்லை. தம்முடைய இன்ப நுகர்விற்குரிய காமக்கிழத்தியராகப் பெண்களைப் பயன்படுத்திக் கொள்பவர்களாகப் படைக்கப்பட்டு உள்ளனர். பார்ப்பனர் நீங்கிய ஏனைய உயர் சாதியினரை, மிதமிஞ்சிய செல்வவளம் உள்ளவர்கள், இன்பநுகர்வு வாழ்வில் நாட்ட மிக்கவர்கள் என்ற அடிப்படையில் காட்ட இவை படைக்கப்பட்டுள்ளன. பார்ப்பனர்களைக் காட்டிய அளவிற்கு ஏனைய உயர்சாதியினரைத் தீய பண்புகளின் வடிவங்களாக ஒரு பக்கத்தை மட்டும் காட்டும் படைப்பாக்க நெறியில் படைக்கவில்லை. 'சொல்வதை எழுதேண்டா' சிறுகதையில் ''தீர்த்தகிரி முதலி கொஞ்சம் முன்கோபி. வள்ளுன்னு விழுவன். சட்டை செய்யாம இருந்தா பணத்தைத் தந்து விடுவன். பக்குவமாகப் பேசணும் அவனிடம். முகஸ்துதியில் ரொம்பப் பிரியம். பெரிய கருமி. இருந்தாலும் நம்மிடம் பணம் தருவதற்கு மறுக்க

மாட்டான்'' (பக். 49-50) என்று வரும் பகுதியில் முதலியாரின் நல்ல பண்பும் தீய பண்பும் சேர்ந்தே காட்டப்படுகின்றன. பார்ப்பனரல்லாதார் இயக்க அரசியல் சார்பின் வெளிப்பாடாக இப்படைப்பாக்க நெறி மிக்க கவனத்துடன் பின்பற்றப்படுகிறது. வாசகர்களுக்கும், உயர்சாதியினரில் பார்ப்பனர் அல்லாத மற்றையோரின் நற்பண்புகளும் காட்டப்படுகின்றன. பெண்களிடம் இச்சையுடைய பண்பு மட்டுமே ஒழுக்கக்கேடு என மற்றவர்களால் குறை கூறப்பட்டாலும், செல்வத்தகுதி என்பதாகக் காட்டப்படுகிறது.

பார்ப்பனர், பார்ப்பனர் அல்லாத உயர்சாதியினர் தவிர்த்த சமூகக் கட்டமைப்பில் உள்ள தாழ்ந்த சாதியினர் - ஒடுக்கப்பட்ட மக்கள் கதைமாந்தர்களாகப் பெரும்பாலும் இக்கதைகளில் இடம் பெறவில்லை. 'ராஜாதி ராஜா' என்னும் சிறுகதையில் மாரி என்ற பண்ணை வேலையாள் மட்டும் விதிவிலக்கு. அவனும்கூட, முதலியாரின் பண்ணையில் வேலை செய்யும் ஏழை உழைப்பாளி என்பதே காட்டப்படுகிறது. ஓரிடத்தில் மட்டும் சுட்டப்படுகிறது. ''அக்ரகாரத்தின் மத்தியில் குருக்கள்சாமி வீட்டிற்கே வந்ததை உணர்ந்தான். அந்தப் பகுதிகளுக்கு அவன் அதிகம் வந்ததில்லை. எப்பொழுதாவது வீடுகட்ட, கிணறு வெட்ட, வைக்கோல் போர் அடிக்க அவன் வருவது வழக்கம். அதுவும் கொல்லைப் புறந்தான் வருவான், நடுத்தெருவில் அல்ல... எவ்வளவு திமிர் இருந்தா சேரிப்பயல் அக்கிரகாரத்துக்குள் அடியெடுத்து வைப்பே'' என்று ஐயர் அடுக்கிக்கொண்டே போனார் (பக். 20-21) என்று வரும் இடத்தில் மட்டும் மாரியின் சாதி அடையாளம் சுட்டப்படுகிறது. ஆனால், இக்கதையில் கூட வயிற்றுக்கு இல்லாத வறுமைச் சூழலில், வேலை அநியாயமாக மறுக்கப்பட்ட நிலையில் அவன் படும் துயரம் முதன்மையாகக் காட்டப்படுகிறது. அன்றி, சாதிப்பிரச்சினை எதுவும் கதையில் மையப்படுத்தப்படவில்லை. சமூகக் கட்டமைப்பில், உயர்சாதியினரின் ஆதிக்கம் காரணமாக ஒடுக்கப்பட்ட மக்களுக்கு வரும் இன்னல்கள் எந்த நிலையிலும் கதைகளில் சுட்டப்படவில்லை. சமத்துவம், சகோதரத்துவம் என்னும் நிலை பகுத்தறிவின் பொருள் என்ற அரசியல், சமூகக் கோட்பாடு இக்கதைகளில் வெளிப்படவில்லை. சமூகக் கட்டமைப்பில், உயர்சாதியினரில் காணப்படும் பார்ப்பனர், பார்ப்பனர்

அல்லாத இரு பிரிவினர் பற்றிய கருத்தாக்கங்களே இச்சிறு-கதைகளில் அண்ணாவால் முன்வைக்கப்பட்டுள்ளன,

பெண்கள்

சிறுகதைகளில் அண்ணா படைத்துள்ள பெண்கள், சார்பு நிலையில் உள்ளவர்களாக உள்ளனர். ஆண்களின் காதல், காம இச்சைக்கும் இன்ப நுகர்விற்குமுரியவர்களாகவே அவர்கள் படைக்கப்பட்டுள்ளனர். கல்வி கற்ற உயர்சாதி, மேல்வர்க்கப் பெண்கள் கூட இந்த வாய்பாட்டிற்குள்ளே அமைந்து விடுகின்றனர். பெண்களைக் கால் முதல் தலை முடிய வருணிக்கும் ஒருவித திட்டப்பாங்கு பல சிறுகதைகளில் காணப்படுகிறது. அதுவும் பச்சையான வருணனையாகப் பல இடங்களில் உள்ளது. படிக்-கும் வாசகர்களின் இன்ப உணர்விற்காக எழுத்தில் விலாவாரி-யாக வருணிக்கும் ஜனரஞ்சகப் பண்பாட்டை உருவாக்கிய தமிழ்ப் பத்திரிகைக் கலாச்சாரம் இங்கே அண்ணா கதைகளால் பங்களிக்கப்படுகிறது. "கட்டிலின் மீது அந்தக் கட்டழகி கண்களை மூடிக்கொண்டிருக்கும் நிலை. ஆனால், கன்னத்தில் அழகுக்குழி காணப்பட்டது. ஏதோ உள்ளூர ஒருவகையான சந்தோஷம். முகத்திலே பாண்ட்ஸ் ஸ்நோவும் பவுடரும். இலைப்பச்சை ஜார்ஜ்சேலை அதற்குப் பொருத்தமான ஜாக்கெட். சாருவை அந்தக் கோலத்தில், ஆயிரக்கணக்கான ஆண்டு-களாகக் கடுந்தவம் புரிந்துவரும் முனிவர்கள் கண்டாலே போதும் விசுவாமித்திரர் ஆகிவிடுவர். பாவம் டாக்டர் ரகுராமன் என்ன ஆவான்" (ப.189) என்று வரும் வருணனை திரைப்-படக்காட்சி போலக் கவர்ச்சிப் பதுமையாகக் காட்டும் முயற்சி-யாகும். சாருபாலா ரகுராமன் காதல் விளையாட்டு மிகவும் ஆபா-சமாக வருணிக்கப்படுகிறது 'சமூகசேவகி சாருபாலா, கதையில். இதேபோல, குமரிக்கோட்டம், செல்லப்பிள்ளை, சுடுமூஞ்சி, காமக் குரங்கு சிறுகதைகளில் வருணனை மிகவும் ஆபாசமாக உள்ளது. கல்வி கற்ற பெண்கள் செய்யும் சமூகசேவை, சமூகசேவகி சாரு-பாலா, இரு பரம்பரைகள் கதைகளில் கொச்சைப் படுத்தப்படு-கின்றது. உயர்குடிப் பெண்களால் பொழுதுபோக்கிற்கும் புகழ் ஈட்டுவதற்கும் விளம்பரத்திற்கும் செய்யப்படுவது சமூகசேவை என்று காட்டுகிறார் அண்ணா. செல்லப்பிள்ளை, சுடுமூஞ்சி, காமக்குரங்கு ஆகிய சிறுகதைகளில் பெண்கள், தம் கணவன்மார் களுக்குத் தெரியாமல் சோரம் போவதை விலாவாரியாக வருணிக்

கிறார். மேல்தட்டில் உள்ள செல்வமும் செல்வாக்கும் உள்ள உயர்சாதிப் பெண்கள், கணவன்மார்களை ஏமாற்றிப் பிறரிடம் கூடா ஒழுக்கம் உடையவர்களாக உள்ளனர் என்று காட்டு-கிறார் அண்ணா.

ஆணாதிக்கத்திற்கு ஆட்பட்டுள்ள பெண்கள் நிலைகளை அறிவியல் பூர்வமாக ஆராய்ந்து 1932-இல் குடியரசு இதழில் தலையங்கம் வாயிலாகவும் கட்டுரைகள் வாயிலாகவும் பெண் அடிமைத்தனத்தை ஆராய்ந்து, சமூக மறுமலர்ச்சிக்கு-பெண்ணுரிமைக்கு ஒளி கொடுத்தார் பெரியார். 1942 - இல் பெண் ஏன் அடிமையானாள் என்ற பெரியாரின் நூல் வெளிவந்துவிட்டது. பெரியாரின் பகுத்தறிவுப் பாசறையில் வளர்ந்த அண்ணா பெண்களைப் கவர்ச்சிப் பதுமைகளாக ஆணின் பாலுணர்விற்-குரிய பிம்பங்களாகப் பழைமையான பிற்போக்கான கண்-ணோட்டத்திலே படைத்துள்ளார். ஆண்-பெண் சமத்துவம் என்ற குரல் கொடுக்க வேண்டிய பகுத்தறிவு எழுத்து பழமைவாதத்தில் பெண்ணை நுகர்வுப் பொருளாகக் காட்டியுள்ளது. தமிழ்ச் சிறு-கதைகளில் சனரஞ்சகப் பண்பாட்டை உருவாக்கிய பத்திரிகைப் போக்கில் பெண்களை இவ்வாறு காட்டும் மாபு முதன்மையானது. அரசியல் மேடை, திரைப்படம், நாடகம், பத்திரிகை எழுத்து என்ற அனைத்துத் தொடர்பு ஊடகங்களிலும் சமத்துவம், சகோதரத்து-வத்திற்கு எதிரான ஆதிக்கம், அநீதி ஆகியவைகளை எதிர்க்-கும் பகுத்தறிவை வளர்க்க முழுமூச்சாக நின்றவர் அறிஞர் அண்ணா. அப்பணியில் ஒருபகுதியான அவருடைய சிறுகதை எழுத்துக்களில் மேல்சாதியினரின் ஆதிக்க நிலைகளைக் காட்டும் முயற்சி மேலோங்கியுள்ளது. அதில், பார்ப்பனரின் பண்புகளைப் படைக்கும்போது மீண்டும் மீண்டும் அவர்களின் தீய பண்புகள் மட்டுமே காட்டப்படுவது முதன்மைக் கூறாக உள்ளது. மருந்-துக்குக்கூட மறுபக்கம் காட்டப்படவில்லை. அவர்களை இவ்-வாறு காட்டுவதற்கு ஏற்ப புராணம், இதிகாசம், கோயில், வழி பாடு, சடங்குகள், சோதிடம் என்பனயாவும் பார்ப்பனர்களுடன் தொடர்புபடுத்தப்பட்டு மிகவும் கடும் கண்டனத்திற்கு உள்ளாக்-கப்படுவது துணைக்கூறாக உள்ளது. பொருளாதார மேல்தட்டு மக்களின் சில பண்புகள் பல்முறை காட்டப்பட்டு, அவர்கள் அனைவரும் தீயவர்கள் என்ற கருத்தாக்கம் முதன்மைக் கூறாக இடம் பெறுகிறது. ஆனால், பொருளாதாரச் சமத்துவம் ஏற்பட

வேண்டும் என்ற உணர்வோ, ஆதிக்கத்தை எதிர்த்துப் போராட வேண்டும் என்றஉணர்வோ ஒடுக்கப்பட்டவர்களிடம் உள்ளதாகக் காட்டப்படவில்லை. பெண்களைப் படைப்பதில் பழமைப்போக்கே காணப்படுகிறது. பெண்களை, சப்ரமஞ்சக் கட்டில்களுக்குரிய ஆண்களின் நுகர்வுப் பொருளாகக் காட்டும் ஆணாதிக்கப் பார்வையே உள்ளது. சிறுகதைகளில் காணப்படும் சமூகப்பார்வை இவ்வாறு ஒருசில நிலைகளில் மட்டுமே வெளிப்படும் பாங்கு மேலும் தொடர்ந்து பிற படைப்புக்களிலும் இணைத்து ஆராய்வதற்கு உரியது.

*துணை நூற் பட்டியல்*


1. அண்ணாதுரை, சிறுகதைகள், திராவிடப் பண்ணை, திருச்சி, 1980.
2. அண்ணாதுரை, பித்தளையல்ல பொன்னேதான், பூம்புகார் பிரசுரம், சென்னை, 1980.
3. அண்ணாதுரை, செவ்வாழை, பூம்புகார் பிரசுரம், சென்னை, 1980.
4. அண்ணாதுரை, அண்ணாவின் சிறுகதைகள், பரிமளம் பதிப்பகம், சென்னை, 1969.
5. சேது, இரா., அண்ணாவின் கதை இலக்கியம், பூம்புகார் பிரசுரம், சென்னை, 1983.
6. பரிமளம், கி.என்.ஏ., அறிஞர் அண்ணாவின் வாழ்வும் வாக்கும், அபிராமி பப்ளிகேஷன்ஸ், சென்னை, 1987.

# அண்ணாவின் வரலாற்றுச் சிறுகதைகள்

குளோரியா விக்டர்

*முன்னுரை*

அண்ணா ஒரு சிறந்த சமூக உணர்வு மிக்க படைப்பாளி என்பதை அவர் படைத்த இருநூற்றுக்கு மேற்பட்ட படைப்புகள் நமக்கு எடுத்துக் காட்டுகின்றன. இவர் புகாத எழுத்துத்துறை-கள் இல்லை என்று கூறுமளவிற்கு எல்லாத் துறையிலும் இவர் புலமை பெற்றவராய் விளங்கினார். சமூக விழிப்புணர்வே இவரது படைப்புக்களின் மையப்பொருளாய் அமைந்திருந்தது. இள-மையிலேயே சிறந்த சிந்தனையாளராய் விளங்கிய அவர் தமது பெரும்பான்மையான நேரத்தைப் படிப்பதிலேயே செலவிட்டார். இவரது இம்முயற்சியே 1934-இல் அரசியல் பொருளாதாரம், சரித்-திரம் முதலிய பாடங்களில் ஆனர்ஸ் பட்டம் பெறக் காரண-மாய் அமைந்தது. வீட்டிற்கோர் புத்தக சாலை என்ற இலட்-சியம் நாட்டுக்கோர் நல்ல நிலை ஏற்படச் செய்யவேண்டும் என்ற திட்டத்துக்கு அடிப்படை; ஒவ்வொரு வீடும் அடிப்படைத் தேவைகளுக்கு அடுத்த இடத்தினை புத்தகசாலை அமைப்ப-தற்கே கொடுக்க வேண்டும் (அண்ணாதுரை, 1980:17) போன்ற இவரது கருத்துக்கள் இவரது படிப்பார்வத்தினை எடுத்துக் காட்டச் சிறந்த சான்றுகளாய் அமைகின்றன.

இவரது படைப்புகளில் சிறுகதைகள் தனி இடத்தைப் பெறுகின்றன. இச்சிறுகதைகள் பல சமூகச் சீர்திருத்தக் கருத்-துக்களை எடுத்துக் கூறுவனவாகவும், சமூகச் சீர்கேடுகளைச் சாடுவனவாகவும் உள்ளன இவரது கதைகளுக்குக் களங்களாக கிராமங்களும், மிராசுதார்களின் பண்ணைகளும், ஜமீன்தார்களின் கோட்டைகளும் அமைகின்றன மேலும் இவர் தமிழக, உலக வரலாற்று நிகழ்ச்சிகளைத் தளமாகக் கொண்டும் கதைகளைப் படைத்துள்ளார். இயற்கையாகவே வாய்க்கப்பெற்ற படிப்பார்-வத்தின் காரணமாக இவர் பன்னாட்டு வரலாறுகளையும், நம் நாட்டு வரலாற்றினையும் தெளிவுறக் கற்றறிந்தார் இவ்வர-லாற்று நிகழ்வுகள் இவரது பல கதைகளுக்குத் தளமாய் அமைவு

கின்றன. இவர் உலக இந்திய வரலாறுகளைத் தழுவி எழுதிய ஏழு கதைகள் மட்டுமே இக்கட்டுரைக்கு முதன்மைச் சான்றுகளாய் அமைகின்றன. இவரது வரலாற்றுக் கதைகளில் புலிநகம், திருமலை கண்ட திவ்யஜோதி, பிடிசாம்பல், தஞ்சை வீழ்ச்சி என்ற நான்கு கதைகள் இந்திய-குறிப்பாகத் தமிழ் நாட்டு-வரலாற்று நிகழ்வுகளைச் சித்திரிப்பனவாகவும் இரும்பு முள்வேலி, இதயம் அரும்பானால் இரத்தம் சிந்திய இருபது ஆண்டுகள் போன்ற மூன்று கதைகள் மேலைநாட்டு வரலாறுகளைச் சுட்டுவனவாகவும் அமைந்துள்ளன.

*இந்திய, தமிழக வரலாற்றுக் கதைகள்*

இவர் பிறநாட்டு வரலாறுகளை, நிகழ்ச்சிகளைக் கூறும் பொழுது தான் அறிந்த, தான் கற்ற செய்திகளைத் தமது கருத்தோடு இணைத்து நிகழ்வுகளின் கோர்வையாகக் கூறிச்செல்கின்றார். ஆனால் நம்நாட்டு வரலாற்றினைக் கூறும் பொழுது இவரது உணர்ச்சி வேகத்தினை நாம் உணரமுடிகிறது. அனைத்து நிகழ்ச்சிகளையும் கோபம் பொங்க எடுத்துக் கூறுகின்றார். தமது நாடு, தமது சமூகத்தின் மீது இவர் கொண்ட பற்று சீர்கேடுகளைக் கண்டபொழுது கொதித்தெழும் மன உணர்வை இவருக்கு அளிக்கின்றது. நீதிக்கட்சியில் தொடங்கிய இவரது அரசியல் பயணம் திராவிட முன்னேற்றக்கழகமாகத் தொடருகின்றது.

இவர் தமிழக இந்திய வரலாறுகளில் தெளிவு பெற்றிருந்தார். தம்நாட்டு வரலாறுகளைச் சித்திரிக்கும் அனைத்துக் கதைகளிலும் உண்மையான வரலாறுகள் நமக்கு மறைக்கப்பட்டு விட்டன. பொய்யான செய்திகளையே நாம் வரலாறு என நம்பிக்கொண்டிருக்கின்றோம என்று கூறி உண்மையான நிகழ்ச்சியைக் கூறுவதாகக் கதையைக் கூறிச் செல்கின்றார். இங்ஙனம் நமது நாட்டு வரலாற்றினைத் தளமாகக் கொண்டே இக்கதைகள் அமைந்துள்ளன. 1943-இல் இவரால் எழுதப்பட்ட 'ஆரியமாயை' என்னும் நூலில் ஆரியர்களின் அடக்கு முறைகளைக் கூறுமிடத்து, தன் கருத்துக்களுக்குச் சான்றாகப் பதினாறு ஆங்கில இந்திய வரலாற்று நூல்களிலிருந்தும், எட்டுத் தமிழ் வரலாற்று நூல்களிலிருந்தும் மேற்கோள்கள் எடுத்துக் காட்டுகின்றார். சங்க இலக்கியங்களிலிருந்தும் தொல்காப்பியம் போன்ற

இலக்கண நூல்களிலிருந்தும் மேற்கோள்களை எடுத்துக்காட்டு-கின்றமை இவரது இந்திய நூலறிவிற்குச் சான்றாக அமை-கின்றது.

தமிழக வரலாற்றுக் கதைகளனைத்துமே இவரது பிராமணீய எதிர்ப்புணர்வையே வெளிப்படுத்துகின்றன. நமது நாட்டில் நடைபெற்ற ஒவ்வொரு அரசியல் சீரழிவிற்கும் மறைமுகமாக ஆரியர்களே காரணமாகின்றனர் என்று எடுத்துக்காட்டுகின்றார். ஆரியமாயை என்ற நூலில் ஒலிக்கும் ஆரிய எதிர்ப்புக்குரலே இச்சிறுகதைகளிலும் ஒலிக்கின்றது. புலிநகம் என்ற சிறுகதையில் வீரன் சிவாஜி முகமதிய மன்னனை வஞ்சகத்தால் கொல்லு-கிறான். இவ்வஞ்சகத்திற்கு உடந்தையாக அப்சல்கானின் தூது-வரான மறையவரே செயல்படுகிறார். இவ்வெற்றியின் மூலம் சிவாஜி மாவீரனாகக் கருதப்பட்டான். உண்மையிலேயே அவ-னுடைய வீரத்திற்குக் கிடைத்த வெற்றியன்று, வஞ்சகத்திற்குக் கிடைத்த வெற்றி என்ற உண்மை மறைக்கப்பட்டு விட்டது என்று மனம் புழுங்கும் விதத்தில் கதை அமைக்கப்பட்டுள்ளது. சிவாஜி தந்திரத்தால் அப்சல்கானைக் கொன்றான் என்பதை இந்திய வரலாறு என்னும் நூலில் டாக்டர் தங்கசாமி கூறுகின்றார். இச்-செய்தி உண்மையானது. இந்நிகழ்ச்சியை ஒரு பொறியாகக் கொண்டு இத் தந்திரச் செயலுக்குத் துணைநின்றவர்கள் பிரா-மணர்களே என்று தனது பிராமணீய எதிர்ப்புணர்வை வெளிப்படுத்துகிறார்.

''கோபிநாத் பண்டிட்ஜியும் கிருஷ்ணஜி பாஸ்கரும் சிவா-ஜியை வஞ்சனையில் ஈடுபடச்செய்து சதிச்செயல் புரிய வைத்து மறைக்க முடியாத பழியை மாவீரர் தலைவனுக்கு வாங்கித் தந்-தனர். அப்சல்கானை சிவாஜி அக்கிரமமாகக் கொன்ற வரலாற்-றுச் சம்பவத்தையே மக்கள் அறிவர்; பண்டிட்ஜீக்களைப் பற்றிக் கூறார். மக்களும் கதைதானே என்று எண்ணிக்கொண்டு வஞ்-சகர்களைக் கண்டுபிடிக்க முயல்வதில்லை. அப்சல்கானின் மர-ணம் புலிநகத்தால் என்று கூறுவதைவிட பூசுரனின் புன்னகை-யால் என்று கூறுவதே பொருந்தும்'' (அண்ணாதுரை, 1969 : 38) என்ற தனது கருத்தைக் கதைமுடிவில் கூறுகின்றார்.

'திருமலை கண்ட திவ்ய ஜோதி' என்னும் கதையில் திரு-மலை மன்னரது ஆசைக்குப் பலியான சுந்தரி என்னும் கோயில்

பட்டரது மகள் தற்கொலை புரிகிறாள். இந்நிகழ்ச்சியால் பாதிக்கப்பட்ட பட்டர் திருமலை மன்னனைக் கொல்ல தக்க தருணத்தை எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறார். இறுதியில் கிறித்தவ பாதிரிமார்களை ஆதரித்தான் என்ற காரணம் காட்டி வஞ்சகமாக மன்னனைக் கொன்றுவிடுகின்றனர். பின்னர் திருமலை மன்னன் ஜோதியோடு கலந்துவிட்டான் என்று நம்பும்படி செய்துவிடுகின்றனர். இதுவே கதை நிகழ்ச்சி.

இக்கதையில் அண்ணா அவர்கள் திருமலை மன்னருக்கோ-தற்கொலைபுரிந்த பட்டரது மகள்சுந்தரிக்கோ,பிறகதை நிகழ்ச்சிகளுக்கோ முக்கியத்துவம் கொடுத்ததாகத் தெரியவில்லை. ''என் மகள் மாரடைப்பால் சாகவில்லை, மாபாவி செய்த அக்கிரமத்தால் இறந்தாள். மன்னனை ஒழிக்கும் முன்பு என் மனம் சாந்தியடையாது. பாம்பாகி அவனைப் படுங்கி விடவேண்டும். நெருப்பாகி அவனைச் சுட்டுப பொசுக்கிட வேண்டும்'' (அண்ணாதுரை, 197 : 208) என்று கதையில் பல இடங்களில் எண்ணுவதாகக் கூறுகின்றார், பழிவாங்கும் நிகழ்ச்சிபோல் அமைந்தாலும் ஆசிரியர் தனது ஆரிய எதிர்ப்புணர்வை வெளிப்படுத்தவே இக் கதையைப் படைத்துள்ளார் என்று கூற வாய்ப்புள்ளது.

'திருமலை மன்னரின் இறுதிக்காலம் பற்றிப் பல செவிவழிச் செய்திகள் நிலவுகின்றன. அச்செய்திகளில் இதுவும் ஒன்று உண்மைநிகழ்ச்சியன்று என்று 'மதுரை நாயக்கர் வரலாறு' என்ற நூலில் அ.கி. பரந்தாமனார் (1961 : 233) கூறுகின்றார்.

''சிங்கம் இரை கிடைக்காது திகைத்தாலும் சிறுநரிக்கு எங்கேனும் ஏதேனும் இரை கிடைத்துவிடும். வீரர்கள வாழ்வு இழந்து தாழ்வு பெறுவர் வஞ்சகர்களோ எப்படியோ எதைச் செய்தோ வாழ வழி அமைத்துக கொள்வர். அரசர்கள் வாழ்வு, தாழ்வு எனனும் இரு நிலைகளிலும உருட்டப்படுவா. ஆனால் புரோகிதர் புன்னகையை இழந்ததில்லை. மன்னன் மாறுவான், மணிமுடி சிரம்மாறும். ஆனால அரசவையில ஜடா முடியின நிலை மாறாது'' (அண்ணாதுரை 19,69 : 321) என்ற முன்னுரையோடு 'வஞ்ச வீழ்ச்சி' என்ற சிறுகதையைத் தொடங்குகின்றார் 1673-ஆம் ஆண்டில் தஞ்சையை விஜயராகவன் என்ற மன்னன் ஆண்டு வருகின்றான். சொக்கநாத நாயக்கர் தஞ்சைமீது படை

எடுத்து தஞ்சையைத் தன் ஆட்சியின்கீழ் கொண்டுவருகின்றான். விசயராகவன் அந்தணர்களின் சொற்படி ஆட்சி நடத்தி வந்தவன். தங்கள் நிலையில் தாழ்வு ஏற்பட, அந்தணர்கள நாயக்கர்களின் ஆட்சியில் பிளவை ஏற்படுத்துகின்றனர். மராட்டியர்களிடம் தஞ்சையின் மீது படையெடுத்து வருமாறு வெங்கண்ணா என்ற வேதியன் இரகசியமாய் உடன்படிக்கை செய்கிறான். போரில் நாயக்கர்கள் தோற்கின்றனர். இதன் மூலம் தஞ்சை மராட்டியர் வசமாகிறது. பின்னரும் அந்தணர்களின் சதி தொடருகின்றது. வெங்கண்ணா என்ற வேதியரின் சூழ்ச்சிகளே கதை முழுக்க எடுத்துக்காட்டப்பட்டுள்ளன.

''அரசர்களை உண்டாக்க முடியும். ஆரியன் பிறக்க மட்டுமே முடியும் வெங்கண்ணா ஒரு வேதியன்; போர் வீரனா? என்று எண்ணி அல்லவா என் பேச்சைக் கேட்க மறுத்தாய். மூடனே நீ அறியாய். வெங்கண்ணா எந்தப் பரம்பரையைச் சேர்ந்தவன் என்பதை நீ அறியும்படிச் செய்கிறேன்'' (அண்ணாதுரை, 1969:363) என்று துணிவுடன் பேசி அரசியலில் விரும்பததகாத மாற்றங்களை உண்டுபண்ணுகிறார் வேதியர்.

இக்கதை சொக்கநாத நாயக்கர் தஞ்சையைக் கைப்பற்றிய நிகழ்ச்சியைச் சுற்றிப் பின்னப்பட்ட கற்பனைக் கதை என்பதை ஆசிரியரின் குறிப்பிலிருந்தே நாம் அறிந்துகொள்ள முடிகிறது. கதை முடிவில் தஞ்சையை வெங்காஜி என்ற மராட்டிய மன்னன் கைப்பற்றிக் கொள்வதாகக் கதையை முடிக்கிறார். ஆனால் டி. என். குன்ட்ரா (D.N. Kundra) அவர்களின் 'இந்திய வரலாறு' என்ற நூலில் குறிப்பிடப்பட்டுள்ள மராட்டிய மன்னர் வரிசையில் வெங்காஜி என்ற பெயர் இடம்பெறவில்லை.

'பிடிசாம்பல்' என்னும் அண்ணாவின் வரலாற்றுக் கதை மட்டும் மற்ற வரலாற்றுச் சிறுகதைகளினின்று வேறுபட்ட நோக்கத்தோடு படைக்கப்பட்டுள்ளதாக அறியமுடிகிறது. சாளுக்கிய நாட்டின் மீது பல்லவ மன்னன் போர் தொடுத்து வாதாபியைக் கைப்பற்றுகிறான். பல்லவ மன்னனுக்கு இவ்வெற்றி கிட்டக்காரணமாய் அமைந்தவர் பரஞ்ஜோதி என்ற படைத்தளபதி, இவர் சிவபக்தர். புகழ்பெற்ற பரஞ்ஜோதியால் வைணவததுக்கு அழிவு ஏற்பட்டுவிடும என்ற எண்ணத்தினைச் சாளுக்கியக் கைதி ஒருவன் தூண்டிவிடுகிறான். இதன் காரணமாக வைணவர்களால் மன்ன-

னின் மனமும் மாற்றப்படுகிறது. இறுதியில் பரஞ்ஜோதி சிவ-பக்தர்; அவர் சிவாலயத்துக்குச் செல்லுதலே முறை என்று முடிவு செய்த மன்னன் அவரைப் படைத்தளபதி பதவியைத் துறக்கச் செய்து சிவ மடாலயத்திற்கு அனுப்பி வைக்கிறான். இறுதியில் சாளுக்கியர்களிடம் பல்லவன் தோற்க வேண்டிய நிலை ஏற்படு-கிறது. பரஞ்ஜோதியை மன்னன் சைவன் என்ற காரணத்தைக் காட்டிப் பதவியிலிருந்து விலக்குகிறான் இ.தற்கு மூன்று காரணங்-கள் இருக்க வேண்டுமென்பது அண்ணாவின் கருத்து. 1. சாளுக்-கியர் தந்திரம். 2. சைவ - வைணவ ஆதிக்கப் போட்டி, 3. மன்-னனுக்கு ஏற்பட்ட இலேசான பொறாமை என்று ஆசிரியரே காரணத்தையும் கூறுகின்றார். இவர் தன்னுடைய கருத்துக்-களை மெய்ப்பிக்கும் விதத்தில் பெரியபுராணத்திலிருந்துபல மேற்-கோள் செய்யுள்களை எடுத்துக்காட்டுகின்றார்.

"போர்த் தொழிலைக் கடமையாகக் கொண்ட பரஞ்ஜோதி-யாருக்கு மட்டும் ஏன் மடாலயம் புக வேண்டுமென்று நிர்ப்-பந்திக்கப்பட்டது. இவை நீங்கள் சிந்திக்க வேண்டியவை. பிடி-சாம்பல் தீட்டியதின் நோக்கம் அதுதான்"(அண்ணாதுரை, 1969: 29)என்று ஆசிரியர் இக்கதையைத் தீட்டியதின் நோக்கத்தையும் கூறுகின்றார்.

*உலக வரலாறு சித்திரிப்பு*

மேலை நாட்டு வரலாற்றைத் தழுவி மூன்று கதைகள் படைக்கப்பட்டுள்ளன. பிறநாட்டு வரலாறுகள் கதை வடிவில் கூறப்படுகின்றன. இங்கிலாந்து, ஜெர்மன் நாடுகளிடையே நடை-பெற்ற போர், பிரெஞ்சுப் புரட்சி போன்றவை வரலாறாய் கூறப்-படுகின்றன. இரும்பு முள்வேலி என்ற சிறுகதையில் இங்கி-லாந்து, ஜெர்மனி நாடுகளுக்கிடையே நடந்த போரின் காரண-மாக மனித சமூகத்திற்கு ஏற்பட்ட இழப்புகளை எடுத்துக்காட்ட முனைகிறார். போர் ஒரு மனிதாபிமானமற்ற சட்டத்தின் அனு-மதியுடன், சமூகத்தின் ஒப்புதலுடன் நடத்தப்படும் ஒரு இழி-செயல் என்ற கருத்தை வலியுறுத்துகிறார். இனம் கடந்த, மொழி கடந்த, மதம் கடந்த ஒன்று உலகில் உண்டானால் அதுவே காதல் என்ற குரலே இக்கதையில் ஒங்கி ஒலிக்கின்றது.

"போர் மூண்டிடாதபோது எவை எவை வெறி என்று கருதப்படுமோ அவையாவும் போரின் போது போற்றப்படுவன-வாக ஆகிவிடுகின்றன" (அண்ணாதுரை, 1966 ; 26)

"போர்க் காலத்தில் கொல்லு, இல்லையேல் கொல்லப்படு-வாய் என்பதுதான் ஒப்புக்கொள்ளப்பட்ட இலக்கணம்—போரிடும் இருநாடுகளிலும்" என்ற கூற்றுகள் போர் பற்றிய அண்ணாவின் கருத்துக்களை நமக்கு எடுத்துகாட்டுகின்றன. ஏதோ ஓர் அரசியல் காரணத்திற்காகப் போர் நடத்தப்படுகின்றது. ஆனால் பிற நாட்டாரும் மனிதர்களே என்ற மனித நேயம் மறைந்து போகின்றது.

பிரிட்டிஷ் பெண்ணாகிய மோனா தனது தமையன் போர்க்-களத்தில் இறந்துபட்ட காரணத்தினால் பிரிட்டிஷ் படைவீரர்-கள் மீது தாங்கொண்ணா வெறுப்புக் கொள்கிறாள். கைதிகளான ஜெர்மானியப் போர் வீரர்களிடம் மனிதாபிமானமற்ற முறையில் நடந்து கொள்கின்றாள். படைவீரர்கள் தங்கள் கடமையைச் செய்தவர்கள்; காட்டுமிராண்டிகள் அல்ல என்ற தந்தையின் வாதத்திற்குச் செவிமடுக்காது பத்திரிகைச் செய்திகளுக்கு முக்கிய-துவம் கொடுக்கிறாள். தனது தந்தை சமாதானத்தை வழங்கும்-படி அவரை வேண்டிக் கொள்வது மோனாவுக்குப் பிடிக்க-வில்லை. ஜெர்மானியர்கள் கொலை வெறியர்கள். அவர்கள் பூண்டோடு அழிக்கப்பட வேண்டியவர்கள். மனிதத் தன்மை அற்றவர்கள் என்ற கருத்தில் உறுதியாக நிற்கின்றாள். இறு-தியில் ஜெர்மானியப் படைக் கைதியின் கனிவான பேச்சிலும் பார்வையிலும் அவர்களும் நம்மைப் போல மனிதர்களே என்ற மனத்தெளிவு பெறுகின்றாள். அப் படைவீரனிடம் இதயத்தைப் பறி கொடுக்கிறாள். இன, மொழி, மத வேறுபாடுகள் அனைத்தும் மறைகின்றன.

'வெறுப்புணர்ச்சி இயற்கையானது அல்ல மூட்டிவிடப்-படுவது. மனிதத் தன்மைதான் இயற்கையானது' என்ற அண்-ணாவின் கருத்து கதையோட்டம் முழுவதும் வெளிப்படு-கின்றது. காதல், மோனாவின் இதயத்தைச் செம்மைப் படுத்து-கின்றது. ஆனால் சமூகம் மோனாவைப் பழிக்கின்றது. துரோகி யான ஜெர்மானியனை மணந்துவிட்ட கொடுமைக்காரி என்று கூறி உமிழ்கின்றது. ஜெர்மனுக்கு ஓடிவிடலாம் என்று கருதி-னால் படைவீரனின் தாயார் பிரிட்டிஷ்காரியை மணந்த நீ ஒரு தேசத் துரோகி என்று கூறி அங்குச் செல்வதையும் தடுத்து விடு-கிறாள். இறுதியில் கடலே காதலர்களின் சங்கமமாய் முடிகிறது.

இக்கதையில் கதை நிகழ்ச்சி, மேலை நாட்டில் நடைபெறுவதாகக் கூறப்பட்டாலும், மேலைநாட்டுச் சூழலுக்கேற்றபடி கதை நிகழ்ச்சிகள் பின்னப்பட்டாலும் காதலும், மனித நேயமும்; சமூக மதிப்புக்களும் மானிடர் அனைவர்க்கும் பொதுவானவை என்ற கருத்துக்களே நிலைநிறுத்தப்படுகின்றன.

'இதயம் இரும்பானால்' என்னும் கதை இவரது வரலாற்றறிவிற்குச் சிறந்த எடுத்துக்காட்டாய் அமைகின்றது. பிரான்சு நாட்டில் மன்னராட்சி மறைந்து மக்களாட்சி குடி புகுந்த நிலையைத் தெளிவுற எடுத்துக் காட்டுகிறார். மன்னராட்சியில் மலிந்திருந்த கொடுமைகளும் சர்வாதிகார மனப்போக்குமே புரட்சிக்குக் காரணமாய் அமைந்தது என்று ஒவ்வொரு நிகழ்ச்சியையும் விரிததுரைக்கின்றார். இங்கு கதைக்கு முக்கியத்துவம் கொடுக்கப்படவில்லை. நிகழ்ச்சிகளின் தொகுப்பாகவே இக்கதை அமைகின்றது. இந்நிகழ்ச்சிகளின் இடை இடையே ரூசோ, வால்டேர் போன்ற அறிஞர்களின் பகுத்தறிவுக் கருத்துக்களை எடுத்தாள்கிறார்.

இவர் இங்கு நடைபெற்ற ஒவ்வொரு நிகழ்ச்சிகளின் வருடத்தையும் மாதத்தையும் தேதி உட்படக் கூறுவது இவரது நுண்ணறிவினைப் புலப்படுத்துகின்றது.

அன்பு, அறம், ஈவு, இரக்கம், பற்று, பாசம், பயம், பக்தி, தயவு, தாட்சண்யம் இவை போன்ற குணங்கள் கொண்ட பிரான்சு நாட்டு மக்கள் எப்படி இரத்த வெறிபிடித்து அலையும் நிலை அடைந்தனர். ஆட்டுக்குட்டிகள் போலக் கிடந்தார்களே, இவர்கள் எப்படி ஓநாய்களாக மாறினர். ''இவர்களது இதயம் எல்லாப் பண்புகளும் பூத்துக் குலுங்கும் இடமாகத்தான் இருந்தது. அக்கிரம அரசு அமைத்துக்கொண்டவர்கள். அந்த இதயத்திலிருந்த பண்புகள் வற்றிப்போகும் அளவுக்குக் கொடுமை புரிந்தனர். பச்சைக்கொடி இரும்பாகிவிட்டது'' (அண்ணாதுரை, 1969 : 112) என்று புரட்சிக்கான காரணத்தை வினாவிடை அமைப்பில் கூறி அக்காலகட்டத்தையே நம் கண்முன் கொண்டுவந்து நிறுத்துகிறார்.

இவர் தொண்ணூற்று ஆறு பக்கங்களில் பேரரசன் நெப்போலியனின் வரலாற்றை 'இரத்தம் பொங்கிய இருபது ஆண்டு

கள்' என்ற தலைப்பில் எடுத்துக் கூறுகின்றார் நெப்போலியனின் பிறப்பு முதல் இறப்பு வரையுள்ள அனைத்து நிகழ்வுகளையும் கூறியிருப்பது ஒரு வரலாற்று நூலைப்படிப்பதுபோன்றஉணர்வை வாசகர்களுக்கு ஏற்படுத்துகின்றது. நெப்போலியனின் வீர உரைகள் மற்றும் நூல்களிலிருந்தும் இவர் பல சான்றுகளை எடுத்துக் காட்டியுள்ளமைஇவரது பரந்துபட்ட வரலாற்றறிவுக்குச் சிறந்த சான்றாக அமைகின்றது.

இருபது ஆண்டுகள் இரத்தம் பொங்கிற்று. இணையில்லாத இந்தவீரன் நடத்திய போர்களினால் பலன் என்ன கண்டான்? தாயும் இல்லை, மனைவியும் மகனும் இல்லை. போரிட்டதாலே பொருளியல் வளம் பாழானது; போரிட்டு எல்லைகளை அழித்-தான், இயற்கையான எல்லைக்கோடு மீண்டும் அமைந்துவிட்டது. மண்டலங்களை அடிமை கொண்டான் ஆனால் அவை மடிந்து போய்விடவில்லை. சமயம் கிடைத்ததும் சீரமைப்பு பெற்றது. நாட்டுப்பற்று, இனப்பற்று,தேசிய உணர்ச்சி இவைகளை அழித்-தொழிக்க படைகளால் இயலாது. நெப்போலியன் போன்றவர்-கள் இருபதாண்டுகள் இரத்தம் பொங்கிடும் போர் நடத்தினாலும் இயற்கை நீதியை அழித்திட முடியாது.

கொள்வன கொண்டு, கொடுப்பன கொடுத்துக் கூட்டுப் பணியாற்றி, மனிதகுல ஏற்றத்துக்குப் பல நாடுகள் பணியாற்ற வேண்டுமேயன்றி வல்லரசு என் அரசு என்ற கொள்கை கொண்டு போரிடுவது இரத்தம் பொங்கிட வழிகாட்டுமேயன்றி நல்ல பய-னைத் தராது வையகம். நெப்போலியனைப் போல ஆற்றல் மிக்க-வனைக் கண்டதுமில்லை.அவன் நடத்திய இருபதாண்டுப் போரில் பொங்கிய அளவு இரத்தம் எப்போதும் பொங்கியதுமில்லை. அவ-னுடைய வீரம் பயனற்றுப்போனது. மாவீரன் நெப்போலியனின் வாழ்க்கை மனித குலத்திற்குக் காலம் காட்டும் ஒரு பயங்கர எச்-சரிக்கை என்று தனக்குக் கிடைத்த வரலாற்றறிவைத் தன் நாட்டு மக்களுக்கு நன்னெறி காட்டும் விதத்தில் பயன்படுத்துகின்றார்.

இவரது அனைத்துக் கதைகளும் சமூகத்தில் மலிந்துள்ள சமூகச் சீர்கேடுகளைச் சாடுவனவாகவும் கண்டிப்பனவாகவும் அமைந்துள்ளன. எல்லாத் தரப்பினரிடையேயும் உள்ள குறை-களைப் படம் பிடித்துக் காட்டுகிறார், மேல்தட்டு மக்கள் புரியும்

குறைச்செயல்களே பெரும்பான்மையான கதைகளில் வெளிக்கொணரப்படுகின்றன.

*முடிவுரை*

அண்ணாவினால் எழுதப்பட்ட தமிழக வரலாற்றுக் கதைகள் அனைத்தும் உண்மை வரலாற்றினைச் சுற்றி பின்னப்பட்ட கற்பனைக் கதைகள் என்று அறிய முடிகிறது. புலிநகம், திருமலை கண்ட திவ்யஜோதி, தஞ்சை வீழ்ச்சி என்ற மூன்று கதைகளும் பிராமணீய எதிர்ப்புணர்வை வெளிப்படுத்தும் நோக்கத்தோடு எழுதப்பட்டுள்ளன. இதற்கு இவர் சார்ந்திருந்த இயக்கமே காரணமாக அமைகின்றது. ஆரியமாயை என்ற நூல் இக்கருத்தை அரண்செய்வதாய் அமைகின்றது.

வரலாற்று நிகழ்ச்சிகளை இவர் தனது கருத்துக்களை வெளிப்படுத்தும் களமாகக் கொண்டுள்ளார். பிடிசாம்பல் என்ற வரலாற்றுக் கதை மட்டுமே பிற கதைகளினின்று வேறுபட்ட நோக்கத்தோடு படைக்கப்பட்டுள்ளது. உலக வரலாற்றினைச் சித்திரிக்கும் மூன்று கதைகளும் முறையே 1962, 1963, 1966-ஆம் ஆண்டுகளில் வெளிவந்தவை. இவை தமிழ் மக்களுக்குப் பிறநாட்டு வரலாற்றினை அறிமுகப்படுத்தும் விதத்திலும் வாசகர்களுக்குச் சமூக மதிப்புகளை அறிவுறுத்தும் நோக்கத்தோடும் படைக்கப்பட்டுள்ளன.

*பயன்பட்ட நூல்கள்*

1. அண்ணாதுரை, சி.என், இரும்பு முள் வேலி, பூம்புகார் பிரசுரம், 63, பிராட்வே, சென்னை—1. 1966.
2. அண்ணாதுரை, சி.என்., அண்ணாவின் ஆறு சிறு கதைகள், திராவிடப்பண்ணை, திருச்சி—2, 1971.
3. அண்ணாதுரை, சி.என்., செவ்வாழை, பூம்புகார் பிரசுரம், 63 பிராட்வே, சென்னை—1.
4. அண்ணாதுரை, சி.என்., அண்ணாவின் சிறுகதைகள், பரிமளம் பதிப்பகம், 9, அவென்யூ ரோடு, சென்னை—34, 1969.
5. அண்ணாதுரை, சி.என்., ஆரியமாயை, திராவிடப்பண்ணை, திருச்சி — 2, 1975.
6. அண்ணாதுரை, சி.என், அண்ணாவின் நவமணிகள், வானதி பதிப்பகம், தி நகர், சென்னை, 17, 1980.
7. பரந்தாமனார், அ. கி., மதுரை நாயக்கர் வரலாறு, பாரி நிலையம், 184 பிராட்வே, சென்னை—1, 1981.

# அண்ணாவின் வாய்மொழித் தொடர்பு

சிவ. சசிரேகா

நேருக்கு நேர் பார்த்து நேரடியாகத் தொடர்புகொள்ளக் கூடிய வாய்மொழித் தொடர்பிற்கு ஆதாரம் பேச்சுக்கலை. அது ஓர் உன்னதக் கலை; கற்றாரையும் கல்லாதவரையும் கவரவல்ல கலை.

''பேச்சு என்பது ஒரு கலை;
பேராற்றல் வாய்ந்தது;
முத்தொழில் புரியும்
வல்லமையும் வாய்ந்தது
பேச்சைக் கலையாக்குவது
அறிவுடைமை''

என்ற திரு.வி.க.வின் கருத்துக்கு (பரந்தாமனார், அ.கி., 1980:8) இலக்கணமாய்த் திகழ்ந்தவர் அண்ணா. அவர்தம் எழுச்சிமிக்க பேச்சாற்றலையும் எழுத்தாற்றலையும் நாட்டு மக்கள் நன்கறிவர். நயம் மிக்க உவமைகளும். நாட்டு முன்னேற்றத்திற்கான நற்கருத்துக்களும் அவர் உரையில் வெள்ளமெனப் பொங்கிவரும். பொது மேடை, அரசியல் மேடை, இலக்கிய மேடை, கலையுலக மேடை என எந்த வகை மேடையாயினும்' கோடையிடிபோல் முழக்கமிட்ட அண்ணாவின் பேச்சுக்கள் முறைப்படி அமைந்துள்ளமை அறிந்து, பெருமைகொள்ளத் தக்கதாகும். வாய்மொழித் தொடர்பில் — மேடைப் பேச்சில் — பெருநாவலராய்த் திகழ்ந்த அவர்தம் பேச்சுக்களுள் ''நூல் நிலையங்கள்'', ''அற நிலையங்கள்'', ''சொல்லும் பயனும்'', ''பொருள்'' எனும் தலைப்புக்களிலான 'அண்ணாவின் சொற்செல்வங்கள் மட்டும் இங்கு ஆய்விற்கு எடுத்துக் கொள்ளப்பட்டுள்ளன. இவை பொதுமக்கள், வியாபாரிகள் மற்றும் கல்லூரி மாணவர்கள் முன்னிலையில் நிகழ்த்தப்பெற்ற சொற்பொழிவுகள் ஆகும்.

*மேடைப் பேச்சு*

பேச எண்ணிய கருத்துக்களை ஒழுங்குபடுத்தி, முறையாக அமைத்துப் பொழிவதுதான் மேடைப் பேச்சு. இது காலங்காலமாய் இருந்து வருவது. பண்டைய பேச்சு வகைகள் வேறானவை; இன்றைய பேச்சு வகைகள் வேறானவை. அவையனைத்தையும் ஒன்று சேர்த்துப் பதினாறு வகைப்படுத்துகின்றார் அ.கி. பரந்தாமனார் (1980; 17-28). அவையாவன:

1. பாட்டு விளக்கம்
2. காலட்சேபம்
3. அறிவுரை
4. சொற்போர் (debate)
5. அரசியற் சொற்பொழிவு
6. இலக்கியச் சொற்பொழிவு
7. பொருட் சொற்பொழிவு
8. ஆராய்ச்சி சொற்பொழிவு
9. வரவேற்புரை
10. திறப்புரை
11. தலைமையுரை
12. வாழ்த்துரை
13. பாராட்டுரை
14. தீர்மானம் நிறைவேற்றுரை
15. இரங்கலுரை
16 நன்றியுரை

ஆய்விற்குட்பட்ட அண்ணாவின் பேச்சுக்கள் பொருட் சொற்பொழிவு (நூல் நிலையங்கள், அற நிலையங்கள்), ஆராய்ச்சிச் சொற்பொழிவு (சொல்லும் பயனும், பொருள்) எனும் இரு வகைகளைச் சேர்ந்தவையாகும்.

*பேசும் முறை*

மக்களாட்சியில் மேடைப் பேச்சு மாபெரும் கருவியாகிவிட்டது. ஆக்கவும் காக்கவும் அழிக்கவும் வல்லமை பெற்ற அற்புத சக்தியும் ஆகிவிட்டது. இதற்குப் பேசும் முறை இன்றியமையாதது. ''சொல்லும் கருத்துக்கள் தெளிவாக அழகான சொற்களில் தர்க்க முறைக்கு மாறுபடாது. அனுபவத்துடன் எடுத்துக் காட்டுகளோடு கேட்பவர் உள்ளத்தில் ஊடுருவுமாறு உணர்ச்சி தோன்ற, 'உண்மைதான் சொல்வது' என்று கேட்பவர் உணரும்படி பேச்சு அமைந்திருக்க வேண்டும். இப்படியிருப்பதுதான் சிறந்த பேச்சு'' (பரந்தாமனார், அ.கி; 1980, 48) என்று பேச்சின்

இலக்கணம் கூறும் அ.கி. பரந்தாமனார் மேடைப் பேச்சின் தொடக்கம், பொருள் விரித்தல் மற்றும் முடிவு இன்னவாறு அமைதல் வேண்டும் என்றும் விளக்கம் தந்துள்ளார். அதனை அப்படையாகக்கொண்டே அண்ணாவின் பேச்சுக்கள் இங்குப் பகுத்தாராயப்பட்டுள்ளன.

குறிப்பாக மேடைப் பேச்சுக்குத் தொடக்கம், முடிவு எனுமிவை அமையப் பேசும் முறையானது பேசும் பொருளை மக்கள் கேட்டுப் பயனடையச் செய்யும். பேசும் பொருளை ஒழுங்கு முறைக்குக் கட்டுப்படுத்தித் தொடக்கம், இடைப்பகுதி, முடிவு எனப் பகுத்துப் பேசுவதையே பேசும் முறை என்கிறோம் (பரந்தாமனார், அ.கி, 1980 : 53 ). பேச்சைத் தொடங்குவதற்கு முன்னர்ப் பேச்சாளர், தம் வாய்ச்சொற்களைக் கேட்கத் தம் முன்னிலையில் இருப்போரை விளித்துப் பேச்சைத் தொடங்கிட வேண்டும். அவ்வண்ணமே அண்ணா, "அன்புள்ள தலைவர் அவர்களே, தோழர்களே!" (அண்ணாதுரை, 1970:25) ; "அன்புள்ள தலைவர் அவர்களே, கல்லூரி முதல்வர் அவர்களே, பெரியோர்களே, தோழர்களே!" (அண்ணாதுரை, 1970 : 51)என்றவாறு விளித்துப் பின்னர் பேச்சைத் தொடங்கியுள்ளார்.

பேச்சின் தொடக்கம்

பேச்சாளர் தொடக்கத்திலேயே கேட்போரைத் தம் வசம் கவர்தல் வேண்டும்; அவர்களை ஒருமுகப்படுத்த வேண்டும். கேட்போர் கவனத்தைக் கவர்ந்து, முழுப் பேச்சையும் கேட்குமாறு தூண்டுவதற்கு,

1. நகைச்சுவைக் கதையுடன் பேச்சைத் தொடங்கலாம்.
2. பேசும் பொருளின் தலைப்பைக் குறிப்பிட்டு, அதில் அவையினர் கவனத்தை ஊடுருவச் செய்து, பேச்சைக் கவனிக்குமாறு செய்தல் ஒரு முறை.
3. ஒன்றைக் குறித்து ஆவலை எழுப்பி அதனைப் பின்பு கூறிப் பேச்சைத் தொடங்கலாம்.
4. ஓர் எடுத்துக்காட்டுத் தந்து அதனை ஆவலாகக் கேட்குமாறு கூறிப் பற்றை உண்டாக்கித் தொடங்கலாம்.
5. ஒரு கேள்வியை அவையில் கேட்டு, அதற்கு விடையை அவையினர் சிந்திக்குமாறு செய்து, பேச்சாளர் அவர்களைத்

தம்முடன் ஒத்துழைக்கும்படித் தூண்டிப் பேச்சைத் தொடங்கலாம்.

6. காட்சிக்கு ஒரு படத்தையோ வேறு ஒரு பொருளையோ காட்டி, அதனைப் பார்க்குமாறு செய்து, பேச்சில் ஆவலைத் தூண்டிப் பேச்சைத் தொடங்கலாம்.

7. மேற்கோளாக உரைநடை வாக்கியத்தையோ பாடலின் அடியையோ கூறி விளக்கிப் பேச்சைத் தொடங்குவதும் ஒரு முறையாகும்.

8. மலைக்கும்படியான ஒருசெய்தியைக்கூறிப் பேச்சைத்தொடங்கலாம்.

9. ஏதாயினும் ஒரு நிகழ்ச்சியைக் கூறிப் பேச்சைத் தொடங்குவதுமுண்டு.

10. பேசும் பொருளின் முக்கியமான தன்மையைக் கூறி அதனால் உண்டாகும் நன்மைகளைக் காட்டிப் பற்றுக்கொள்ளுமாறு செய்து பேச்சைத் தொடங்குவதும் ஒரு முறை.

11. கதை கூறிப் பேச்சைத் தொடங்குவதும் ஒரு முறை (பரந்தாமனார், அ.கி., 1980 : 59).

இவற்றுள் 2,4 மற்றும் 10-வது உத்திகளை அண்ணா கையாண்டுள்ளார். 19-2-48 அன்று தாம்பரம் கிறித்துவக் கல்லூரியின் தமிழ்ச் சங்க ஆண்டு விழாவில் பேச அண்ணா அழைக்கப்பட்டிருக்கின்றார். ஆனால், இன்ன பொருளில் பேச வேண்டுமென அவருக்குத் தலைப்புக் கொடுக்கப்படவில்லை. அவர் என்ன பேசப்போகின்றார் என்று கூடியிருந்தோர்க்குத் தெரியாது. இந்நிலையில், “தமிழ்ச் சங்கம் சார்பில் பேச வேண்டுமென்று இக் கல்லூரித் தோழர்கள் என்னைக் கேட்டார்களேயன்றி, இன்ன பொருளைப் பற்றித்தான் பேச வேண்டும் என்று கூறினார்களில்லை. அப்படித்தான் அவர்கள் இன்ன பொருளைப் பற்றிப் பேச வேண்டும் என்று எனக்குப் பணித்தாலும், ‘இவனுக்கு என்று அமைந்த ஒரு பொருளைப் பற்றி வற்புறுத்தாமல் இருக்கப் போகின்றானா’ என்ன? என்று அவர்கள் நினைத்திருப்பார்கள்; எனவேதான் அவர்கள் இன்ன பொருளைப்பற்றிப் பேசவேண்டும்

என்று கேட்காமலிருந்திருக்கலாம்; ஆகையினால் நான் 'பொருள்' என்பதைப் பற்றி இப்போது பேசுகிறேன்'' (அண்ணாதுரை, 1970 : 69—70) என்று மிகவும் நாசூக்காக, பேசும் பொருளின் தலைப்பைக் குறிப்பிட்டு, அவர் பேசவிருக்கும் 'பொருள்' என்னவாயிருக்கும்? எத்தன்மையது? என்ன பயன் விளைவிக்கும்? என்றெல்லாம் அவையினர் எண்ணி அவரது பேச்சைத் தொடர்ந்து கேட்க ஆர்வத்தைத் தூண்டியுள்ளார்.

எந்தவொரு செய்தியைச் சொன்னபோதும், அதற்கு ஓர் எடுத்துக்காட்டு தந்து விளக்கினாலே, அதற்குத் தனியொரு கவனம்தான் எனலாம். இவ்வகையிலேயே, வியாபாரிகள் முன்னிலையில் பேச நேர்ந்த அண்ணா அக் கூட்டத்தினரைச் சார்ந்த ஓர் எடுத்துக்காட்டினையே எடுத்தியம்பி அவர் பேச்சைத் தொடர்ந்து கேட்டுப் பயன்பெற வேண்டினார். "இந்த வட்டாரத்தில் இக்கூட்டம் கூட்டப்பட்டது எனக்கு மிக்க மகிழ்ச்சி அளிக்கின்றது. நீங்கள் வியாபாரிகள். ஆகவே இந்தப் பக்கத்திலே உங்களிடையில் கெட்டுப்போன சரக்கை, எவரும் வந்து விற்றுவிட்டுப் போய்விட முடியாது. ஒருவன் கொண்டுவந்த சரக்கை நிறுத்துப் பார்த்து, அது வியாபாரத்திற்குத் தேவையுள்ளதுதானா என்று பார்த்துத்தான் அதை வாங்குகின்றீர்கள். அதைப்போலவே, உங்களிடையே வந்து பேசப்படுபவைகள், உங்கள் காதுகளில் கேட்பவை அனைத்தையும் நீங்கள் நிறுத்துப் பார்த்து, சரியானவைகளை ஏற்க வேண்டும்'' (அண்ணாதுரை, 1970 : 25) என்றவாறு அவர் பேச்சைத் தொடங்கியுள்ளார்.

பேசவிருக்கும் பொருளின் முக்கியமான தன்மையையும், நன்மையையும் கூறிப் பேச்சைத் தொடங்கும் முறையினை அண்ணாவின் ''நூல் நிலையங்கள்'' என்ற பேச்சினில் காணமுடிகின்றது தமிழ்ப்பெரியார் திரு.வி.க. தலைமையில் பொதிகை நூல் நிலையத்தின் இரண்டாம் ஆண்டு நிறைவு விழாவின்போது அண்ணா நிகழ்த்திய சொற்பொழிவு இது. பழங்காலத்திலே நூல் நிலையங்கள் சரியாக நடத்தப்பெறவில்லை. இப்போது அறிவுத் தேக்கத்தை நீக்குவதற்காக நூல் நிலையம் துவக்கப்பட்டுள்ளது. நாம் காணாத ஒரு புத்தகத்தை நூல் நிலையத்திலே கண்டு எடுத்துவிட்டோமெனில் மனம் மகிழ்கின்றது. நூல் யாரோ ஒருவருடைய சிந்தனை அந்தச் சிந்தனையைத்தொகுத்துப் படிக்-

கிறோம். அதற்கு நூல் நிலையங்கள் உறு துணையாயிருக்கின்றன (அண்ணாதுரை, 1970 : 8-9). இங்ஙனம், ஆய்விற்குட்பட்ட அண்ணாவின் பேச்சுக்களின் தொடக்கம் அ.கி. பரந்தாமனார் குறிப்பிட்டுள்ளவற்றுள் யாதானும் ஒருவகையில் கேட்போர் மனம் கவர்ந்து பேச்சைத் தொடர்ந்து கேட்கச்செய்யும் வண்ணம் அமைந்துள்ளது. ஆனால், ''சொல்லும் பயனும்'' பற்றிய பேச்சில் மட்டும் இவ்வகைத் தொடக்கம் அமையவில்லை. அவர் உரையாற்றிய சென்னை தியாகராயர் கல்லூரி முதல்வர் தம்மைப் பேச ஏற்பாடு செய்த விதம் பற்றிக் கூறிச் சொற்பொழிவைத் தொடங்கியுள்ளார்.

வாய்மொழித் தொடர்பில் பேச்சின் தொடக்கம் ஓர் அறிமுகமே. அதனைத் தொடர்ந்து வரும் பொருள் விரித்தல் முக்கியமானதாகும்.

*பொருள் விரித்தல்*

பொருள் விரிக்குமிடத்துக் கருத்துத் தொடர்பு சிதறுண்டு போதல் கூடாது. சுருங்கக் கூறினால், பேச்சாளர் பொருள் விரிக்கும்போது கருத்துத் தொடர்பு அறாது பேச்சைத் தொடர்ந்து பேசிக் கூறியது கூறல், மாறுகொளக் கூறல், மற்றொன்று விரித்தல் என்னும் குற்றங்களைச் செய்யாது, புள்ளி விவரங்களைக் கொடுக்க வேண்டுவது இன்றியமையாததாயிருந்தால் அவற்றைக் கொடுத்து. உதாரணங்கள் தந்து, தெளிவு, விளக்கம் ஆகிய இவற்றைக் குறிக்கோளாகக் கொண்டு, பல கருத்துக்களைத் தர்க்க முறையில் எடுத்துக் கொடுத்து உணர்ச்சி ததும்பப் பேச வேண்டும் (பரந்தாமனார், அ.கி., 1980 : 65) மேற்கூறியவாறான அண்ணாவின் சொற்பொழிவுகளில் இல்லை. புள்ளி விவரங்கள் அரிது. சான்று காட்டி விளக்கித் தெளிய வைத்து, தர்க்கமுறையில் கருத்துக்களை முன்வைத்து உணர்ச்சி ததும்பப் பேசும் இடங்கள் ஏராளம். எடுத்துக்காட்டிற்குச் சிலவற்றை மட்டும் இங்குக் காணலாம்.

*சான்று காட்டி விளக்குதல்*

அறநிலையங்கள் பற்றிய சொற்பொழிவில் கடவுளுக்குக் காணிக்கையாக்கும் பணத்தைக் கொடுத்து, ஏழையை வாழ

வைக்கலாமே என்கிறார் அண்ணா. வங்கியிலே பணத்தை முடக்க விரும்பாத வியாபாரியின் செயலைச் சான்றாகக் காட்டுகிறார். ''பாங்கியிலே ஓர் ஆயிரம் ரூபாய் வீணாக முடங்கிக் கிடப்பதை விட அதே பணத்தைக் கொண்டு, ஒரு 5000 ரூபாய்க்குச் சரக்கு எடுத்து, அதனால் லாபம் சம்பாதிக்கத்தான் வியாபாரிகளாகிய நீங்கள் எண்ணுவீர்கள், அப்பொழுதுதான் பணம் முடக்கமின்றிப் பொருளாதாரம் பெருகும். அதேபோல், நம்நாட்டில் பல கோயில்களில் லட்சக்கணக்கான ரூபாய்கள் நகைகளாகவும், நிலங்களாகவும், வாகனங்களாகவும், கிரீடங்களாகவும் மக்களுக்கு ஒரு சிறிதும் பிரயோசனமில்லாமல் முடங்கிக் கிடப்பதை எடுத்து, பல ஆலைகளையும், தொழிற்சாலைகளையும் ஏற்படுத்தலாமே! இந்தியாவில் வாழும் 40 கோடி மக்களும் வேலை செய்து பிழைக்கலாமே! நாட்டின் பொருளாதார வளமும் பெருகுமே! வேலையில்லாத் திண்டாட்டம் ஒழியுமே!''(அண்ணாதுரை, 970:47)இந்து அறநிலையப் பாதுகாப்பு மசோதாவை ஆதரித்துப் பேசிய இச்சொற்பொழிவில் இன்று நேற்று என்றில்லாமல் நம் முப்பாட்டனார் காலத்திலிருந்தே நடந்துவரும் கோயில் திருட்டுக்களை அடியோடு அழிக்கப் பெருந்துணையாகவே இம் மசோதா கொண்டு வரப்பட்டதெனத் தெளிவுபடுத்தியுள்ளார்.

### தர்க்க முறை

தமிழ் இலக்கியங்கள், அறிவியல் நூல்கள் போன்றவற்றைத் தமிழர்கள் படிப்பதில்லையே என்ற ஆதங்கம் அண்ணாவுக்கு; பொங்கி எழுகிறார் ''ஒவ்வொருவரும் வீட்டுக்கொரு புத்தகசாலையை அமைக்கவேண்டும், புத்தகம் வாங்கப் பணமில்லை என்று குறை சொல்ல முடியாது. மற்றவற்றிற்குச் செலவு செய்வதில் ஒரு பகுதியை ஒதுக்கிப் புத்தகங்கள் வாங்குவதற்கென்று செலவிட வேண்டும் (அண்ணாதுரை, 1970 :22). தமிழர்கள் விடுகளிலே சென்று தேவாரம் இருக்கிறதா? என்றால் இருக்கும். திருவாசகம் இருக்கிறதா? என்றால் இருக்கும். பாரிஸ் பற்றி நூல் இருக்கிறதா? இராது விஞ்ஞானம் பற்றி நூல் இருக்கிறதா? இராது அடியார்களைப் பற்றித் தெரியுமா? நன்கு தெரியும் என்பார்கள். பொதிகை தெரியுமா? என்று கேளுங்கள் தெரியாது. இந்திரவிழா தெரியுமா? தெரியாது. சிலப்பதிகாரம் தெரியுமா? தெரியாது. பெரும்பாலான தமிழ

மக்கள் சங்க நூல்களைப் பயில்வதில் கவனம் செலுத்துவதில்லை. சிலப்பதிகார ஏட்டைப் பலர் தொட்டும் பார்த்திருக்க மாட்டார்கள். நம் மக்களுக்கு நுண்ணறிவு இல்லையென்று சொல்லலாமா? சொல்ல முடியாது. அந்த நுண்ணறிவைச் சீரிய ஏடுகளைத் தொடுவதில் கவனம் செலுத்துவதில்லை (அண்ணாதுரை, 1970: 12—13) என்று வாதிடுகிறார் அண்ணா.

கோயில்களிலே பல கோடி ரூபாய்கள் கடவுளின் பெயரால் பதுக்கி வைக்கப்பட்டிருக்க நம் இந்திய அரசு உலக வங்கியிடம் கடன் வாங்கக் கூடிய நிலையில் உள்ளதே என மனம் வெதும்பிய அண்ணா, "அமெரிக்கா செல்வபுரியல்லவா? அமெரிக்காவில் ஏசுநாதருக்குத் தங்கத்தேர் செய்ய முடியாதா? இத்தாலியிலே முடியாதா? இதுவரை நம்மை ஆண்ட பிரிட்டிஷ் ஏகாதிபத்தியம் நினைத்தால் ஏசுநாதருக்கு வைரக் கருடவாகனம் செய்ய முடியாதா? செல்வமில்லையா அவர்கள் நாட்டில்! நம் நாட்டிலேதான் தங்கத்திலே கருட வாகனங்கள், தங்க யானைகள், வெள்ளி ரிஷபங்கள். எல்லாம் பல கோயில்களில் வைரமாக முத்தாக, பச்சையாக, நவரத்தினங்களாக நகைகள் இழைத்து வைத்திருக்கிறார்கள். இந்திய அரசாங்கத்தார், இந்தியாவை அடமானம் வைத்து உலகு பாங்கிலிருந்து கடன் வாங்கிப் போகிறார்கள்" (அண்ணாதுரை, 1970: 38) என்று உணர்ச்சி பொங்கப் பேசுகின்றார்.

நல்ல நூல்கள் பரவினால் வெளி உலகம் தெரியாதிருக்கும் மக்கள் புதிய அறிவைப் பெற்று விழித்துக் கொள்வார்கள். அறநிலையங்கள் ஏழைகளுக்கு உதவுவனவாய் இருத்தல் வேண்டும் அறிவுத் தெளிவோடு ஆராய்ந்து இது சரி, இது தவறு என்று முடிவு கட்டும் மனப்பான்மை மாணவர்களுக்கு வேண்டும். சுவையும் பயனும் உள்ள ஏடுகளையே அவர்கள் படிக்க வேண்டும். ஒருவரிடத்திலேயே பணம் குவிதல் கூடாது; தொழிலாளிக்கும் முதலாளிக்கும் இடையே மிகுந்த ஏற்றத்தாழ்வு கூடாது என்பன போன்ற கருத்துக்களை அண்ணா தம் சொற்பொழிவுகளில் நயம்பட உரைத்துள்ளார். அவர் தம் பேச்சுக்களை முடித்தலிலும் கூட நயமும் சுவையும் இருத்தலைக் காண முடிகின்றது.

பேச்சின் முடிவு

ஒருவர் பேச்சைத் தொடங்குவதிலும் பொருள் விரித்தலிலும் கவனம் செலுத்தி, முடிப்பதில் கவனம் செலுத்தத் தவறிவிட்டால் பேசிய பேச்சு மதிப்பிழந்து போகக் கூடும். ஜார்ஜ் ரௌலண்டு காலின்ஸ் என்பவர், பேச்சை முடிப்பதைக் குறித்துத் தமது "மேடைச் பேச்சு" என்னும் நூலில் பேச்சு முடிப்பதில் ஒரு குறிக்கோள் இருக்கிறது. அது பேச்சை முடிவுக்குக் கொண்டு வருவதுடன் சிறிது நேரத்திற்குள் பேசிய பேச்சின் முழுப் பொருளையும் கேட்போருடைய விழுமிய கவனத்துக்குக் கொண்டுவந்து பேச்சில் சிதறிக்கிடக்கும் கருத்துக்களை ஒருமுகப்படுத்தி, உள்ளத்தில் பசுமரத்து ஆணிபோலப் பதிய வைக்கிறது. ஆதலால் பேசி முடித்தலைத் திட்டமிட்டுச் சொற்களை நன்கு அமைத்து முடிப்பாயாக. ஒரு நாளும் பேச்சை விரைவாக அழகற்று முடியுமாறு திடீரென்று நிறுத்திவிடுதல் கூடாது. எடுத்துக்கொண்ட பேச்சை முடித்துக் காட்டுக. இதுவே நான் சொல்லக் கூடியது. பேச்சை ஒரு முடிவுக்குக் கொண்டுவந்து முடித்து விடுக. கேட்பவர்களும் பேச்சு முடிவடைந்தது என்று உணரட்டும் (பரந்தாமனார், அ கி , 1980:72) என்று குறிப்பிடுகின்றார்.

மேடைப் பேச்சினை முடிப்பதற்கு

1. பேசிய பேச்சின் சுருக்கத்தைக் கூறி முடித்துவிடுதல் முறை.
2. முடிப்புரையில் கேட்டதைச் செயலாற்றுவதற்கு ஏற்ற வகையில் உணர்ச்சி எழும்பப் பேசி முடிப்பது மற்றொரு முறை.
3. நிலையத்தினருக்கு அல்லது கழகத்தினருக்கு வாழ்த்துரை வழங்கிப் பாராட்டி முடிப்பது இன்னொரு முறை. இப்படிச் செய்யும்போது பேச்சாளர் அளவு கடந்து போகாமல், உண்மையான அன்புடன், புனைந்துரையாது பாராட்ட வேண்டும்.
4. நகைச்சுவையுடன் பேச்சைக் கேட்போர் மகிழ்ச்சி வெள்ளத்தில் ஆழுமாறு முடிப்பது மற்றொரு முறை. இது யாவராலும் எளிதாகக் கைக்கொள்ளக் கூடியதன்று. "அவையினரிடமிருந்து விடை பெறும்போது அவர்கள்

சிரித்து மகிழுமாறு செய்து பேச்சை முடிப்பயாக'' எனத் தலைசிறந்த பெருநாவலரான ஜார்ஜ் கோஹன் என்பவர் கூறினார். இதற்கு மிகுந்த திறமை வேண்டும்.

5. ஏற்றதொரு மேற்கோளுடன் அல்லது ஏற்ற செய்யுளுடன் இனிதாகக் கூறிப் பேச்சை முடிப்பது ஒரு முறை.

6. வாக்கியங்களை மேன்மேல் உயர்த்து முறையில் (climax) அமைத்துக் கூறி, உணர்ச்சி எழுப்பிப் பேச்சை முடிப்பது மற்றோர் அரிய முறை.

7. சாதாரணமாக, ''தாய்மார்களே, பெரியோர்களே, அன்பர்ளே, என் பேச்சைப் பொறுமையோடு செவிமடுத்த உங்கள் அனைவருக்கும் என் உளமார்ந்த நன்றி கலந்த வணக்கத்தைச் செலுத்துகிறேன்'' என்று கூறி முடிப்பது வழக்கமான எளிய முறை (பரந்தாமனார், அ. கி.,1980: 74—77) என ஏழு முறைகள் சொல்லப்படுகின்றன,

நூல் நிலையங்கள் பற்றிப் பேசிய அண்ணா, நம் நாட்டில் பஞ்சாங்கமும் ரயில்வே கைடுமே' அதிக அளவில் விற்பனையாகும் நிலை மாறி, அந்த அளவிற்குத் தமிழ்ப் புத்தகங்கள் விற்பனையாக வேண்டும் என்ற வேண்டுதலோடு, ''இந் நிலையம் பழைய தமிழ் மலையின் பெயரைச் சூட்டிக் கொண்டிருப்பதற்காக நான் பாராட்டுகிறேன். பொதிகையிலே சேர்ந்து தமிழின் இனிமையையும் நல்ல மலனையும் அடைவீர்கள் என்று எண்ணுகிறேன்'' (அண்ணாதுரை, 1970:24) என்று பாராட்டி, வாழ்த்திப் பேச்சை முடிக்கிறார்.

பார்ப்பனீய ஆதிக்கத்தையும், மடாதிபதிகளையும் சாடிப் பேசிய அண்ணா, அவர் பேசிய பேச்சின் சுருக்கமாக, ''மக்களிடையே மதிப்பை இழந்து, மாண்பை இழந்து, கருணையை இழந்து இருக்கும் சோற்றுத் துருத்திகளால் நாட்டுக்கு ஏதாகிலும் பயன் உண்டா? முன்பெல்லாம் மடாதிபதிகளைப் பற்றிப் பேசினால், ஒரு விநாடியிலே கருவறுத்துத் தள்ளிவிடுவார்கள். அது அந்தக் காலத்தில். இன்று, எல்லாக் கட்சியாரும் மடாதிபதிகளின் போக்கைக் கண்டிக்கிறார்கள். இந்து அறநிலையப்

பாதுகாப்பு மசோதாவை எல்லாக் கட்சியாரும் ஆதரிக்கிறார்கள். எது பாபம்? எது புண்ணியம்? என்பதை நன்கு ஆராய்ந்து, அறிவுத் தெளிவு கொண்டு, நீங்கள் வாழ வேண்டுமென்று சொல்லி, இதோடு முடித்துக்கொள்கிறேன்'' (அண்ணாதுரை, 1970 : 50) என்று முடிக்கிறார்.

நீதியை நிலைநாட்ட, நேர்மையை வலியுறுத்த, நாட்டிற்கேற்ற திட்டங்களை எடுத்துரைக்க, மடமையை மாய்க்க, கொடுமைகளைக் களைய, சிறுமைகளை, சீரழிவுகளைப் போக்க ஆர்வம் கொண்டு, சொற்பொழிவுகளை நிகழ்த்திய அண்ணா தமது பேச்சைச் செவிமடுத்தோர் தாம் கேட்டுக்கொண்டபடிச் செயலாற்ற உணர்வுகொண்டு எழும் வகையில், ''மாணவர் கழகம் என்ற தோட்டமும் அதன் இலட்சியங்கள் என்ற தண்ணீரில் தொண்டு என்ற எருவால் வளரவிட வேண்டுமென்று சொல்லி என் உரையை இந்த அளவோடு முடிக்கிறேன்'' (அண்ணாதுரை, 1970 : 68) என்றும், ''ஆகையால் இவற்றை எல்லாம் நீங்கள் நன்கு உணர்ந்து, உன்னதமான பொருள்களைக் கிராம மக்களுக்கு உங்கள் கல்லூரிக் கழகத்தின் வாயிலாக—எடுத்துச் சொல்ல வேண்டும் என்று உங்களனைவரையும் கேட்டுக்கொள்கிறேன்'' (அண்ணாதுரை, 1970 : 92) என்றும் முடிக்கின்றார். இங்ஙனம் அண்ணாவின் பேச்சுக்கள் ஜார்ஜ் ரௌலண்டு காலின்ஸ் கூறியுள்ளதுபோல், பேச்சினைக் கேட்போர் அதன் முடிவினை உணர்ந்துகொள்ளும் வகையில் முடிவுரையை அமைத்துக் கொண்டார் எனலாம்.

பொதுமக்களுக்கும், வியாபாரிகளுக்கும், மாணவர்களுக்கும் வளமான கருத்துக்களை வழங்கிய அண்ணா, தமது பேச்சு நடையையும் அவர்களுக்கு ஏற்றவாறும், அழகாகவும் அமைத்துக் கொண்டார்.

## மேடைப் பேச்சு நடை

கூடியிருக்கும் அவையினரோடு தொடர்பு கொள்வதில் மொழி முக்கியப் பங்காற்றுகின்றது. மேடைப் பேச்சுக்கு உயிர் பேசும் பொருள்! அதுபோலப் பொருளும் பேச்சு நடையும் சேர்ந்தால் பேசிய கருத்து கேட்போர் உள்ளத்தில் இயங்கும் பொரு-

ளற்ற பேச்சு உயிரற்ற உடல். அழகிய மொழிநடை அற்ற பேச்சு உடலற்ற உயிர். எனவே, மொழிநடையும் கருத்து வளமும் மேடைப் பேச்சு மேன்மையுறுவதற்கு வேண்டுவனவாகும். தமிழ் மேடைப் பேச்சு நடையில் கடு நடை, எளிய நடை, இலக்கிய நடை, அடுக்கு மொழி நடை, கொச்சை மொழி நடை என ஐவகை நடைகள் உள்ளன. கடுமையான நடை மேடைப் பேச்சுக்கு உதவாது (பரந்தாமனார், அ.கி., 1890:122).

பேச்சு நடை என்பது கருத்தைப் புலப்படுத்துவதற்குப் பயன்படுத்தும் முறையாகும். இதன் நோக்கம் கேட்போர் உள்ளத்தைக் கவர்வதாகும். எனவே பேசும் கருத்து, கேட்போரை எளிதில் சென்றடைய வேண்டுமெனில், தொடர்பு கொள்ளப் பேசும் மொழி எளிமையானதாகவும் அழகியதாகவும் இருக்க வேண்டும் என்பது மறுக்க முடியாத உண்மை (பரந்தாமனார், அ. கி., 1980:124).

எளிய நடையே மேடைப் பேச்சுக்கு உரிய நடை. தொடர்கள் சிறியனவாக இருந்தால் எளிய நடை அமையும். கருத்துத் தெளிவு இருந்தாலும் நடை எளிதாக இருக்கும்(பரந்தாமனார், அ. கி,1980:124). அண்ணாவின் பேச்சு நடைஇத்தகை எளியநடையே. சான்றாக,இந்து அறநிலையப் பாதுகாப்பு மசோதாவை ஆதரித்து, அண்ணா ஆற்றிய சொற்பொழிவின்போது, ''வைரம் எவ்வளவு? பச்சை எவ்வளவு? முத்து எவ்வளவு? நவரத்தினங்கள் எவ்வளவு? ஜடைபில்லைகள் எத்தனை? என்று இந்த மசோதா வந்ததும் இந்து பரிபாலனக் கமிட்டி கணக்குக் கேட்கும். அதற்குத்தான் இந்த மசோதா. கோயில்களிலே அற்புதமாக நடைபெறும் திருட்டை அடியோடுஒழிக்க இந்த மசோதா பெருந்துணை செய்கிறது'' (அண்ணாதுரை,1970:34) என அமைந்துள்ள பேச்சைக் கூறலாம்.

அண்ணாவின் பேச்சு நடை அழகிய அடுக்கு மொழிநடை. ''துறவறத்தை மேவும் மடாதிபதிகளுக்கு நஞ்சையும் புஞ்சையும் ஏன்? திருவாவடுதுறைத் தம்பிரானுக்குப் பத்து விரலிலும் மின்னும் வைரமோதிரம் ஏன்? கையிலே கமண்டலம் ஏன்? காதில் குண்டலம் ஏன்?இதுவா துறவறம்?'' (அண்ணாதுரை, 1970:48). இங்ஙனம் அடுக்கு மொழி நடையில் மிடுக்குடன் அண்ணா

பேசுவதைக் கேட்போர், அவர் அடுத்தடுத்துச் சொல்லும் கருத்-துக்களை விடுக்க மனமில்லாமல் செவிமடுத்திருப்பர் என்பதில ஐயமில்லை.

*முடிவுகள்*

கற்றார்க்கும், கல்லாதவர்க்கும் நற்கருத்துக்களை எடுத்-துரைக்க அண்ணா வாய்மொழித் தொடர்பை — மேடைப் பேச்-சினை— வெகுலாவகமாகக் கைக்கொண்டார்.

ஆய்விற்குட்பட்ட அவரது பொழிவுகள் நல்ல தொடக்கம், பொருள் விரித்தல், முடிவு என்ற முறைப்படித் தெளிவுற அமைந்-துள்ளன.

அண்ணாவின் பேச்சு நடை எளிய நடை; இனிய அடுக்கு மொழி நடை. ஆயினும் நூல் நிலையங்களின் அவசியம், அற நிலையங்களின் பொறுப்பு, தமிழ் மொழியின் சுவையும் பயனும், வஸ்து, கருத்து எனும் இருவகைப் பொருள்களின் தன்மை என்றிவ்வாறு அண்ணா மொழிந்துள்ள கருத்துக்கள் சிறப்புப் பெற்றுள்ள அதே நேரத்தில் அவரது இந்து மதச் சாடலும் காங்-கிரஸ்காரர்களை எதிர்த்தலும் சற்று நெருடலாய்த்தான் உள்ளன.

மொத்தத்தில அண்ணா நான்கு சொற்பொழிவுகளிலுமே நாத்திகம் பேசுகிறார். இந்து மடாதிபதிகளையும் இந்துக் கட-வுளர்களையும் மிகவும் சாடுகின்றார். அதுபோல் காங்கிரஸ் ஆட்சி-யையும், தலைவர்களையும் காங்கிரஸ்காரர்களையும் மிகவும் வெறுத்துப்பேசுகின்றார். இங்ஙனம் வேண்டாதவர்களைவெறுத்-துப் பேசுவதைப் பேச்சினூடே பொருத்தமாக நுழைத்துப் பேசி-யுள்ளபோதிலும் அது மேடைப் பேச்சிற்கு அழகல்ல; கேட்போர் சலிப்படையக் கூடும். ஆயினும் அவர் பேசியுள்ள அந்தக் கால-கட்டம் திராவிட இயக்கத் தாக்கம் பெற்ற காலம் என்பதால் அண்ணா அங்ஙனம் தமது பேச்சுக்களை அமைத்துக் கொண்டார் எனலாம்.

*பயன்பட்ட நூல்கள்*

1. அண்ணாதுரை, சி.என்., அண்ணாவின் சொற்செல்வம் (அறிஞர் அண்ணாவின் நான்கு சொற்பொழிவுகள்) பாரி நிலையம், சென்னை, ஐந்தாம் பதிப்பு, 1990.

2. குமரி அனந்தன், நீங்களும் பேச்சாளர் ஆகலாம், பூம்புகார் பிரசுரம், சென்னை, மார்ச் 1977.

3. நாகை-தருமன் (தொ.ஆ.) அண்ணாவின் நவமணிகள், வானதி பதிப்பகம், சென்னை, மூன்றாம் பதிப்பு-மார்ச் 1980.

4. பரந்தாமனார், அ.கி., பேச்சாளராக, அல்லி நிலையம்-சென்னை, ஐந்தாம் பதிப்பு - ஜூலை 1980.

5. புலவர் செந்துறை முத்து, பேராசிரியர் அண்ணா, புதுமைப் பிரசுரம், சென்னை, பிப்ரவரி 1974.

6. Eyre, E.C., EFFECTIVE COMMUNICATION MADE SIMPLE Rupa & Co, Calcutta, First Paper Back. 1985.

*கட்டுரை*

7. விசுவநாதம், கி.ஆ.பெ., மேடைப் பேச்சுக் கலை, வெள்ளி விழா மலர், தில்லித் தமிழ்ச் சங்கம், புதுடெல்லி, 1971.

# அண்ணாவின் ஆளுமைத் திறன்

செ. சாரதாம்பாள்

திரு சி.என். அண்ணாதுரை அவர்கள் தமது அறிவுக்கூர்மை, பேச்சாற்றல், எழுத்தாற்றல், இளமையிலிருந்தே காணப்பட்டசமூக ஈடுபாடு, கொள்கைப் பற்றுமுதலியவற்றால் 'அறிஞர் அண்ணா' என்றும், 'தலை சிறந்த தலைவர்' என்றும் பாராட்டப்பட்டார். இத்தகைய பாராட்டுதலைப் பெற்ற அறிஞர் அண்ணாவின் ஆளுமை வளர்ச்சிப் படிநிலைகளை உளவியல் நிலையில் அறிதல் சுவையான ஒன்றாகும்.

அண்ணாவின் இன்றியமையாத வாழ்க்கை வரலாற்று நிகழ்ச்சிகள், சமூகச் சிறுகதைகள் (அண்ணாவின் சிறுகதைகள்-பரிமளம் பதிப்பக வெளியீடு, வண்டிக்காரன் மகன் - பூம்புகார் பிரசுர வெளியீடு)முதலியவற்றைமட்டும்ஆதாரங்களாகக்கொண்டு தன்னிறைவுக் கோட்பாட்டின் (Self actualization theory) வழி அண்ணாவின் ஆளுமை வளர்ச்சிப் படிநிலைகளை, ஆளுமை வளர்ச்சிக் கூறுகளை இக்கட்டுரை சுட்டிக்காட்ட முயலுகிறது

'ஆளுமை' என்பதற்குரிய 'பெர்சனாலிட்டி' (Personality) என்ற ஆங்கிலச் சொல் 'பெர்சனா' (Persona) என்ற இலத்தீன் சொல்லிலிருந்து உருவானதாகும். இச்சொல்லின் பொருள் நாடக நடிகர்கள் தங்களை அடையாளம் தெரியாமலிருக்க அவர்களின் முகத்தை மறைக்கப் பயன்படுத்திய முகமூடியைக் குறித்தது. எனவே முதன் முதலில் ஆளுமை என்பது ஒருவர் மற்றவர்களுக்கு எப்படித் தோற்றமளிக்கிறார் என்பதையே சுட்டியது என்பர் (Uday Shankar, 1981 : 5).

இன்றும் அன்றாட வாழ்க்கையில் நாம் ஒருவரைப் பார்த்தவுடன் 'விரும்பத் தகுந்த தோற்றமுடையவர்', 'கவர்ச்சியூட்டும் தோற்றமுடையவர்' என்கிறோம். இங்கு ஆளுமை என்பது, தனி ஒருவர் தன் தோற்றப் பொலிவினால் மற்றவர்கள் மீது ஏற்படுத்தும் எண்ணப் பதிவினை அல்லது உணர்ச்சி விளைவினையே குறிக்கிறது. இவ்விளைவின் உட்பொருள் சமூகத் தூண்டுதல்

மதிப்பினை (Stimulus value) உணர்த்துவதே என்பர் (Uday Shankar, 1981 : 5-6).

மனிதன் ஒரு சமூக உயிரியாவான். அவன் உடல், உள்ளம், குடும்பச் சூழல், சமூகச் சூழல் போன்ற அனைத்துச் சூழல்களிலும் மனிதன் உருவாக்கப்படுகின்றான். தோற்றப் பொலிவை மட்டும் வைத்து ஒருவரின் ஆளுமையைக் கூறவியலாது. எனவே ஆளுமை குறித்த சில பண்பு விளக்கங்கள் இவண் நினைவு-கூரத்தக்கன.

*ஆளுமைப் பண்பு - விளக்கம்*

'ஆளுமை' ஒருவரது மனப்பான்மையையே பெரிதும் பொறுத்து அமையும். இவ்வடிப்படையில் உளப்பகுப்பாய்வாளர் மனிதனின் நினைவில் மனத்தினின்று எழும் வலிமை வாய்ந்த 'இத்' (id) என்கிற உள்ளச்சக்தி, சமூகச் சூழ்நிலையின் சட்ட திட்டங்களோடும் கட்டுப்பாடுகளோடும் இழைவதனால் ஏற்படு-வதே 'ஆளுமை' என்கின்றனர் என்று கலைக்களஞ்சியம் குறிப்-பிடுகிறது.

"தனிமனிதனுடைய எண்ணங்கள், செயல்படும் முறை, நடத்தைகள், அவன் பிறருடன் பழகும் முறை, மனப்பான்மைகள், அவனுடைய வாழ்க்கைத் தத்துவம், அறிவாற்றல், உணர்ச்சி-கள் ஆகிய யாவும் சேர்ந்த தொகுப்பிலிருந்து அவனுக்கு ஏற்படும்-ஒரு தனித்தன்மையே ஆளுமை" என்று வாழ்வியற் களஞ்சியம் ஆளுமைப் பண்பை விளக்குகின்றது.

ஆளுமை பற்றி விளக்கிய அறிஞர்களில் குறிப்பிடத் தகுந்-தவர் ஜி. டபிள்யு. ஆல்போர்ட் (G.W. Allport) ஆவார். இவரது கருத்துக்கள் இவண் கருதத்தக்கன.

ஆளுமைக்கு அடிப்படை உள நிலையும், உடல் சார்ந்த அமைப்பு நிலையும் (Psyco, Phy ical system) ஆகும். எனவே உடல், உள்ளப் பண்புகளின் தனிப்பட்ட ஒழுங்கமைப்பும் ஆளுமை-யைக் குறிக்கும்.

உடல்,உள்ள வளர்ச்சித் திறனிற்கேற்ப ஆளுமையும் வளர்கின்றது. இவ் ஆளுமை ஒரு மனிதனின் அனைத்து நடத்தைகளிலும் வெளிப்படுகிறது. ஒவ்வொரு மனிதனும் அவனது தனித்தன்மை அடிப்படையில் செயல்படுகிறான். இச்செயல்முறைகள் அவனது ஆளுமையின் தனித்தன்மைகளையே வெளிப்படுத்துகின்றன. எனவே ஆளுமை என்பது ஒருவனைப் பிறரிடமிருந்து பிரித்து வேறுபடுத்திக் காட்டும் பண்பமைதிகளின் ஒட்டுமொத்த தொகுதி என்றும், குடும்பச் சூழல், சமூகச் சூழல், அச் சூழல்களில் எழும் சமூகத் தூண்டல்கள் முதலியவற்றின் ஒருங்கிணைந்த அமைப்பினால் ஒரு மனிதனிடம் எழும் சிறப்புக்கூறுகளே ஆளுமை எனப்படும் என்றும் ஆல்போர்ட் ஆளுமைப் பண்பைப் பல நிலைகளில் விளக்குகின்றார் (Uday Shankar, 1981:8-9).

ஆளுமையின் அடிப்படைக் கூறுகளாகத் தனிப்பட்ட தோற்றம், அறிவுக் கூர்மை, உணர்வாற்றல், சமூகமயமாதல், நேர்மையான ஒழுக்க மதிப்புகள், மேம்பாடடைதல், பணிவமைதி முதலியவற்றைச் குறிப்பிடுவர் (Hans Raj Bhatta, 1969:259-261).

மேற்குறிப்பிட்ட விளக்கங்களைத் தொகுத்து நோக்கும் பொழுது,

1) ஆளுமை என்பது குடும்பப் பாரம்பரிப் பண்புகள், உடலமைப்பும் வளர்ச்சியும், உள்ளம், உணர்வு, சமூகச் சூழல், கல்விச் சூழல், சமூகச் சூழலில் அவன் பங்கு, அதில் அவனது தனித்தன்மை. அத் தனித்தன்மையின் வழி உருவாகும் இலக்குகள் ஆகிய அனைத்துக் கூறுகளும் அடங்கிய ஒரு பண்பு என்பது வெளிப்படையாகிறது.

2) ஆளுமை குடும்பப் பாரம்பரிய மரபியல், உயிரியல், உளவியல், சமூகவியல் ஆகிய காரணங்களால் உருவாக்கப்படுகிறது.

3) தனிமனிதனின் பழக்கவழக்கங்களைக் காட்டிலும் ஒருவனது நடத்தைக் கூறுகளே அவனது ஆளுமையை அளந்தறியும்

அடிப்படைக் கூறுகளாக அமைகின்றன என்பது புலனாகின்றது

எனவே குடும்பச் சூழல், சமூகச் சூழல், அச்சூழலில் எழு சமூகத் தூண்டல் போன்றவற்றின் இணைவினால் எழும் சிறப்புக் கூறுகளே ஆளுமை என்பதை அடிப்படைக் கருத்தாகக் கொள்ள. லாம்.

*தன்னிறைவுக் கோட்பாடு* (self actualization theory)

மனிதனின் வாழ்க்கை, பல படிநிலை வளர்ச்சிகளையும் மாற்றங்களையும் கொண்டது. ஒவ்வொரு நிலையின் தொடக்கத்திலும் மனிதன் பல தேவைகளை உணர்கிறான். முதலில் மனிதனுக்கு உணவு, உடை, இருப்பிடம், போதுமான பொருளாதார வசதியும் அடிப்படைத் தேவைகள் ஆகின்றன. மனிதன் ஒருவரை ஒருவர் சார்ந்துள்ளதால் பல அன்பின் பரிமாணங்களுக்கு ஆட்படுகிறான். மனிதன் வளர்ந்து வரும் நிலையில், குறிப்பிட்ட பருவத்திற்குப்பிறகு உடலாலும் உள்ளத்தாலும் சமூக மாற்றங்களுக்குஉட்படுத்தப்படுகின்றான். சமூகம் தன்னை மதிக்க வேண்டும் என்று ஒவ்வொரு மனிதனும் விரும்புகின்றான். தனி-நோக்குகளை அடைகின்றான்; அதன் வழி அவனது தனித்தன்மைகள் வளர்ச்சியும் ஆக்கமும் பெறுகின்றன. செயலூக்கத்திறனிற்கேற்பத் தன்னிறைவு அடைகின்றான் என்று மனிதனின் வாழ்க்கைப் படிநிலைகளைச் சுருங்க விளக்கலாம்.

இவ்வாறு மாறிவரும் மனிதனின் வாழ்க்கைத் தேவைகளை அடிப்படையாகக் கொண்டே ஆபிரகாம் மாசுலோ (Abraham Masalow)‘தன்னிறைவுக்கோட்பாட்டினால் விளக்குகின்றார்.

‘தன்னிறைவு’ என்பது மனிதனின் உள்ளார்ந்த திறன்களின் வளர்ச்சியே என்றும் மனிதனின் தன் முன்னேற்றத்திற்கான உயிரியல் சார்ந்த அடிப்படைத் திறமைகளின் மாறாத பிரதிபலிப்புக்களே என்றும் விளக்குவர் (Southwell and Merbaum, 1978: 323).

மனிதன் தன் தேவைகளை மற்ற மனிதருடன் அல்லது சமூகக் குழுவினருடன் செயலாற்றும் உள்ளுறவால் பெறுவதால், உளவியலார் மனிதத் தேவைகளைச் சமூகத் தேவைகள் அல்லது இலக்குகள் என்ற நிலையில் வைத்துப் பார்க்கின்றனர்.

'மாசுலோ' மனிதனின் தேவைகளை வாழ்வின் அடிப்படை நிலையிலிருந்து உயர்நிலைக்குரிய வளர்ச்சிப் படிநிலைகளின்- (Hierarchical order) அமைப்பில் ஒழுங்கமைதிப்படுத்தித் தருகின்றார். இக்கோட்பாட்டு விளக்கத்தைப் பின்வருமாறு காணலாம் (பாலுசாமி, நா. (ப.ஆ.). 1991:706—711).

மனிதனின் தேவைகளை வாழ்வின் அடிப்படைத் தேவைகள் அல்லது ஆதாரத் தேவைகள் என்றும், மதிப்புத் தேவைகள் அல்லது உயர்நிலைத் தேவைகள் (Meta Needs) என்றும் பிரிக்கின்றார். அடிப்படைத் தேவைகளுள் உடல்சார் தேவைகள் (Physiological Needs) காப்புத் தேவைகள் (Safety Needs) அன்புத் தேவைகள் (Belonging or love Needs) என்ற மூன்று தேவைகளையும் அடக்குகின்றார். உயர்நிலைத் தேவைகளுள் மதிப்புத் தேவைகளையும் (Esteem Needs), தன்னிறைவத் தேவைகளையும் (Need for self actualization) குறிப்பிடுகின்றார்.

மனிதனின் அடிப்படைத் தேவைகளுள் முதல் அடுக்கில் இருப்பது உடல்சார் தேவையாகும். இப்பகுதியில் மாசுலோ வளமான வளர்ச்சியையே (Healthy Growth) இன்றியமையாத தாகக் கருதுகின்றார் என்பர் (Southwell and Merbaum 1978;328).

உடலுக்கு இன்றியமையாத உணவு, மனமகிழ்வு நோயற்ற உடல்நலம், பால் உந்துதலின் இறுக்கநிலை நீங்குதல் முதலிவற்றை உடல்சார் தேவைகளுக்குள் குறிப்பிடுகின்றார் அவை அளவில் குறைந்தாலோ அல்லது அதிகமானாலோ மனிதனுக்கு உடல்நலக் கோளாறும் உளக்கோளாறும் ஏற்படும். ஆதலால் இவை குறைபடாமலும் கட்டுப்பாடுடனும் இருக்க வேண்டும் என்பார். சிலருக்கு, வாழ்வில் கிடைக்கும் உயர்மதிப்புக்கள் உடல்சார் தேவைகளைப் புறக்கணிக்க வைக்கும் என்கிறார்.

நல்ல வருமானம், தங்க நிலையான இடம் பகைவர் களிடமிருந்து பாதுகாப்பு ஆகியவற்றைப் பாதுகாப்பு அமைப்பின் முக்கியத் தேவைகளாக மாசுலோ எடுத்துக் காட்டுகின்றார். மக்கள் பெரிதும் புதிய முயற்சிகள், புதிய பாதைகள் வகுப்பதிலும் மேற்கொள்வதிலும் தயக்கம் காட்டுகிற பொழுது காப்புணர்வின்மை பற்றிய அச்சம் ஏற்படும். அதே மாதிரி குழந்தைகளைப்பாதுகாத்தல் அமைப்பில் அளவுக்கு மீறி கட்டுப்பாடு ஏற்பட்டாலும் அக்குழந்தைக்கு உளக்கோளாறு ஏற்படும் என்கிறார்.

இத்தேவைகளின் அடுத்த கட்டத்திலிருப்பது சார்நிலைத் தேவைகளும் அன்புத் தேவைகளுமாகும். இவ்வன்புத் தேவைகள் தாய் குழந்தையிடத்தும், பிள்ளைகள் முதியோரிடத்தும் குறிப்பாக இளம்பருவத்தினர் எதிர்ப்பாலினத்தவரிடமும் கொள்ளும் உறவுகளை ஒட்டியதாகும்.

குழந்தைக்குத் தாயன்பில் குறைவு ஏற்படின் வாழ்நாள் முழுதும் அது பாதிப்பை ஏற்படுத்தும். இத்தகைய குழந்தைகள் வளர்ச்சியடைந்த பின்னும் தனது திறமைகளையே பயன்படுத்த இயலாதவர்களாகி விடுகின்றனர். இதுபோல முதுமையில் கிடைக்கும் அன்பு ஒருவருக்குக் கிடைக்காவிட்டால் அவருக்குத் தான் ஒதுக்கப்பட்டு விட்டோம் என்ற தனிமை உணர்வும், தாழ்வு மனப்பான்மையும் ஏற்படும். இவ்வாறு அன்புத் தேவைகள் எப்பகுதியில் புறக்கணிக்கப் படுகிறதோ அப்பகுதியில் மனிதனுக்குப் பிறழ்நிலை ஏற்படுகிறது. இம்மூன்று அடிப்படைத் தேவைகளும் குறையின்றி, சீரான நிலையில் நிறைவேறினால் எவ்விதப்பாதிப்பிற்கும் ஒரு மனிதன் உட்படுவதில்லை; அவன் ஆளுமைச் சமநிலை அடைகிறான் என்கின்றார் மாசுலோ.

மேலும் இம்மூன்று தேவைகளின் அமைப்பையும் இயங்குநிலைகளையும் நோக்கினால் இவை மனிதனின் தொடக்கநிலை வளர்ச்சியையே சுட்டுகிறது, மனிதனின் தனிப்பட்ட சொந்தத்

தேவைகளுடனேயே பெரிதும் தொடர்பு கொண்டுள்ளதையும் உணரமுடிகிறது.

மனிதன் தன் வாழ்வின் இடைப்பட்ட காலத்திற்குப் பிறகு (in middle of the man) தன்னையறிய முற்படுகின்றான். சமூகம் தன்னை மதிக்க விரும்புகின்றான். சமூகத் துணிவு ஏற்பட்டுத் தனது இலக்குகளை நோக்கிச் செயல்படுகிறான். அப்பொழுது விளையும் சமூகத்துடன் ஒட்டிய தேவைகள், பயன்பாட்டினை ஒட்டியே மாசுலோ மதிப்புத் தேவைகள் தன்னிறைவுத் தேவைகளைப் பின்வருமாறு விளக்குகின்றார்.

மாசுலோ மதிப்புத் தேவைகளைத் தன் மதிப்பு, சுயநலம் சுயமரியாதை என்றும் மற்றவர்கள் நமக்குக் கொடுக்கும் ஏற்ற நிலை, புகழ், பெருமைபோன்ற தேவைகள் என்றும் இரண்டாகப் பிரிக்கின்றார். இதனால் தனி மனிதன் தனது சமூகத்தில் ஓர் உன்னத நிலையை அடைகின்றான். பலரால் அறியப்படுகின்றான். இத்தேவையை ஒட்டி அமைவது தன்னிறைவுத் தேவைகளாகும். இது தனிமனிதன் ஒருவனின் உள்ளார்ந்த திறமைகளின் சமூகப் பயன்பாட்டினைப் பொறுத்து அமையும்.

மனிதனுடைய தேவைகள் எந்த அளவில் நிறைவு பெறு-கின்றனவோ அந்த அடிப்படையில் அவனது ஆளுமையும் அமையும். ஒவ்வொரு மனிதனுக்கும் தனது முழுமையான திறன்களின் வளர்ச்சியில் நம்பிக்கை உண்டு என்ற கருத்துக்-களையே மாசுலோ இங்கு வலியுறுத்துகின்றார். இவை தவிர அழகுணர் தேவைகள், வாழ்வின் எல்லைகடந்த தேவைகள் போன்றவற்றையும் குறிப்பிடுகின்றார்.

மேற்குறிப்பிட்ட கருத்து விளக்கங்களை மாசுலோ பின்-வருமாறு அட்டவணைப்படுத்தித் தருகின்றார்.

மாசுலோவின் தேவை அடுக்குகளும் இயங்கு நிலைகளும்

| அடுக்குத் தேவை | குறைபாட்டுத் தேவை | நிறைவு நிலை | எடுத்துக்காட்டுகள் |
|---|---|---|---|
| உடல்சார் தேவை | பசி, தாகம், இருக்க இடமின்மை களைப்பு, உடல்நோய் இறுக்கம் | மன மகிழ்வு, இறுக்கநிலை நீங்குதல் உடல் நலம் | நல்ல உணவு உண்டபின் தோன்றும் மனநிறைவு. |
| காப்புத் தேவை | ஏக்கம், அச்சம் இழப்பு உளப்பீடிப்பு | காப்புணர்வு அமைதியான நிலை | நிரந்தர வேலையில் அமர்தல், காப்புணர்வு அடைதல் |
| அன்புத் தேவை | தன்னைப் பற்றிய மிகை உணர்வு ஒதுக்கப்படுதல தனிமை நிறைவின்மை | மனவெழுச்சி வெளியீடு நிலை உணர்வு, நல உணர்வு, தன் வலிமை உணர்தல் | அன்பின் காரணமாக முழுமையாக ஏற்றுக் கொள்ளல் |
| மதிப்புத் தேவை | தான் திறமையற்றவன் என்ற உணர்வு | நம்பிக்கை, செயல் திறம், தன் மதிப்பு | செயலைச் செய்து முடித்தல், பாராட்டல், |
| தன்னிறைவுத் தேவைகள் | அந்நிய உணர்வு, பொருளற்ற நிலை, சலிப்பு | ஆராய்ச்சி ஆக்கம், நிறையனுபவம் | நிகரற்ற அனுபவம் அடைதல் |

மாசுலோ, தன்னிறைவுத் தேவையுள்ளவர்கள் தன் வாழ்வின் பயன் மக்களுக்காக உழைப்பதே என்ற உணர்வினை உடையவராக இருப்பர். தன்னிறைவு விரும்புகின்றவர்கள் முழுமையாகச் சுதந்திரத்தை விரும்புகின்றவர்களாகவும் புரட்சியாளர்களாகவும், சாதனை படைக்க விரும்புகின்றவர்களாகவும் இருப்பர் என்கின்றார்.

மாசுலோவின் கோட்பாட்டினைத் திறனாய்வு செய்த எம். ப்ருவ்ஸ்டர் ஸ்மித் (M. Brewstar Smith) லிங்கன், ஐன்ஸ்டீன் போன்ற சாதனையாளர்களையே மாசுலோ மாதிரிகளாக எடுத்துக் காட்டுகின்றார். இலக்கியப் படைப்பாளர்களையும் எடுத்துக் காட்டி இருக்கலாம்' என்ற வினா எழுப்புகின்றார் (South well and Merbaum 1978 ; 328) எவ்வாறாகினும் தன் படைப்பிலக்கியங்கள் வாயிலாகவும் சீர்திருத்த நோக்கில் சாதனை படைத்த அறிஞர் அண்ணாவின் ஆளுமை வளர்ச்சியை அறிதல், இவண் பொருத்தமாக அமையும்.

## அண்ணாவின் தேவை அடுக்குகளும் இயங்கு நிலைகளும்

மாசுலோ மேலே குறிப்பிடும் வாழ்க்கையடுக்குகளின் பிரிவை நோக்கும் பொழுது அடிப்படைத் தேவைகள் மனிதனின் சொந்தத் தேவைகளுடன் நெருங்கிய தொடர்புடையதாகவும், மதிப்புத் தேவைகள் பெரிதும் சமூகப் பயன்பாட்டுத் தேவைகளுடன் தொடர்புடையதாகவும் உள்ளதை உணர முடிகின்றது.

சமூகச் சூழலில் ஒருவனது நடத்தைக்கூறுகள், அவனது முனைப்புக் கூறுகள் பயன்பாட்டுத் தேவைக் கூறுகள் முதலியவற்றை இணைத்துக் காணும்போது தான் ஒருவரது ஆளுமை வளர்ச்சியை அறிய முடியும். எனவே அண்ணாவின் அடிப்படைத் தேவைகள், மதிப்புத் தேவைகளை அவரது சொந்த வாழ்க்கை வரலாற்று நிகழ்ச்சிகளிலிருந்து தான் எடுத்துக் காட்ட இயலும். அண்ணாவிற்கு அடிப்படைத் தேவைகள் நிறைவு பெற்றுச் சமநிலை அடைந்ததுடன், மதிப்புத் தேவைகள் எப்படிச் சமுதா-

யத்தில் ஏற்பட்டன. அப்பொழுது அவரது நடத்தைக் கூறுகள் எவ்வாறு அமைந்திருந்தன என்பதைப் பின்வருமாறு அறியலாம்.

அண்ணாவின் அடிப்படைத் தேவைகளுள் உடல்சார் தேவைகளில் எக்குறைவும் ஏற்படவில்லை. சாதாரண மத்திய தரக் குடும்பத்தில் பிறந்திருந்தாலும், தந்தை வருமானம் போதுமான அளவு இருந்தால் பசி, இருக்க இடமின்மை போன்றவற்றால் வருந்தவில்லை. சிற்றன்னையின் வளர்ப்பால் சிறப்பாக வளமுடன் வளர்ந்தார்.

ஆனால், பள்ளிப்படிப்பு முடியும் தருவாயில் ஏற்பட்ட பொருளாதாரப் பற்றாக் குறைவால் பள்ளி இறுதிப் படிப்பு தடைப்பட்டுப் பின்னர், தேர்வுகள் எழுதி வெற்றி பெற்றார் என்பர் (புலவர் செந்துறை முத்து, 1974 : 18-19).

எனவே பள்ளிப்படிப்பு முடிந்த நிலையில் தன் குடும்பத்தை காப்பாற்ற வேண்டிய சூழலில் அண்ணாவிற்குக் காப்புத் தேவைகள் ஏற்பட்டன. வேலை தேடினார். முதன்முதல் காஞ்சி நகராட்சி மன்றத்தில் வேலை கிடைத்தது. அரசு உதவியுடன் கல்லூரி மேற்படிப்பைத் தொடர்ந்தார். பட்டமும் பெற்றார். திருமணம் நடந்தது. சிற்றன்னையின் தூண்டுதலால் வேலை தேடிச் சென்னை கோவிந்தப்ப நாயக்கர் நடுநிலைப் பள்ளியில் நான்கு மாதங்கள் வேலை பார்த்தார். அதன் பிறகு அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் டியூட்டர் வேலைக்கு வாய்ப்பு இருப்பதை அறிந்து அங்குச் சென்றார். ஆனால் அந்தரங்கக் காரியதரிசியாக இருக்கும்படி அண்ணாவிடம் முத்தையார் செட்டியார் கேட்டபோது அண்ணா அதற்கு ஒத்துக்கொள்ளவில்லை (புலவர் செந்துறை முத்து, 1974;29).

அதாவது அண்ணாவின் உள்மனமும் தன்முனைப்பும் அங்கு அடங்கி இருக்க இடம் கொடுக்கவில்லை அவர்மனம் சமூகஈடுபாட்டிலேயே நாட்டம் கொண்டிருந்தது. இவண் நினைவு கூரத்தக்கது. எனினும் காப்புத் தேவைகளைப் பொறுத்தவரை

அதிக நாள் வேலை பார்த்துக் குடும்பத்தைக் காப்பாற்றும் நிலை அண்ணாவிற்கு நீடிக்கவில்லை. சமூகப் பணியில் முழுமூச்சுடன் இறங்கினார்.

அண்ணாவின் அன்புத் தேவைகளில் குறிப்பிடத்தக்கது, சிற்றன்னை தொத்தாவின் அன்பாகும். சிறு வயதிலிருந்தே தொத்தாவின் அன்பில் குறைவின்றித் திளைத்து வளர்ந்தார். பள்ளிப்படிப்பு, மேற்படிப்பு, வேலை தேடுதல் என்று ஒவ்வொரு நிலையிலும் அண்ணாவை 'தொத்தா' ஊக்குவித்து வந்தார். தொத்தா இறந்த பின் அவரது இழப்பு தன் நெஞ்சை, நினைக்கும் பொழுதெல்லாம் வாட்டி எடுக்கிறது என்று அண்ணா தமது 'கைதி எண் 6342' என்ற நூலில் குறிப்பிட்டுள்ளார். இந்நிலை அண்ணாவிற்கு தொத்தா மீதிருந்த அளவு கடந்த அன்பையே காட்டுகிறது. இவ்வாறு எக்குறைவுமில்லாத சிற்றன்னையின் அன்புடன், தந்தை ஈ.வெ.ரா. பெரியாரின் அன்பும் அவருக்குக் கிடைத்தது. அவரது பாராட்டும் கிடைத்தது. இயல்பாகவே இளவயதிலிருந்தே இருந்து வந்த சமூக ஈடுபாடும் பெரியாரின் துணையும், அரவணைப்பும் அண்ணாவிற்குச் சமூகத் தூண்டுதல் உணர்வைத் தர, முழு மூச்சுடன் சமூகச் சீர்திருத்தப் பணியில் அண்ணா ஈடுபட்டார். வாழ்க்கைத் தேவைகளும் மதிப்புக்களும் இன்னும் உயர ஆரம்பித்தன.

தேவை அடுக்குகளை முறையாக அளவுடன் அடைந்தவர்கள் ஆளுமைச் சமநிலை அடைகின்றனர். நல்ல சூழலமைவு, தேவைகளுள் நிறைவு, சிறந்த உடல் நலம் இவை அடையப் பெற்றவர்கள் வாழ்க்கையில் தன்னிறைவு அடைகின்றனர் என்று மாசுலோ குறிப்பிடுகின்றார் (பாலுசாமி, நா, (ப.ஆ.),1991:708).

இச்கூற்றை அண்ணாவின் தேவை அடுக்குகளுடன் ஒப்பிட்டுப் பார்த்தால், அண்ணாவிற்கு அடிப்படைத் தேவைகள் சீராக, எவ்விதக் குறைவுமின்றி நிறைவேறிய நிலையையே காணமுடிகிறது. எனவே ஓர் ஆளுமைச் சமநிலை உள்ளத்தையே அண்ணாவின் அடிப்படைத் தேவைகளின் நிறைவில் உணரமுடிகின்றது.

## மதிப்புத் தேவைகள்

மாசுலோ குறிப்பிடும் சுயமதிப்பு, சுயமரியாதை, மற்றவர்கள் நமக்குக் கொடுக்கும் ஏற்றநிலை, புகழ், பெருமை போன்ற மதிப்புத் தேவைகள் அனைத்தும் அண்ணாவின் வாழ்க்கையில் தொடர்ந்து கிடைக்கப் பெற்று, நிலையாக வளர்ந்து, உயர்ந்த சமூக அடையாளத்தைக் கொடுத்தன, இதற்கு அவர் வாழ்வில் நடந்த இன்றியமையா நிகழ்ச்சிகள் சான்றுகளாக அமைகின்றன.

இளவயதிலிருந்தே பொது அறிவு நூல்களை அண்ணா. ஆர்வமுடன் படித்துவந்தார்; பேச்சுக்களைக் கேட்டு வந்தார். ஆதலால் இவர் பள்ளியில் எழுதிய பொது அறிவுக் கட்டுரை மற்ற கட்டுரையைக் காட்டிலும சிறந்த கருத்துக்களைக் கொண்டிருந்தது. ஆசிரியரால் சிறந்த கட்டுரையாளர் என இளம் வயதிலேயே பாராட்டப் பெற்றார்,

மற்றும் சட்டம், பொருளாதாரம், அரசியல் போன்ற துறைகளிலும் அறிவு முதிர்ச்சி பெற்றுத் தன்னிகரற்று விளங்கினார்.

“1935-இல் ஒய்.எம்.சி.ஏ.பட்டிமன்றத்தில் வார்தா கல்வித் திட்டம் பற்றி வெட்டிப் பேசி இராசாசியிடம் பாராட்டுப்பெற்றார்

1939 - இல் ‘நவயுகம்’ போன்ற வார இதழ்களில் நாட்டு நடப்பு, சமுதாய நிலையை அழகுத் தமிழ் நடையில் எழுதினார். அண்ணாவின் தொழிலாளர் நல அக்கறையைக் கண்டு நாடே வியந்தது.

1939-இல் தமிழ்நாடு தமிழருக்கே என்ற திட்ட விளக்க விழாவில் சிறப்புரையாற்றி மக்களை எழுச்சிபெறச் செய்தார்.

1943-இல் இராமாயணத்தை எரிப்பதா? வேண்டாமா? என்ற விவாதத்தில் எரிக்க வேண்டும் என்று சொல்லின் செல்வர் ரா.பி. சேதுப்பிள்ளை, செந்தமிழ் நாவலர் சோமசுந்தரபாரதியார்

போன்றோருடன் வாதிட்டு வென்றார். 1944-இல் நீதிக்-கட்சியைத் திராவிடர் கழகமாக மாற்றித் தீர்மானம் கொண்டு வந்தார்.

1946-இல் மதுரையில் கருஞ்சட்டைத் தொண்டர் படையைத் தொடங்கிவைத்தார். 1947-இல் சுதந்திர நாளைத்துக்கநாளாகக் கொண்டாட வேண்டும் என்ற பெரியாரின் கருத்துக்கு மாறு-பட்டார். ''(நாகை தருமன், (தொ.ஆ), 1968: 8-9), பெரியாரைத் தன் தலைவராகக் கொண்டாலும், தன் மனச்சாட்சிக்கு விரோ-தமான கருத்தை ஏற்றுக்கொள்ளாததுடன், பெரியாரிடம் அதன் பிறகும் நனி நாகரிகமாக நடந்துகொண்டார். இந்நிலை, சமூக நலன் கருதி அவர் மனத்திற்கு எது சரி என்று பட்டதோ அதன்படி நடந்த மனத்துணிவையும், எதையும் தன்னம்பிக்கை யுடனும் எதிர்நோக்கும் ஆளுமைத் தன்மையையே காட்டுகிறது.

''இதே போன்று 1949-இல் பெரியாரின் திருமணத்தைக் கேட்டு அண்ணா திகைத்தார். இந்தப் பிரச்சினையில் திடீர் முடிவுகள் செய்வது தீமை தரக்கூடியது. தோழர்கள் சிந்திக்க வேண்டும் என்று அண்ணா கழகத் தோழர்களை வேண்டிக் கொண்டு ஓர் அறிக்கை வெளியிட்டார்.

கூட்டு முயற்சி இல்லாது கொள்கை பரவாது. இலட்சிய-மும் உருவாகாது. ஏராளமான அளவில் வளரக்கூடிய விதத்தில் கொள்கையைப் பரப்பி, இலட்சியத்தை வெற்றிகரமாக ஆக்க நாம் தனித்திருந்து அவருடைய தலைமையை மட்டுமல்ல; லேபிளையே நீக்கிவிட்டுத் திராவிட முன்னேற்றக் கழகம் என்ற பெயருடன் பணியாற்றிவருவது தான் நல்ல வழி என்பது என் கருத்து என்று குறிப்பிட்டிருந்தார் (கலைஞர் கருணாநிதி, மு. 1975, 121-123), இந்நிகழ்ச்சியை எடுத்துக்காட்டும்போது கலைஞர் கருணாநிதி அண்ணாவை' எதற்கும் அசைந்து கொடுக்காத அண்ணா' என்றே சுட்டியுள்ளார்.

இந்நிலை எந்தத் தீராத சிக்கல் வந்தாலும் அதை ஆழ்ந்து சிந்தித்து, முடிவெடுக்கும் திறனையும், மனம் தளராது நின்று எதிர்நோக்கும் தன்மையையுமே, சமூகத் தூண்டலும், சமூகச் சூழலும் அண்ணாவிற்கு அளித்தன என்பதை உணரவைக்கிறது.

1949இல் தி.மு.க கழகத்தைத் துவக்கினார். 1949இல் ஆரியமாயை நூல் எழுதி வெளியிட்டார் 1951இல்அந்நூலுக்கு இருந்த தடையை மீறி எழுத்துரிமைப் போரில் வெற்றி பெற்றார் 1951இல் தி மு.க, மாநில மாநாட்டுத் தலைமை தாங்கிப் புகழ்பெற்றார். (நாகை தருமன், 1968:7).

இவ்வாறு மக்கள் மத்தியில் இவருக்குப் புகழும் பெருமையும் கிடைக்கக் காரணமாக அமைந்தவை:(1)பெரியாரின் அன்புத் துணையும் மிகுதியான சமூக ஈடுபாட்டுத் தூண்டுதல் உணர்வும்(2)அண்ணாவின் பேச்சாற்றல், எழுத்தாற்றல் தன்னலம் கருதாது, பொதுநலத் தொண்டில் கொண்ட ஈடுபாடும் எனலாம். இவை அண்ணாவிற்குத் தம் வாழ்க்கையின் மதிப்புத் தேவைகளை உருவாக்கித் தந்ததுடன் அவரின் சமூக மதிப்பை உயர்த்தவும் செய்தன.

காலப்போக்கில் அண்ணாவிற்குப் பெரியாருடன் கருத்து வேறுபாடு எழுந்தாலும் இயல்பாக இருந்த அண்ணாவின் சமூக நல நாட்டத்திற்கு, முதன் முதல் பாராட்டுதலையும் மிகுதியான சமூகத் தூண்டுதல் உணர்வையும் தந்தவர் ஈ.வெ.ரா.பெரியாரே ஆவார். ஈ.வெ.ரா. பெரியாரைத் தன் தலைவராக ஏற்றுக்கொண்டு அவரது சமூகச் சீர்திருத்தக் கொள்கை ஈடுபாட்டுடன் தானும் உழைத்ததால், அண்ணாவிற்கு, ஈ.வெ.ரா. பெரியார் தொடக்க காலத்தில் ஒரு முன்மாதிரியான தந்தை உருவமாகத் (Father Figure) திகழ்ந்துள்ளார் எனக் கருதவும் இடமுண்டு,

## தன்நிறைவுத் தேவையும் அண்ணாவின் படைப்பாற்றல் வெளிப்பாடும்

''தன்னிறைவுக் கோட்பாடு' என்பது தன் திறமைகளை முழுமையாக வெளிப்படுத்தி, அவற்றினால் அவனும் மற்றவர்களும் பயன் பெற்றுள்ளனர் என்ற உணர்வினை அடையவிரும்பும் விருப்பத்தைக் குறிக்கும்'' என்று மாசுலோ குறிப்பிடுகின்றார். (பாலுசாமி, நா.(ப.ஆ.), 1919:707)

மேற்குறிப்பிட்ட கருத்து அண்ணாவிற்கு மிகவும் பொருந்தும், இளவயதிலிருந்தே அண்ணாவிற்குப் பொதுப்பணியில் ஆர்வம் அதிகம். இந்த ஈடுபட்டிற்கேற்பத் தந்தை பெரியார்

அவருக்குத் தலைவராக அமைந்தார். இதன் பிறகு அண்ணா தி.க. கட்சியின் கொள்கைக் கருத்துக்களைப் பரப்புவதையே உயரிய நோக்கமாக அமைத்துக் கொண்டார். ஆதலால் தமது படைப்புக்களைத் தமது நோக்கின் வெளிப்பாட்டுக் களமாகத் தேர்ந்தெடுத்தார். தன் மனக்கருத்துக்களை மக்களிடையே பரப்பினார். சமுதாயம் அவர் கருத்துக்களை வரவேற்றது. விழிப்புணர்வு கொண்டு பயன்பெற்றது. பாராட்டியது. தனது இலட்சியத்தின் வழி கண்ட சமுதாயப் பயன்பாட்டில் தானும் தன்னிறைவு பெற்றார்'

அண்ணாவின் முதல் சிறுகதையான 'கொக்கரக்கோ' 1934-இல் ஆனந்த விகடனில் வெளிவந்தது. 1944-இல் அண்ணா நீதிக்கட்சியைத் திராவிடர் கழகமாக மாற்றித் தீர்மானம் காண்டு வந்தார்.

''திராவிடர் கழகம்' தோற்றம் கண்ட சூழலில் தான் அண்ணா சிறுகதைகளை அதிகம் எழுதினார். மனித நலத்திற்குக் கேடுவிளைவிக்கும் தீங்கைக் களைந்தெறியும் கொள்கை பரப்புக் கருவிகளாகவே தனது கதைகளைத்தேர்ந்தெடுத்தார். எத்தகைய எதிர்ப்புக்களையும் கண்டு அஞ்சாது எதிர்த்திடும் ஆற்றலைப் பெறத் தூண்டுதலையே இலக்கிய நோக்கமாகக் கொண்டிருந்தார்'' என்பர் (ஆறுமுகம், ப., 1988 : 35).

ஆய்விற்கு எடுத்துக்கொண்ட சமூகக் கதைகள் முழுதும் 1946 இலிருந்து 1953 வரை உள்ள காலகட்டத்தில் எழுதப்பட்டவை. இவை சமூகச் சீர்திருத்தக் கருத்துக்களையே எதிரொலிக்கின்றன. ஏழை பணக்காரர்களிடம் படும் அவலநிலை,ஏழைகளின் வறுமைநிலை, கலப்பு மணம், சாதி ஒழிப்பு, பொருந்தா மண எதிர்ப்பு, கடவுள் மறுப்பு, மூடநம்பிக்கை ஒழிப்பு, பிராமணிய எதிர்ப்பு, பகுத்தறிவையும் சுயமரியாதை உணர்வையும் தூண்டுதல் முதலிய கருத்துக்களே முன்னர் குறிப்பிட்ட கதைகளில் மையப்படுத்தப்பட்டுள்ளன.

மேற்குறிப்பிட்ட கருத்துக்களே சமூகச் சீர்திருத்த நோக்கில் அண்ணாவின் நிலையான நடத்தைக் கூறுகளாக அமைந்துள்ளன. தம் சீர்திருத்தக் கருத்துக்களை வெளிப்படுத்தும் தொனியில்தான் அண்ணாவின் ஆளுமைச் சிறப்புக் கூறுகளை அறிய முடிகின்றது.

*ஏழை, பணக்காரர்களிடம் படும் அவல நிலை*

ஏழைகளைச் செலவந்தர்கள் தம் பணக்காரத் தன்மையால், மிகவும் கீழாக நடத்தும் அவல நிலையையும், செல்வந்தர்களின் அதிகாரப் போக்கினையும் ஏழை × பணக்காரர் என்ற முரண்பட்ட நிலையில் வைத்து ஒன்பது கதைகளில் சித்திரித்திருக்கின்றார்.

ஏழைகள் என்ற ஒரே காரணத்தால் பணக்காரர் முன் எதுவும் எதிர்த்துப் பேசமுடியாத அவல நிலையை ராஜாடி ராஜா, சூதாடி போன்ற சிறுகதைகளிலும், தன் நியாயமான ஆசைகளைக் கூடக் கூறமுடியாத நிலையையும், தனக்குச் சொந்தமான பொருளைக் கூடத் தக்க வைக்க இயலாத இயலாமையையும் 'செவ்வாழை' சிறுகதையில் அழகாகச் சித்திரித்துள்ளார்.

மாரி சேரியில் வாழும் ஏழை, அதுவும் பணக்காரக் குருக்கள் வாழும் அக்கிரகாரத்திற்குள் நுழையத் தகுதியற்றவன் என்று ஆண்டாண்டு காலமாய் விதித்திருந்த காரணத்தினால் ஏழையான மாரி, குருக்களினால் தண்டிக்கப்படுகின்றான். செய்யாத குற்றத்தைச் செய்ததாகப் பட்டம் கட்டப்படுகின்றான்.

அடித்தவர்கள் என் உடம்பை மாத்திரம் அடிக்கவில்லை, என் மனசு புத்தி எல்லாவற்றையும் புண்ணாக்கி விட்டார்கள். நான் திருடவில்லை. ஆனால் அதைவிட அதிகமாகத் திருடினால் கிடைக்கும் தண்டனையை விடப் பன்மடங்கு தண்டனை அனுபவிச்சேன். வெளியே தலை காட்டினால் பழியும் பேச்சும். ஆனால் வீட்டிலே பசியும் கண்ணீரும். திருட்டுப் பட்டத்தை ஏற்றுக் கொண்டேன். இப்போது பசி நீங்கியது நானா திருடனா! ராஜாடி ராஜா! என்று ஏழைக் குமுறலை ராஜாடி ராஜா சிறுகதை

யில் நம் கண்முன் நிறுத்துகிறார் அண்ணா. இக்கதையில் பணக்காரக் குருக்களால் பலர்முன் மனத்தில் பட்ட அடியும், வேதனையும், அவமானமும் மாரியின் தன்மதிப்பைத் தூண்டிவிட, அவன் திருடனாகவே மாறி வறுமையின்றி வாழ்கின்றதாய்ப் படைத்துள்ளார்.

இக்கதையின் வழி சமுக எதிர்ப்புகளுக்கிடையில், தான் நேர்மையுடன் வாழ எதற்கும் அஞ்சாது துனிவுடன் போராடும் திறனையும், தன் மனத்திற்குச் சரி என்று எது பட்டதோ அதைச் செய்யும் அஞ்சா நெஞ்சும் வேண்டும் என்பதைச் சமூகத்திற்கு எடுத்துக்காட்டுகின்றார்.

மேலும்''சோணாசலம்''கதையில் சமுதாயத்தைச்சீர்கேடடையச்செய்யும் வரதட்சிணைக் கொடுமை ஒழிய வேண்டும் என்ற சமுதாய மாற்றத்தைக் கோடிட்டுக் காட்டுகிறார். இதுபோன்று ''சுடுமூஞ்சி சிறுகதையில் பொருந்தா மணத்தினால் பாதிக்கப்பட்ட பெண்ணின் மன உணர்வையும் குடும்பத்தில் தாம்பத்திய வாழ்வின் நிறைவின்மையையும் வெளிப்படுத்தியுள்ளார்.

*கலப்பு மணம்*

சுயமரியாதை இயக்கம் அறிவு விடுதலை இயக்கமாகும், சுயமரியாதை இயக்கம் கலப்பு மணம், விதவை மணம், சுருக்க மணம், தீண்டாமை விலக்கல், வகுப்பு உரிமை, மூடப்பழக்கங்கள் ஒழிதல், கோயில் கட்டுவதையும் திருவிழாக்கள் நடத்துவதையும் நிறுத்தி அதன் பணத்தைக் கல்விக்கும், ஒழுக்க நலக் காரியங்களுக்கும் செலவிடுதல் என்ற நிலைகளில் வளர்ந்து வந்துள்ள 'இயக்கம் என்பர்' (பொன்மாறன், 1988:46-47).

அண்ணா 'குமரிக்கோட்டம்' என்ற கதையைச் சுயமரியாதைக் கொள்கைக் கருத்துக்கள் அனைத்தையும், தான் விரும்பும் சமுதாய மாற்றம் முழுமையையும் வெளிப்படுத்திக் காட்ட ஒரு கருவியாகத் தேர்ந்தெடுத்து அமைத்துள்ளார்.

இக்கதையில் வரும் குழந்தைவேல் செட்டியார் பெரிய வாளுடைய காரியங்களை நாசம் செய்வதையே பிரமாதமான சீர்திருத்தம், என்கிறது ஒரு ராட்சசக் கூட்டம் என்ற எண்ணம் கொண்டவர்; ஜாதியப் பீடையை ஆண்டவன் ஏற்பாடு என்று விடாப்பிடியாகக் கொண்டு பகவத் கைங்கரியம் என்ற பெய-ரால் சொத்தை விரயம் ஆக்கிக் கொண்டிருப்பவர் (அண்ணா-துரை, சி.என், 1969: 71) கலப்பு மண ஈடுபாட்டினால் தன் மகனை வீட்டைவிட்டு விரட்டியவர், இத்தகைய பழமை-வாதியான செட்டியாரையே, அவரது காதல் லீலைகளால் அவரையே கலப்பு மணமும் செய்ய வைத்து, தனது மகனின் கலப்பு மணத்தையும் ஏற்க வைத்து, சுயமரியாதை இயக்கவாதி யாகவே மாற்றிக்காட்டி, தனது சமுதாய நோக்கத்தை இங்கு அண்ணா நிறைவேற்றிக் கொள்கிறார்.

பழனியைச் சீர்திருத்த வாதியாகவே அறிஞர் அண்ணா இக்கதையில் படைத்திருக்கிறார். பழனியின் பிரச்சாரத்தைக் கேட்டு, பெரும்பாலான மக்கள் அவனுக்கு ஆதரவு தர முன் வந்தனர். ஜனசக்தி பழனி பக்கம் குவிவது கண்டு, இது போன்ற அறிவுக்கு விருந்தான பிரசங்கத்தை நான் இதுவரை கேட்டதே இல்லை, உன்னை மகனாகப் பெற்ற நான் உண்மையிலேயே பாக்கியசாலி என்று பூரிக்கிறார் குழந்தைவேலு செட்டியார் (அண்ணாதுரை, சி.என்., 1969:93).

குழந்தைவேலு செட்டியாரின் மன மாற்றத்தைக் கண்டு வைசிகர் குலமே அவரை எதிர்க்கிறது. ஆனால் எதற்கும் கலங் காத செட்டியார், சுயமரியாதை இயக்கவாதியாகவே மாறிவிடு கிறார். தம் சொத்தைப் பாழாக்கிக் கோயில் கட்டி, குலம், ஜாதி பேசி சமூகத்தைக் குலைத்து வரும் வைதிகரிடம் கொடுக்க இருந்த எண்ணத்தை மாற்றுகிறார். கடவுளுக்குக் கட்டிய குமாரக் கோட்டம் ஜாதி பேதம் ஒழிந்த வாழ்க்கைக் கூடமாக, சுய-மரியாதைச் சங்கக் கட்டிடமாக, சுற்றுப் பிரகாரம் பாட்டாளி மக்கள் குடி இருக்கும் இடமாக, அபிசேகம் நடப்பதற்கு பதில் அன்பும் அறிவும் பரப்பும் கல்விக்கூடமாக, பிரச்சார ஸ்தாபன-மாக மாறுகிறது.

இங்குச் சீர்திருத்தவாதி பழனியின் பிரச்சாரக் குரல், பழனிக்கிருந்த வரவேற்பு, அவன் பேச்சைக் கேட்டு ஜனங்கள் அவன் பக்கம் குவிந்த நிலை சுயமரியாதைப் பற்று நிரம்பிய, சமுதாய மாற்றம் விரும்பிய தமது மேடைப் பேச்சினால் மக்களைக் கவர்ந்த அண்ணாவையே மனக்கண்முன் நிறுத்துகிறது. இக்கதையில் கலப்பு மண ஏற்பு, ஜாதிப்பீடை ஒழிப்பு, செல்வந்தரின் அதிகார ஒடுக்கம், தீண்டாமை விலக்கல், சுயமரியாதை ஏற்பு, கடவுளை மற மனிதனை நினை, என்ற சுயமரியாதைக் கருத்துக்களைப்பரப்பியதுடன், அக்கொள்கை எதிர்ப்பாளர்களையே இறுதியில் ஏற்க வைத்து, சீர்திருத்த வாதியாக்கி, சமுதாயப் பயன்பாட்டின் வழித் தன்னிறைவு அடைகிறார் அண்ணா.

இதே போல வண்டிகாரன்மகன் சிறுகதையில் வரும் ஏழை சொக்கலிங்கத்தின் பாத்திரப் படைப்பில், 1. அன்னையிடம் அன்பு கொண்ட அண்ணா, 2. தனக்கு விரோதமான சமுதாயக் கேடுவிளைவிக்கும் எதையும் எதிர்க்கும் அண்ணாவையே நாம் காணமுடிகிறது.

சொக்கலிங்கம் வெள்ளைக்காரத் துரையிடம் படித்த காரணத்தினால், அவனுக்கு ஜமீன் வீட்டில் வேலையும், சமமான வரவேற்பும் கிடைக்கிறது. ஆனால் ஜமீன்தாரரின் வேலையாள் சொக்கலிங்கத்தின் தந்தை. இவர் ஜமீனை எதிர்த்துப் பேசிய பல காரணங்களினால் ஜமீன்தாரரின் உறவினரால் சுட்டுக் கொல்லப்படுகிறார்.

''ஆளும் இனம் அடிமை இனத்தைச் சுட்டது; என்னதான் அப்பா சொன்னாலும் நான் பெற்றோரைக் காட்டாது கபட நாடகமாடியது என் சுயநலம்; என் மடமை; சமுதாயத்தில் கட்டிக்கொண்டுள்ள குருட்டு அறிவும் மடமையும் ஒழியவேண்டும், ... ஜாதி சமயம் செல்வம் என்பவற்றின் பேரால் இருப்புப் பிடியில் இருந்துவரும் மடமையைத் தொலைத்திட நான்பணியாற்றத் தீர்மானித்து விட்டேன்'' (அண்ணாதுரை, சி.என்., 1969:76) என்று சொக்கலிங்கத்தை அண்ணா பேச வைக்கிறார்.

திருப்பூரில் முதன் முதல் செயகுந்தர் முதலியார் இளைஞர் மாநாட்டில் ஈ.வெ.ரா பெரியாரும், அண்ணாவும் சந்திக்கின்றனர் அண்ணாவின் மாநாட்டுப் பேச்சு, பெரியாரை ஈர்க்கிறது. தமது சீர்திருத்தக் கருத்துக்களைப் பரப்ப மக்களின் நல்லாதரவைப் பெற்றவர் அண்ணா என்று பெரியார் மனம் பூரிக்கிறார், அண்ணாவைத் தம்முடன் தமது சமூகப் பணியில் ஈடுபடுமாறு தூண்டுகிறார். அண்ணாவும் ஈ.வெ.ரா.பெரியாரைத் தலைவராக ஏற்றுத் தனது கொள்கைப் பணியிலே முழு மூச்சாகச் செயல்படுகிறார். அத்தகைய அண்ணாவையே சிறுகதைகளில் பல பாத்திரங்களில் காணமுடிகின்றது. சரியான சமூகச் சூழலில் ஈ.வெ ரா. பெரியாரின் சமூகத் தூண்டலும் - சமூக வரவேற்பும் அண்ணாவின் ஆளுமைத் திறனை வளர்க்க அடிகோலின என்பது இங்குச் சுட்டத்தக்கது.

மேலும் தமது கதைகளில் செல்வந்தர்களிடம் ஏழை பட்ட அடி, அவமானம், கீழ்த்தரமாக நடத்திய முறை ஆகியவற்றால் பாதிக்கப்பட்ட இளைஞர்களையே அஞ்சா நெஞ்சுறுதியும்,எதிர்ப் பாற்றலும் கொண்ட சீர்திருத்த வாதியாகப் படைத்துக் காட்டுகிறார்.

ஏழைகளின் அவல நிலையைச் சுட்டியதுடன் ஜமீன்தார்களின் காமலீலைகளையும் அறிஞர் அண்ணா சுட்டத் தவறவில்லை இதற்குக் காரணம் இவர் செல்வந்தர்கள் மேல் கொண்ட வெறுப்பே ஆகும்.

1946-இல் நீதிக் கட்சியை தி.க. கட்சியாக மாற்றும்போது 5 தீர்மானங்களை கொண்டு வந்தார். அவற்றுள் ஒன்று ஆங்கில ஆட்சியில் தரப்பட்ட சர் ராவ் பகதூர், திவான் பகதூர் ராவ் சாகேப் போன்ற கௌரவப் பட்டங்களைத் துறக்க வேண்டும் - என்பதாகும் (பொன்மாறன், 1988:92). அப்பொழுது நீதிக்கட்சியில் இருந்த ஏமாற்றும் எத்தர்களை அத்தொழிலதிபர்களின் அதிகாரப் போக்கினை அடியோடு வெறுத்தார்.

இந்த மனநிலை, தன்முனைப்பு தான் செல்வந்தர்கள் — ஜமீன்தார்களின் அதிகார வர்க்கத்தை ஒடுக்கிக் காட்டுவதாகச் சிறுகதைகளில் வெளிப்படுகிறது எனலாம்,

மேலும் செல்வந்தர்கள் என்றால் ஒழுக்க சீலர்கள் அல்லர்; ஏழைக் கன்னியரை காமத்தீக்கு இரையாக்கும் கயவர்கள், ஆளும் வர்க்க முரண்பாட்டால் பிறரை அடிமைத் தனமாக்கும் எத்தர்கள், கடவுள் பெயரால் ஊரை ஏமாற்றுபவர்கள் என்ற கருத்தாக்கங்களைப் பெறமுடிகின்றது.

*கடவுள் மறுப்பு*

தி.க. கொள்கையே பகுத்தறிவு வாதத்தை அடிப்படையாகக் கொண்டது. கடவுள் இல்லை அவருக்குச் செய்யும் பூஜைகள் எல்லாம் வீண், என்பது அதன் தாரக மந்திரம்.

இங்கும் அண்ணா குமரிக்கோட்டம், சொர்க்கத்தில் நரகம், வழக்கு வாபஸ், கருப்பண்ணசாமி பேசுகிறார். என்ற கதைகளில் கடவுள் மறுப்பை வன்மையாகவும் அதே நேரம் கேலியாகவும் பேசி எள்ளி நகையாடுகின்றார். தமது கடவுள் மறுப்பிற்கான கருத்துக்களை இக்கதைகளின் மூலம் நியாயப்படுத்துகிறார்.

வழக்கு வாபஸ் கதையில் செட்டியார் கடையில் வேலை பார்த்த வேலையாள், கடையிலுள்ள கற்பூரத்தை எடுத்து கடவுளுக்கு ஏற்றுகிறார். கற்பூரத்தைத் திருடிய குற்றத்திற்காக, வழக்குத் தொடரப்பட்டு, கோர்ட்டுக்குச் செல்கிறார். அங்கு அவரது குற்றம் நியாயப்படுத்தப்படுகிறது.

இங்கு அண்ணா தமது கடவுள் மறுப்புக் கொள்கையைப் பழைய புராணக் கதைகளை, எடுத்துக்காட்டி நியாயப்படுத்துகிறார்.

இங்கு அண்ணா பக்தர்களின் நிலையை, சமூகம் ஆண்டாண்டு காலமாக பல கெட்ட செயல்களுக்குத் துணைபுரிந்த புராணக்கதைப் போக்கினை புராணக் கருத்துக்கள் மக்களிடையே பரவி நின்ற மாயையை, பக்தர்கள் என்ற போலித்தனத்தைப் பரிகாசம் செய்கிறார்.

"முதலில் இந்நாட்டில் அத்தகைய பழைய குப்பைகளைப் பற்றிப் பிரச்சாரம் செய்வதைத் தடுக்க வேண்டும். படித்த நாமும் அந்தப் பழைய சேற்றிலே புரண்டால் படிக்காத கூட்டம்

அவ்வளவு படித்தவரே புராளுகிறாரே என்று கும்பலாகக் குட்டை-யில் விழுகின்றன. இந்த மக்களைத் திருத்த நாம் முதலில் திருந்த வேண்டும்'' என்கிறார் (அண்ணாதுரை, சி. என்., 1969:123).

## சாமியார் லீலைகள்

கடவுள் பெயரால் பக்தர்கள் போடும் போலித் தனத்தை, அப்போலித்தனத்தில் உள்ள கயமைத் தனத்தை, மடாதிபதி-களின் கபட நாடகத்தை, வேலை போச்சு, தேடியது வக்கீலை என்ற இரண்டு கதைகளில் அழகுற எடுத்துக் காட்டுகிறார்.

தேடியது வக்கீலை என்ற கதையில் சாமியாரின் காதல் லீலைகளை அம்பலப்படுத்தி, இதுநாள் வரை சாமியாரை நம்பிய படிக்காத பாமர மக்களை விழித்தெழச் செய்து, சாமியாரின் கபட நாடகத்தை பாமர மக்கள் மூலமே உலகிற்கு வெளிச்சம் போட்டுக் காட்டுகிறார்.

'ஆளுமை' என்பது தன்முனைப்பின் வழிப்பட்டது என்பர் உளவியலார். மேற்குறிப்பிட்ட கதைகளில் எல்லாம் தான் சொல்லவரும் எக்காரணத்தையும் சரியான ஆதாரத்துடன் யாரும் மறுக்க முடியாது நியாயப்படுத்தும் விடாமுயற்சியையும், எதி-ராளியையும் தன் கருத்தை ஏற்க வைத்து வெற்றி காணும் தன் முனைப்பையும் எடுத்த காரியத்தைப் பின்வாங்காது முடிக்கும் தன்னம்பிக்கையையும் காணமுடிகிறது.

## பகுத்தறிவு விழிப்புணர்வும் முடநம்பிக்கை ஒழிப்புணர்வும்

சமூக மூட நம்பிக்கைகளை ஒழித்து, பகுத்தறிவு உணர்வு-டன், எதையும் காரண காரிய இயைபுடன் சிந்திக்க வைப்பது-தான் பகுத்தறிவுக் கொள்கையின் அடிப்படை.

இங்கு அண்ணா, பலாபலன், கதையில் ஜாதகம் பொய் என்பதை மருத்துவம் × சோதிடம் என்ற முரண்பட்ட நிலையில் வைத்துச் சித்திரித்துக் காட்டுகிறார்.

இது போல 'பேய் ஓடிப்போச்சு' கதையில் கதைத் தலைவி செல்விக்குப் பிடித்தது வெறும் பேயல்ல; சந்தேகப் பேய், அது

வாழ்க்கையில் தலை நீட்டக்கூடாது. வாழ்க்கை நலமுடன் இருக்க ஒருவரை ஒருவர் நம்பும் திடமான தன்னம்பிக்கையில் தான் வாழ்க்கையே இருக்கிறது என்று சமுதாய உணர்வினைத் தொட்டுக் காட்டுகிறார். மக்களிடம் மூடநம்பிக்கை ஒழிய வேண்டும் என்று வருந்துகிறார்.

*சமூக மோசடி ஒழிப்பும் பாட்டாளிவர்க்க ஈடுபாடும்*

ஏழை, லட்சாதிபதி என்ற இரண்டு சிறு கதைகளில் செல்வந்த வியாபாரிகளின் வியாபாரத்தந்திரம், சமூகத்தை ஏமாற்றும் வியாபார மோசடி, கள்ளக்கடத்தல் முதலியவை ஒழிய வேண்டும் என்பதை எடுத்துரைக்கின்றார்.

எடுத்துரைக்கும் அளவில் மட்டும் நிற்காது, அதற்குத் தீர்வும் கூறுகிறார். 'ஏழை' சிறு கதையில் வரும் செல்லப்பன் காவல் துறையினரால் கைது செய்யப்படுகிறான். செல்வந்தச் செட்டியார் கள்ளக் கடத்தலில் சம்பாதித்த பணத்தைத் தந்திரமாகக் காப்பாற்றினோம் என்று எண்ணி, ஒரு பெண்ணிடம் ஏமாறுகிறார்.

இவ்வாறு எச்சிறுகதையை எடுத்தாலும் தான் எடுத்ததை செவ்வனே முடித்துச் சமூகத்தினரை ஏற்க வைக்கும் அண்ணாவின் ஆற்றல் வெளிப்பாட்டைக் காணமுடிகிறது.

பாட்டாளி வர்க்கத்தினரைப் பற்றிய தனது மனப்பாங்கை 'ஏழை' சிறுகதையில் வெளிப்படுத்தியுள்ளார். 'தொழிலாளியின் உழைப்பு தானே உண்மையான மூலதனம்; பணம் என்னசெய்யும், மண்ணைத் தோண்டுமா? இரும்பை உருக்குமா! தொழிலாளர்கள் திடகாத்திரமாக இருந்தால்தான் உழைப்பின் பயன் முழுதும் கிடைக்கும்' என்று தொழிலாளர் நலன் அக்கறையைக் கோடிட்டுக் காட்டுவதுடன், முதலாளிவர்க்கம் தொழிலாளர்களின் உழைப்பை மதிக்க வேண்டும்'' என்று தொழிலாளர்களின் மேன்மையையும் குறிப்பிடுகின்றார் (அண்ணாதுரை, சி.என். 1980:127).

இவை தவிர அண்ணாவின் சிறு கதைகளில், அழகுணர் தேவைகளும் இடம் பெற்றுள்ளன. 'புதிய பொலிவு' என்ற கதையில் கிராமம் X நகரம் என்ற முரண் நிலையில் வைத்து, கிராம-

மத்தியிலுள்ள இயற்கையின் சிறு சிறு அசைவுகளிலும் அண்ணா தன் மனத்தைப் பறிகொடுத்த நிலையை நகரத்து இளைஞன் 'டைரக்டர் வடிவேலன்' என்ற பாத்திரத்தின் வாயிலாய் தானே பேசுகிறார் அண்ணா கதைகளில் எந்த ஒரு கருத்தைச் சொன்னாலும்,

i) ஏழை × பணக்காரர்

ii) ஆளும் வர்க்கம் × அடிமை வர்க்கம்

iii) கிராமம் × நகரம்

iv) சொர்க்கம் × நரகம்

என்ற முரண்நிலைகளில் வைத்து, கருத்துக்களை அழகுறச் சித்திரித்துள்ளார், இவ்வுத்தி வழி தனது எதிர்ப்பாற்றல் போக்கினையும் நியாயப்படுத்தி மறுக்கவொண்ணா நிலையைப் படிக்கும் வாசகர்களிடையே ஏற்படுத்தி விடுகின்றார். தான் சொல்லவிழையும் கருத்தையும் மற்றவர்களை ஏற்றுக்கொள்ள வைக்கும் ஒருதனித்தன்மையை இவரிடம்காணமுடிகிறது.

## பிராமணிய எதிர்ப்பு

அண்ணாவின் சீர்திருத்தக் கருத்துக்களுள் அடிமனத்தில் ஊறிக்கிடந்தது பிராமணிய எதிர்ப்பாகும் அண்ணாவின் வரலாற்றுச் சிறுகதைகள் முழுதும் பிரமணர்களின் சூழ்ச்சியையே சுட்டுகின்றன இக்கட்டுரைக்கு பயன்பட்ட சமூகச் சிறுகதைகளில் சொல்றதை எழுதேண்டா, ராஜாதி ராஜா, குமரிக்கோட்டம், வழக்கு வாபஸ் போன்ற கதைகளில் பிராமணிய ஆதிக்கத்தை தீண்டாமைத் தனத்தை அடியோடு ஒழிக்க வேண்டும் என்ற பிராமணிய எதிர்ப்புச் சிந்தனைகள் வலியுறுத்தப்படுகின்றன.

இதுவரை விவாதித்த கருத்துக்களிலிருந்து அண்ணாவின் தேவை அடுக்குகளையும் இயங்கு நிலைகளையும் பின்வருமாறு அட்டவணைப்படுத்தலாம்;

அண்ணாவின் தேவை அடுக்கு அமைவுகளும் ஆளுமை இயங்கு நிலைகளும்

| தேவைகள் | குறை நிலை | நிறை நிலை | சான்றுகள் |
|---|---|---|---|
| உடல்சார் தேவை | | உடல் நலமும் மன மகிழ்வும் குறைவின்றியிருத்தல் | பள்ளிப் படிப்பின் இறுதிநிலைவரை வறுமையை உணராத மனம், சிற்றன்னை அன்பு நல்ல உணவுகிடைக்கப் பெற்றமை |
| காப்புத் தேவை | பள்ளி இறுதி நிலையில் பொருளாதாரத் தேவை | அரசு உதவி மூலமும் எழுத்தர் வேலை மூலமும் பொருளாதார நிறைவு ஏற்படல் | நிறை சம்பளம், காப்புணர்வு பற்றிய அச்சம் நீங்குதல், படிப்பு தொடர்தல் |
| அன்புத் தேவை | | தொத்தாவின் அன்பு பள்ளி ஆசிரியரிடம் பெற்ற பாராட்டு திருமண உறவு பெரியாரின் அன்பு நிறைவுணர்வு நிறைந்த உள்ளம் அமைதல் | அறிவுக் கூர்மையால் பலரால் மதிக்கப்படல், பாராட்டப்படல், முதல் மாணவராகத் திகழ்தல், சமூகப் பொது நல நாட்டம் ஏற்படல் |
| மதிப்புத் தேவை | | தன்னைய பற்றிய திறமையில் முழு நம்பிக்கை. பெரியாரின் தூண்டுதல் சமூக ஈடுபாடு சமூக அடையாளம் வரவேற்பு, பாராட்டு ஏற்படல் | வீட்டுப் பணியைப் புறக்கணித்து விட்டுச் சமூகச் சீர்திருத்தத்தில் அதிக நாட்டம் கொள்ளுதல், நிறைவான மனத்தினால் ஆளுமைச் சமநிலை அடைதல் |
| தன்னிறைவுத் தேவை | சமூகத்தைச் சீர்திருத்த வேண்டும் | உள்ளார்ந்த திறன்களைப் பயன்படுத்துதல் சமூக ஈடுபாடு, படைப்பாற்றல் மிகுந்த வாழ்வை மேற்கொள்ளுதல் | நிகரற்ற சமூக மதிப்பும் பாராட்டும் பெற்றுச் சமூகத்தில் உயர்வு பெற்றது சமூகச் சீர்திருத்தத்தைப் பரப்பும் தன் முனைப்பு, இலட்சியம் நிறைவேற படைப்புகளை ஒரு கருவியாக்குதல் |

''மனிதன் மனிதனாக வாழ வேண்டும் மனிதனுக்கு உண்ண உணவு, உடுக்க உடை, இருக்க இடம் தேவை. மனிதனுக்கு வாழ்வின் முதல் இலட்சியம் தனது முதல் தேவைகளைப் பெறுவது தான், பெற்று வாழ்வது தான்.

தனி மனிதனது தரமும் பண்பும் மட்டுமே போதாது. சமுதாயம் மனித இனம் சீர்பட திருந்த, நல்வாழ்வு வாழ மனிதனை மனிதனாக வாழ வைத்திடும் நல்ல நிலை, நல்ல சூழ்நிலை தேவை மிக மிகத் தேவை என்று தான் கூறுகின்றேன்'' (நாகை தருமன், 1968:30—31) என்று அண்ணாவும் மனிதத் தேவைகளின் அடிப்படையில் சிந்தித்திருக்கின்ற விதம் நம்மை வியக்க வைக்கிறது.

*தேவை அடுக்குகளிலிருந்து அறியப்படும் ஆளுமை வளர்ச்சிப் படிநிலைகளும் ஆளுமைச் சிறப்புக் கூறுகளும்*

அண்ணா சாதாரணக் குடும்பத்தில் பிறந்திருந்தாலும் இள வயதிலிருந்த சமூக ஈடுபாடும், பொது அறிவு நாட்டமும் அவர் மனத்தில் நிரம்பியிருந்தன. இத்தன்மைகள் நல்ல சமூகச் சூழலில் இவரது ஆளுமைத் திறன்களை வளர்க்கத் துணைபுரிந்தன.

அண்ணாவிற்கு பள்ளி இறுதிநிலை வரை வறுமையைச் சிந்தித்துப் பார்க்க இடமில்லாத வளமான வாழ்வு அமைந்திருந்தது. எனினும் பள்ளிப்படிப்பு முடியும் தருவாயில் எழுந்த பொருளாதாரத் தேடல் அண்ணாவிற்கு, காப்புத் தேவைகளுள் ஒன்றாக அமைந்தது. இத்தேடல் சில காலம் தான் என்றாலும், இவரது மனம் ஏழைகளின் வளமற்ற வாழ்வில் அதிகம் ஈடுபட்டிருந்ததை இவரது கதைகளின் மூலம் அறிய முடிகிறது. இதற்கு மற்றொரு அடிப்படைக் காரணம் நீதிக்கட்சியிலிருந்த காலத்திலிருந்து இவர் தம் வாழ்வில் கண்ட பல செல்வந்தர்களின் அதிகாரப் போக்கின் மீதும், பிறரை ஏமாற்றும் எத்தர்களின் மீதும் கொண்ட வெறுப்புமாகும்.

இவரது வாழ்வில் ஒவ்வொரு முன்னேற்றப் படியிலும் சிற்றன்னையின் அன்பும் தூண்டுதலும் இவருக்கு ஊக்கம் அளித்தன. பெரியாரின் துணையும் சமூகத் தூண்டுதலுணர்வும்

அண்ணாவிற்குச் சமூக ஈடுபாடு, அறிவுக்கூர்மை, எழுத்தாற்றல், பேச்சாற்றல் முதலியவை மக்களிடம் செல்வாக்கை ஏற்படுத்தின. அப்பொழுது அண்ணாவின் இலட்சியம் திராவிடக் கழகத்தின் சமூகச் சீர்திருத்தக் கருத்துக்களைச் செயல்படுத்துவதே ஆகும். இதைத் தன் படைப்புக்களில் வெளிப்படுத்தியும், நிறைவேற்றி-யும் சமூகப் பயன்பாடு அடையச் செய்து மனநிறைவு பெற்றார். இவை அண்ணாவின் தேவை அடுக்குகள் சுட்டும் வளர்ச்சிப் படிநிலைகள் ஆகும்.

ஆளுமைச் சிறப்புக் கூறுகள்

1) சமூக ஈடுபாடு
2) பொது அறிவு நாட்டம்
3) எழுத்தாற்றல், பேச்சாற்றல் மூலம் மக்களைக் கவரும் திறன்
4) பிறருக்காக அன்பு காட்டி, இரக்கப்படும் மனப்பாங்கு
5) சமூக அங்கீகாரம் பெற விரும்புதல் குடும்பத்திற்கு முதன்மை தராது, சமூகத்திற்கு முதன்மை தரும் போக்கு
6) எதிர்ப்பாற்றல் போக்கு
7) தன் மனம் விரும்பியதை அஞ்சாது வெளியிடும் துணிவு
8) எடுத்ததை நிறைவேற்ற முடியும் என்ற தன்னம்பிக்கை
9) சிக்கலில் ஆராய்ந்து முடிவெடுக்கும் போக்கும் எதற்கும் அசைந்து கொடுக்காத மனத்திண்மையும்
10) தன் கருத்தைக் காரண-காரியத்துடன் நியாயப் படுத்தும் தனித்திறன்.
11) எதையும் பாராட்டத்தக்கதாக செய்யும் ஆற்றல்
12) தன் இலக்குகளை நிறைவேற்றத் தன் முனைப்புடன் எப்-பொழுதும் செயலாற்றும் திறன்.
13) கிராமத்து அழகுணர்வில் ஈடுபாடு
14) நகைச்சுவையுடன் சமூக அவலங்களை எடுத்துரைக்கும் அங்கதப் போக்கு.

போன்றவற்றை அண்ணாவின் ஆளுமை வளர்ச்சிப் படிநிலைகளிலிருந்து உய்த்துணர்ந்த ஆளுமைச் சிறப்புக் கூறுகளாகக் கூற இடமுள்ளது. தி.மு. கழகம் ஆரம்பித்த பிறகு காணலாகும் அண்ணாவின் செயல்பாட்டுத் தன்மைகளை எல்லை கடந்த தேவைகள் என்ற நிலையில் வைத்துப் பார்க்கலாம்.

துணைபுரிந்த நூல்கள்

1. அண்ணாதுரை, சி. என்., அண்ணாவின் சிறுகதைகள், பரிமளம் பதிப்பகம், சென்னை, 1969.
2. அண்ணாதுரை, சி.என்., வண்டிக்காரன் மகன் பூம்புகார் பிரசுரம், சென்னை, 1980.
3. அண்ணாதுரை, சி. என்., கைதி எண் 6342, பாரிநிலையம், சென்னை, 1980.
4. ஆறுமுகம், ப., அண்ணாவின் தமிழ்க் கொடை, மலர் விழி பதிப்பகம், சென்னை, 1988.
5. கலைஞர் கருணாநிதி. மு. நெஞ்சுக்கு நீதி, தினமணி கதிர் வெளியீடு, சென்னை, 1975 .
6. நாகை தருமன் (தொ. ஆ.) , அண்ணாவின் நவமணிகள், வானதி பதிப்பகம், சென்னை, 1968 .
7. புலவர் செந்துறை முத்து, பேராசிரியர் அண்ணா, புதுமைப் பிரசுரம், சென்னை, 1974.
8. பொன் மாறன், திராவிட இயக்கங்களின் வரலாற்றுப் பின்னணி, வேங்கை பதிப்பகம், மதுரை, 1988.
9. பாலுசாமி நா. (முதன்மை ப. ஆ.), வாழ்வியற் களஞ்சியம், தொகுதி-2, தஞ்சைப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர், 1991.
10. Ham Raj Bhatta, General psychology, oxford & IBH publishing Co., New Delhi, 1969.
11. Southwell & Marbaum personality Readings in theory and Research, Books cole publishing company, california, 1978.
12. Udhay shankar personality Development, Atma Ram & sons, Delhi, 1987.

# அண்ணாவின் சொற்களஞ்சியம்

ஏ. ஆதித்தன்

ஒரு மொழியின் அமைப்பு (design) இலக்கணப்பகுதி (grammar), சொற்களஞ்சியப் பகுதி (lexicon) எனும் இரு பகுதிகளை உடையது. இவற்றுள் சொற்களஞ்சியப் பகுதி அண்ணாவின் மொழியில அமைந்துள்ள முறைமையினை விவரிக்கும் வகையில் இக்கட்டுரை அமையப் பெற்றுள்ளது.*

இவ்வாய்விற்கு அண்ணாவின் செவ்வாழை, சொல்லாதது; ஜமீன் ஒழிப்பு இனாம் ஆகிய மூன்று நூல்களும் முதன்மைத் தரவாக அமையப்பெற்றுள்ளன.

அண்ணாவின் சொற்களஞ்சியத்தில் அகராதிப் பொருட் சொற்கள் (content words) எண்பத்தாறு விழுக்காடுகளும் செயலிகள் (Function words) பதினான்கு விழுக்காடுகளும் காணப்படுகின்றன.

செயலிகள் பெரிதும் பயன்படுத்தப்பட்டுள்ளமையால் தொகைச் சொற்கள் இவர் மொழியில் மிகவும் அருகிக் காணப்படுகின்றன. இதனால் புரிதிறன் மிகுதியாகி இருப்பதனைத் தெரிந்துகொள்ள முடிகின்றது.

இடுகுறிச்சொற்கள் (opaque words), காரணச்சொற்கள் (motivated words) எனும் இருவகைச் சொற்களுள் அண்ணாவின் மொழியில் முப்பத்தாறு விழுக்காடுகள் காரணச்சொற்கள் காணப்படுகின்றன. காரணச்சொற்களைப் பெரிதும் கையாண்டுள்ளமை அண்ணாவின் மொழியைப் புரிந்துகொள்ளத் துணை செய்கின்றது.

---

*இவ்வாய்விற்குத் தெரிவு செய்யப்பெற்ற மூன்று நூல்களை நான்கு தகவலாளர்களிடம் (ஆண் 2+ பெண் 2; கற்றவர் 2 + கல்லாதவர் 2) கொடுத்து அவர்கள் பயிலும்போது கிடைக்கப் பெற்ற முடிவுகளின் அடிப்படையிலும் கட்டுரையாளரின் புரிதிறன் அடிப்படையிலும் இவ்வாய்வு அமையப்பெற்றுள்ளது.

ஒலிநிலைக் காரணச் சொற்கள் (phonetically motivated words), உருபன்நிலைக் காரணச் சொற்கள் (morphologically motivated words), பொருள்நிலைக்காரணச்சொற்கள் (semantically motivated words) என மூவகைக் காரணச் சொற்கள் உண்டு இவற்றுள் ஒலி நிலைக் காரணச் சொற்களை அண்ணா மிகுதி-யாகப் பயன்படுத்தியுள்ளார்.

'குறுகுறு என, பட்பட் என, விடுவிடு என' போன்ற பல்-வேறு ஒலிநிலைக் காரணச் சொற்கள் பயன்படுத்தப்பட்டுள்ளமை பொருளை எளிதில் புரிந்துகொள்ளவும் சரியான பொருளை உணர்ந்து கொள்ளவும் உதவுகின்றது.

உருபன்நிலைக் காரணச்சொற்கள் அண்ணாவின் மொழியில் மிகுந்த அளவில் காணப்படுகின்றன. பால் காட்டும் ஈறுகளும் பெயர், பெயரடை அடிகளும் இணைந்து இத்தகைய சொற்கள் அமையப்பெற்றுள்ளன. மேலும்—காரன,—காரி போன்ற வட மொழி உருபுகளையும், — இ எனும் பொதுப்பால் ஈற்றினைப் பயன்படுத்தியும் காரணச் சொற்கள் அமையப் பெற்றுள்ளன

கரிய்—அன் வேலைக்—காரன்

உழவ்—அன் லட்சாதி—காரி

உருபன்நிலைக் காரணச் சொற்களை மிகுந்த அளவில் அண்ணா தன் மொழியில் பயன்படுத்துவதால் இவரது படைப்புக்-களை எளிதில் புரிந்துகொள்ள முடிகின்றது.

பொதுவாக மொழியில் காரணச்சொற்கள் மிகுந்து காணப் பெறும் நிலையில் சொற்பொருளை எளிதில் புரிந்து கொள்ளுதல் இயலும். குறிப்பாக உருபன்நிலைக் காரணச்சொற்கள் காணப்-பெறும் நிலையில் புரிதிறன் மிகுதியாக இருக்கும்.

அண்ணாவின் மொழியில் காணப்பெறும் பொருள்நிலை காரணச் சொற்களில் அமையப் பெற்றுள்ள ஆக்கம் (motivation) பல சொற்களில் முறையாக அமையவில்லை என்பதால் அச்-சொற்களை எளிதில் புரிந்து கொள்ள இயலவில்லை.

அண்ணாவின் சொற்களஞ்சியத்தில் இருபத்தெட்டு விழுக்காடு பிறமொழிச் சொற்கள் கையாளப்பட்டுள்ளன. இவற்றுள் சமஸ்கிருதம், ஆங்கிலம், உருது ஆகிய மொழிச்சொற்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

கடன் சொற்களைப் பொறுத்தமட்டில் உயர்வு நோக்கம் (Prestige motive), தேவை நோக்கம் (need filling motive) எனும் இருவகை நோக்கங்களில் அண்ணாவின் மொழியில் காணப்படும் கடன் சொற்கள் அனைத்தும் தேவை நோக்கம் கருதியே பயன்படுத்தப்பட்டுள்ளன.

முழுமைக் கடன் (out right loan), கருத்துக் கடன் (loan shift), கலப்புக் கடன் (loan blend) எனும் மூவகைக் கடன் சொற்களும் அண்ணாவின் சொற்களஞ்சியத்தில் காணப்படுகின்றன. சூழலுக்கேற்ற பொருள் அமைந்திட வேண்டும் எனும் எண்ணத்தால் அண்ணா இத்தகைய சொற்களைக் கையாண்டுள்ளார் எனத் தெரியவருகின்றது.

அண்ணா கடன்சொற்களைத் தடையின்றிக் கையாளுகின்றார். கடன் வாங்கல் பற்றிய அவரது கருத்தாக "கண்ணிமைபோலப் பிற மொழியைப் பயன்படுத்துவேன்" (அண்ணாவின் சிந்தனைச் செல்வம், பக். 75) என்பதனை எடுத்துக்கொள்ள இடமுண்டு.

ரூபவதி சம்பிரதாயம்
மாஜி கித்தாப்பு
போர்டு
— முழுமைக்கடன்

வாக்குச் சாவடி வேட்புமனு
வாக்குறுதி
— கருத்துக்கடன்

போர்டுகள்
பரவாயில்லை
— கலப்புக்கடன்

அண்ணா மொழியுணர்வு காரணமாகப் பல சூழல்களில் கருத்துக் கடன் சொற்களைப் பயன்படுத்தியுள்ளார். கருத்துக்

கடன் சொற்கள் பலவற்றை அண்ணாவே உருவாக்கியுள்ளார்.

எல்லா மொழியிலுள்ள எழுத்தாளர்களிடமும் தமது படைப்புக்களில் பிறமொழிச் சொற்களை அதிகமாக எடுத்துக் கையாளுகின்றோம் என்னும் எண்ணம் தோன்றும் போது கருத்துக்கடன் சொற்களை மிகுதியாக உருவாக்கும் போக்குக் காணப்பெறும் அண்ணாவிடமும் இத்தகைய போக்கினைக் காணமுடிகின்றது.

அண்ணாவின் சொற்களஞ்சியத்தில் வழக்கிறந்த சொற்கள் மிகுதியாகக் கையாளப்பட்டுள்ளன, இவை பெரும்பாலும் மொழியுணர்வு காரணமாகப் பண்டை இலக்கியத்திலிருந்து எடுத்தாளப் பட்டுள்ளன. 'சேல்விழி தையல், மையல்' போன்ற இத்தகைய சொற்கள் பலவற்றை நடையின் பொருட்டுக் கையாண்டுள்ளமை புரிதிறனைக் குறைக்கின்றது.

அருகிய வழக்குச் சொற்களும் (archaic words) அண்ணாவின் மொழியில் பெரிதும் காணப்படுகின்றன. 'நவிலா, சாலாது பார்த்தனை' போன்ற அருகிய வழக்குச் சொற்களைத் தனக்கே உரித்தான மொழி நடையின் பொருட்டு பயன்படுத்தியுள்ளமை மொழியை எளிதில் புரிந்து கொள்ளத் தடையாக அமைந்துள்ளது.

பொருளை வலியுறுத்தும் நோக்கில் அண்ணா தம் படைப்புக்களில் எதிரொலிச் சொற்களை (echo words) மிகுதியாகப் பயன்படுத்தியுள்ளார். எதிரொலிச் சொற்களின் பயன்பாடு புரிதிறனை மிகுவித்துள்ளது.

அண்ணாவின் சொற்களஞ்சியத்தில் கிளை மொழிச்சொற்கள் பாத்திரங்களுக்கேற்ப பெருமளவில் பயன்படுத்தப்பட்டுள்ளன. ஜாதிக்கிளை மொழிச் சொற்களும் இடக்கிளை மொழிச் சொற்களும் அண்ணாவின் மொழியில் பல இடம்பெற்றுள்ளன. 'நாம்ப, மகறாஜன், சாவரட்சை, எம்மாம், இவக' போன்ற பல்வேறு கிளை மொழிச்சொற்கள் அண்ணாவின் சொற்களஞ்சியத்தில் காணப்பெற்றாலும் இவை புரிதிறனைக் குறைக்கவில்லை.

அண்ணா ஒவ்வொரு பாத்திரத்திற்கும் அதன்கிளை மொழியின் வழக்காறுகளைப் பயன்படுத்தியுள்ளார். இச்சொற்கள் பொருள் புலப்பாட்டிற்குத் துணைசெய்வனவாகவே அமையப் பெற்றுள்ளன.

அண்ணாவின் சொற்களஞ்சியத்தில் காணப்பெறும் கடன் சொற்களைத் தமிழாக்குவதில் சீர்மையின்றிக் காணப்படுகின்றன. கடன் சொற்களைத் தமிழாக்கம் செய்யும் நிலையில் ரகர லகர ஈற்றுச் சொற்களுக்கு முன்னர் இகரமும் உகரமும் சேர்க்கின்றமையினையும் சேர்க்காமையினையும் காணமுடிகின்றது.

இலாபம் லட்சம்
உருத்திராட்ச பூனை ரட்சகத்துக்கு

மெய்மயக்கங்களையும் சிலவிடத்து தமிழ் மரபுக்கு ஏற்ப மாற்றுவது கடன் சொல்லில் காணப்படும் மெய்மயக்கத்தினை அப்படியே கையாளுவது எனும் இருநிலை அண்ணாவின் சொற்களஞ்சியத்தில் காணப்படுகின்றது.

—த்வ்— த்வனி கிருத்துவம்
—ண்ய்— கண்யம் புண்ணியம்

ஒரே சொல்லிற்கு வடிவ வேறுபாடுடைய வடிவங்கள் கையாளப்படுதலை அண்ணாவின் மொழியில் காணமுடிகின்றது. மொழியில் சொல்வடிவவேறுபாடுகள் (formal variation) காணப்பெறுவது பொருள் குழப்பத்தினை உருவாக்கும்.

இனாம்தாரர் — இனாம்தாரி
மவுன்ட்ரோடு — மவுண்ட்ரோடு

அண்ணாவின் மொழியில் ஒலிச் சேர்க்கை (merger) காரணமாக ரகர றகர ஒலிகளும் னகர ணகர ஒலிகளும் இணைந்துள்ளமையால் இவ்வொலிகளின் வருகைகளில் உறழ்ச்சி காணப்பெறுகின்றது.

விசாரனை (விசாரணை)
தகராரு (தகராறு)
மகறாஜன் (மகராஜன்)
கருத்து (கறுத்து)

அண்ணாவின் சொற்களஞ்சியத்தில் எளிதில் பொருள் விளங்காச் சொற்கள் பல காணப்படுகின்றன. இவை சூழல் காரணமாகப் பொருள் விளங்கும் நிலையில் அமையப்பெறாமை புரிதிறனைக் குறைத்துள்ளன.

| | |
|---|---|
| மழசஞ்சிகள் | மிலார் |
| பூணாரம் | பிர்மா |

அண்ணாவின் மொழியில் புதிய சொற்கள் பல ஆக்கப்பெற்று கையாளப்பட்டுள்ளன.

| | |
|---|---|
| இழுக்காறு | கண்வாய் |
| இடைக்கலம் | உபசாரதிகள் |
| செல்வவான் | பூசுரன் |
| இலட்சாதிகாரி | குச்சுநாய் |
| தப்புலித்தனம் | |

சில புதிய சொற்கள் எளிதில் பொருள் விளங்குமாறு அமையவில்லை.

மொழியில் காணப்பெறும் சொற்கள் பலவற்றிற்குப் புதிய பொருள் சேர்த்து சொல்லாக்கம் செய்துள்ளமையினை இவர் மொழியில் காணமுடிகின்றது.

ஒன்றியம்
ஊராட்சி
வருவாய்

சொல்லாக்கத்தினைப் பொறுத்தமட்டில் — காரன், — காரி , — தனம் போன்ற வடமொழி சொல்லாக்க உருபுகளைக் கொண்டு பல சொற்கள் உருவாக்கப்பட்டுள்ளன.

சிங்காரி
கைகாரி
லட்சாதிகாரி

பால்காட்டும் ஈறுகளைப் பெயரடி, பெயரடை, அடிகளோடு சேர்த்து குறிப்புப் பெயர்கள் ஆக்கப்பெற்றுப் பயன்படுத்தப்பட்டுள்ளமை புரிதிறனை அதிகரித்துள்ளது.

வினைச் சொற்களைப் பொறுத்தமட்டில் பெயரடியிலிருந்து வினைச் சொற்கள் ஆக்கும் போக்கு அண்ணாவின் மொழியில் காணப்படுகின்றது.

பஜித்துக் கொண்டு
விதத்தது

சொல்லாக்கத்தைப் பொறுத்தமட்டிலும் அண்ணா படைத்துள்ள சொற்கள் எளிதில் புரிந்துகொள்ளும் வகையில் அமையப் பெற்றுள்ளன.

தொகைச் சொற்களைப் பொறுந்த மட்டில் அண்ணாவின் மொழியில் மரபுத்தொடர்களாக அமையப்பெற்ற தொகைச் சொற்களே பெரிதும் காணப்படுகின்றன. இத்தகைய தொகைச் சொற்கள் உணர்த்தும் பொருளும் தொகைச் சொற்களின் உறுப்புகள் உணர்த்தும் பொருளும் ஒன்றாக அமைவதில்லை.

தொகைச் சொற்களில் இரண்டு வகை உண்டு. முதல் வகைத் தொகைச் சொற்களில் தொகைச் சொல்லின் பொருளும் தொகைச் சொல்லின் உறுப்புக்களின் பொருளும் ஒன்றாக அமையும்(எ.கா. இசை × நூல்), இன்னொருவகைத் தொகைச் சொல்லில் (Compounds whose meaning cannot be predicted) அது உணர்த்தும் பொருளும் அதன் உறுப்புக்களின் பொருளும் ஒன்றாக அமைவதில்லை.

காட்டு ராஜா
மவுண்ட்ரோடு பெருச்சாளிகள்

இத்தகைய தொகைச் சொற்களின் பொருளை அனைத்து மக்களாலும் புரிந்து கொள்ளுதல் எளிதன்று.

துணை வினைகளைக் கையாளுவதில் அண்ணா வேறுபட்டமைகின்றார். பல்வேறு துணைவினைகள் இருப்பினும் ஒரே வகையான துணை வினைகளைத் தொடர்ந்து கையாளும் போக்கு புரிதிறனை மிகுவித்துள்ளது.

மகிழ்ந்திட
நடந்திட
கண்டிட

அண்ணாவின் சொற்களஞ்சியத்தில் புணர்சொற்கள் பல காணப்படுகின்றன. இத்தகைய புணர்சொற்கள் எளிதில் பொருளைப் புரிந்து கொள்வதற்குத் தடையாக அமையப் பெற்றுள்ளன.

ஜலாதாரமில்லாமல்

திப்பேர்க்கண்டினேன்

அண்ணாவின் மொழியில் பல இடங்களில் ஒருமை பன்மை வேறுபாடு இன்றி வினைச் சொற்கள் கையாளப்பட்டுள்ளன. இப்போக்கு பயன்பாட்டு மொழியினைக் கையாளும் எண்ணம் கொண்டவர் அண்ணா என்பதனைப் புலப்படுத்துகின்றது.

பல பொருள் ஒரு சொற்களை அண்ணாவின் சொற்களஞ்சியத்தில் மிகுதியாகக் காணமுடிகின்றது. ஓரிரு இடங்களைத் தவிர பிற இடங்களில் சூழல்(context) பல சொல்லின் பொருளை கொள்ளத் துணைபுரிகின்றது.

ஒரு பொருள் பல சொற்களைப் பொறுத்தமட்டில் அண்ணாவின் மொழியில் அடிப்படை ஒரு பொருள் பல சொல்லை (neutral synonym) முதலில் பயன்படுத்தி ஏனைய ஒரு பொருள் பல சொற்களைப் பின்னர் தொடர்ந்து பயன்படுத்தும் பாங்கினை காணமுடிகின்றது. இப்பாங்கு பொருள் மயக்கமின்றிச் சொற்பொருளை அறிந்து கொள்ளப் பேருதவி புரிகின்றது.

கருத்தற்ற
முறையற்ற
உயிரற்ற
சுவையற்ற
பயணற்ற — காரியம்

அண்ணாவின் மொழியில் காணப் பெறும் சொற்களில் பல் வேறு வகையான சொற்பொருள் மாற்றங்கள் (Semantic Changes) நடைபெற்றுள்ளன.

அடிப்படை நிலையில் சொற்களின் வடிவம், பொருள் ஆகியவற்றிடையே காணப்பெறும் ஒப்புமை (similarity), தொடர்ச்சி (contiguity) காரணமாக மொழியில் நான்குவகைப்

பொருள் மாற்றம் நடைபெறும். இந்நான்கு வகைப் பொருள்மாற்றம் நடைபெறப்பெற்ற சொற்கள் அண்ணாவின் சொற்களஞ்சியத்தில் காணப்பெறுகின்றன.

இத்தகைய மாற்றங்களால் சிறப்புப் பொருட்பேறு, பொதுப்பொருட்பேறு, உயர் பொருட்பேறு இழிபொருட்பேறு, வன் பொருட்பேறு, மென்பொருட்பேறு, நுண்பொருட்பேறு, பருப்பொருட்பேறு, இடக்கரடக்கல், மங்கலம், பாமர ஆக்கம் (Folk etymology) போன்ற பத்துவகையான பொருள் மாற்றங்கள் அண்ணாவின் மொழியிலுள்ள சொற்களில் நடைபெற்றுள்ளமையினைக் கண்டறிய முடிகின்றது.

இடக்கரடக்கல், மங்கலம் தொடர்பாக அண்ணா பயன்படுத்தும் சொற்கள் புலப்பாட்டு நோக்கத்தினை முழுமைபெறச் செய்துள்ளன.

போகபோக்கியம்
மதனவிழா

இழிபொருட்பேறுக்கு அமையப் பெற்ற சொற்களில் பெரும்பான்மையும் அரசியல், சமயம் சார்ந்தவைகளாக அமையப் பெற்றுள்ளன. சொற்பொருள் மாற்றத்தின் விளைவாக அமையும் உவமை. உருவகங்கள் அண்ணாவின் மொழியில் சிறப்பாக அமையப்பெற்றுள்ளன.

ஈண்டுக் கூறப்பெற்ற செய்திகளினின்றும் சில முடிவுகளைச் சுட்டுதல் இயலும்.

அண்ணாவின் சொற்களஞ்சியத்தில் பொருள் விளங்காச் சொற்கள், வழக்கிறந்த சொற்கள், அருகிய வழக்குச் சொற்கள் மிகக்குறைந்த அளவில் பயன்படுத்தப்பட்டுள்ளன. காரணச்சொற்கள் பெரும்பான்மையாக அமைந்துள்ளமையாலும், சூழலுக்கேற்ப பலவிடத்துக் கடன்சொற்களைப் பயன்படுத்துவதாலும் சொல்லாக்கம் எளிமையாக அமைந்துள்ளமையாலும் புரிதிறன் மிகுந்து காணப்படுகின்றது.

மேலும் பலபொருள் ஒருசொல், ஒருபொருள் பல சொல், எதிரொலிச்சொல், கிளை மொழிச்சொற்களின் முறையான பயன்

பாடு கற்போருக்கு எளிதில் புரியும் வகையில் அமையப்பெற்றுள்ளது.

க..ன் சொற்களைத் தமிழாக்குவதில் சீர்மை இன்மையும், சொல்வடிவ வேறுபாடுகளுக்கு இடம் கொடுப்பதும், மரபுத்தொடர்களாக அமைந்த தொகைச் சொற்களைப் பயன்படுத்துவதும், ஒருமை-பன்மை வேறுபாட்டிற்கு இடம் கொடுப்பதும் அண்ணாவின் சொற்களஞ்சியத்தில் காணப்படுகின்றன.

அண்ணாவின் சொற்களஞ்சியத்தினை ஆய்வதன் வாயிலாக அண்ணாவின் மொழிக்கோட்பாட்டினைத் தெரிந்துகொள்ள முடிகின்றது அண்ணா மொழியினைக் கருதுகின்றது. அண்ணா மொழியினைக் கருத்துப் பரிமாற்றத்திற்குரிய ஒரு கருவியாகக் கருதுகின்றார் கருத்துப்பரிமாற்றத்திற்கு பயன்பாட்டு மொழியே சிறந்தது என்ற அடிப்படையில் தம் கருத்துக்கள் எளிமையாக மக்களைச் சென்றடைய வேண்டும் என்ற வகையில் பயன்பாட்டு மொழிச் சொற்களையே பெரிதும் பயன்படுத்துகின்றார்.

"இலக்கணம் சரியில்லை கிடக்கட்டும்! ஜமீன் முறையின் இலட்சணம், அதை நடத்தும் தேசியத்தலைவர்களின் இலட்சணம் எப்படி இருக்கிறது என்பதைக் கவனியுங்கள்" (ஜமீன் இனாம் ஒழிப்பு. பக் 44) என்னும் கூற்று அண்ணா மொழியின் அமைப்பினை விட கருத்திற்கே முதன்மையிடம் கொடுத்துள்ளார் என்பதனைப் புலப்படுத்துகின்றது.

அண்ணா மொழியை கருத்துப் பரிமாற்றத்திற்குரிய ஒரு கருவியாகக் கருதி, பயன்பாட்டு மொழியினைப் பயன்படுத்தி அவர் தம் கருத்துக்கள் மக்களுக்கு எளிதில் புரிய வேண்டும் என்பதனையே முதன்மைக் குறிக்கோளாகக் கொண்டுள்ளார் என்பதே அவருடைய சொற்களஞ்சியத்தை ஆய்வதன் வாயிலாகப் பெறப்படுகின்றது.

## துணை நூல் பட்டியல்

1. அண்ணாதுரை, சி. என்., ஜமீன் இனாம் ஒழிப்பு, திராவிடப் பண்ணை, திருச்சி, 1968.

2. அண்ணாதுரை, சி.என்., அண்ணாவின் சிறுகதைகள், திராவிடப் பண்ணை, திருச்சி, 1969.

3. அண்ணாதுரை, சி.என்., செவ்வாழை, பூம்புகார் பிரசுரம், சென்னை,

4. Austin, J.L., How to do things with words, Harvard University Press, Cambridge, 1962.

5. Hatch, Vocabulary, Semantics and Language Education, Language Teaching Library, Cambridge, 1996.

6. Lehrer, Adrienne, Semantic Fields and Lexical Structure, Amesterdam, 1974.

7. Ullmann, S., Semantics: An Introduction to the Science of Meaning, Blackwell, Oxford, 1962.

8 Zugusta, L., Manual of Lexicography, Mouton & co., The Hague, 1967.

# அண்ணாவின் நாடகங்களும் சமூக மாற்றங்களும்

டாக்டர். இரா. காஞ்சனா

கண்ணைச் செவியைக் கருத்தைக்கவர்ந்து—நமக்கு
எண்ணரிய போதனைகள் ஈவதற்கு—நண்ணுமந்த
நாடக சாலையொத்த நல் கலா சாலையொன்று
நீடுலகில், வேறில்லை

(தேசிக விநாயகம் பிள்ளை-1953; 87)

என்பதை நன்கு உணர்ந்த அறிஞர் அண்ணா தம் நாடகங்கள் மூலம், அவர் வாழ்ந்த காலத்துத் தமிழகத்திற்குத் தேவையான எண்ணரிய கருத்துகளையும், அறிவுரைகளையும் அளித்தார். மக்களிடம் மண்டி கிடந்த மூடநம்பிக்கைகளையும், போலித்தனங்களையும் எள்ளி நகையாடி, சீர்திருத்தக்கருத்துகளையும், முற்போக்குக் கொள்கைகளையும், பதியச் செய்ததுடன், இவரது நாடகங்கள், சுவையழகும் கொண்டு மிளிர்பவை. நோய் நாடி, நோய் முதல் நாடி, அச்சமூக நோய்களைத் தீர்ப்பதற்கான மருந்தாகும் கருத்துகளை இனிய கலைப்படைப்புகளின் ஊடே வைத்தளித்தார்.

## சமுதாய மாற்றத்தில் நாடகத்தின் பங்கு பற்றி அண்ணா

1944-இல் ஈரோட்டில் நடைபெற்ற நாடகக்கலை முன்னேற்ற மாநாட்டில் பேசுகையில் ''நாடகங்கள் அறிவு வளர்ச்சியின் பண்ணை நிலங்களாக விளங்க வேண்டும்'' என்றார் (சிவதாணு டி. என் 1970 ; 14).

''இனிக்கோயில் கட்டிக் கும்பாபிஷேகம் செய்பவன் ஊரிலே கொள்ளையடிக்கும் விஷயத்தை விளக்கும் நாடகத்தை நடத்திக் காட்டுங்கள் வாழ்க்கையைச் சித்திரித்துக் காட்டுங்கள் ஏழையின் கண்ணீர், விதவையின் துயரம், மதத்தாசரின் ஏய்ப்பு ஆகியவற்றை விளக்கும் அறிவு வளர்ச்சி நாடகங்களை நடத்துங்கள்'' என நாடகத்துறையில் ஈடுபட்டிருப்பவர்களுக்கு அறிவுறுத்தினார் (சிவதாணு டி.என், 1970:36).

நாடகத்துறையின் மூலம் நாடக ஆசிரியர்களும் நாடக நடிகர்களும் எவ்வாறு தூங்கிக்கிடக்கும் மக்களை, எழுப்பி விடு-

வதுடன், அவர்கள் விறுணர்ச்சி கொண்டெழத் தூண்ட முடியும்; வேண்டும் என வலியுறுத்துகிறார். அண்ணா பிறருக்கு அறிவுறுத்தியதுடன் தம் நாடகங்களையும் அவ்வாறே படைத்ததுடன் மக்கள் மனதில் பதிந்து அவர்தம் எண்ணப் போக்குகளை மாற்றக் கூடிய முதன்மைப் பாத்திரங்களையும், எதிர் நிலைப் பாத்திரங்களையும் கூடத் தாமே ஏற்று நடித்து, நாடகத்துறை வல்லுனர்களாலேயே புகழப்பட்டுள்ளார்.

*சமுதாயத்தின் தேவையும் நாடகங்களும் பற்றி அண்ணா*

"சமுதாயத்திலே புதிய முறைகள், அதன் அமைப்பிலே புதியதோர் மாற்றம் தேவை. அந்தப் புதிய உருவத்தை உருவாக்கும் உயரிய பணிதான் மறுமலர்ச்சி அதன அவசியத்தை மிகப்பெரும்பாலான மக்களுக்கு உணர்த்துவிக்க நாடகமே நல்ல கருவி. எனவே நாடகத்தில் மறுமலர்ச்சி மிக மிக முக்கியமானது. நாட்டின் விழிப்புக்கு அது நல்லதோர் அளவுகோல். நாளை நாம் எப்படி எப்படி இருப்போம் என்பதற்கு அதுவே நல்ல அறிகுறியாகும் என்று நாடகப்போக்குகளிலும் நாடகக் கதைகளின் உள்ளடக்கத்திலும் ஏற்பட வேண்டிய மாற்றங்களை எடுத்துரைக்கிறார் அண்ணா (சிவதாணு, டி என், 1970 : (-7). சமூகத்தில் மாற்றம் ஏற்பட வேண்டும்; இதனால் சமூக அங்கத்தினர் அனைவரும் சமவாய்ப்புப் பெறும்படியான சமச்சீர்மை உருவாக வேண்டும் என்ற அவரது சமூகச் சார்புக் கருத்துகள் வெளிப்படுகின்றன. அத்துடன் சமூக மாற்றம் ஏற்பட வேண்டுமெனில் அதன் நிறுவன அமைப்புகளில் (குடும்பம், மதம், அரசியல், கல்வி போன்ற சமூக நிறுவனங்கள்) மாற்றம் தேவை என்பதையும், அம்மாற்றத்திற்கு உடன்படாத குறுக்கே நிற்கிற எந்த அமைப்பும் அழிக்கப்பட வேண்டியவையே என்பதையும் உணரவைக்க, நல்ல நாடகங்களை, பயனுள்ள வெற்றியைத் தேடித்தரக்கூடியக் கருவிகளாகப் பயன்படுத்தும்படிக் கூறுகிறார் அண்ணா.

*நாடகத்தின் தனிச்சிறப்பு*

"நாடகக் கலையின் மூலம் நம்முடைய நாட்டுக்குத் தேவையானவைகளை நான் இன்னும் நிரம்ப எதிர்பார்க்கிறேன். நம்முடைய சமுதாயம் ஒரு புதிய உருவத்தைப் பெற்றாக வேண்டும்.

நம் மக்களுடைய மனப்பான்மையில் ஓர் அதிதீவிரமான மாறுதல் ஏற்பட்டாக வேண்டும் ......... இவைகளையெல்லாம் ஏற்படுத்திக் கொடுப்பதற்குக் கட்டுரைகள், பேருரைகள், சிறுகதைகள், பெருங் கதைகள் இவைகளை எல்லாம் விட, நாடகத்தின மூலம், மிகுநத பயன் கிடைக்குமென்பதில் மிகுந்தநம்பிக்கை வைத்திருக்கிறேன'' என்றார் அண்ணா (சிவதாணு., டி. என். 1970 : 56).

இந்த நம்பிக்கையின் குரல்தான் அண்ணாவின் நாடகங்கள். இவை சமூக நோக்கும், சீர்திருத்த வேகமும் கொண்டிருந்தன. சமூகத்தைத் திறனாயும் போக்குடன் அமைந்திருந்தன. தமிழனின் அன்றைய நிலையை அவனுக்கே எடுத்துக்காட்டி, உணர-வைத்தன. தமிழகம் வந்தேறிகளால் தாழ்வுற்ற நிலையையும். தமிழ்ச்சமுதாயம் தம் முந்தைய பெருமைகளில் இருந்தும் பன்மைச் சிறப்புகளில் இருந்தும் விலகிச்சீரழிந்து போவதையும் எடுத்துரைத்து, இடித்துக்காட்டி, அவ்வாறு உள்ள நிலை மாறி உயர்வைப் பெற நாடகக் கலையைப் பயன்படுத்தியதன் மூலம் நாடகம் சமூக விழிப்புணர்விற்கும் சமூக மாற்றத்திற்கும் எவ்வா-றெல்லாம் பயன்படக்கூடும் என்று கூறிய தம் கூற்றுகளுக்குத் தாமே முன்னுதாரணமாகவும் முன்னோடியாகவும் திகழ்ந்தார்

### அண்ணாவின் நாடக வகைகள்

பொதுவாக அண்ணாவின் நாடகங்களை வரலாற்று நாட-கங்கள். அரசியல் நாடகங்கள், சமூக நாடகங்கள் எனப் பிரித்துப் பார்க்கமுடியும். ஆயின் அனைத்து நாடகங்களிலுமே சமூகநோக்கு ஊடாடிச்செல்லும்—அது அரசியல் நாடகமாயினும் சரி வர-லாற்று சமூகக் கருத்துக்களைக் கூறும் போக்கை இரு நிலைகளில் வகைப் படுத்திக் காண இயலும். ஒன்று நேரடியாகத் தாக்கும் பண்பு; அடுத்தது எள்ளல் தன்மையுடன், நகைச்சுவையுடன் கூற வந்த கருத்தை எடுத்துரைப்பவை.

1944-இல் எழுதப்பட்ட சந்திரோதயம் தான் இவரது முதல் நாடகம் அதுமுதல் தன் இறுதிக் காலம் வரை ஏறத்தாழ இரு-பத்தைந்து ஆண்டுகளில் இருபதுக்கும் மேற்பட்ட நீண்ட நாடகங் களும் படிக்கவும் நடிக்கவுமான ஓரங்க நாடகங்கள் பதினான்கும்

படிக்கமட்டுமான ஓரங்க நாடகங்கள் இருபத்திரண்டும் எழுதியுள்ளார்.

அரசியல் பாடத்தை முதன்மையாகக் கொண்ட தன் கல்லூரிக் கல்வியின் வாயிலாகவும் ஆங்கில, பிரெஞ்சு படைப்பாளிகளின் அறிமுகம் காரணமாகவும் தமிழிலக்கிய மரபில் திருமூலர், இராமலிங்க அடிகள், மாயூரம் வேதநாயகம்பிள்ளை, பாரதி, பாரதிதாசன் கருத்தாக்கங்களும், சிந்தனைச் சிற்பி சிங்கார வேலனார், பகுத்தறிவு இயக்கத் தலைவர் தந்தை பெரியார் போன்றோரின் தொடர்புகளும் தாக்கங்களும் அண்ணாவின் சமூகச் சார்புடைய பார்வையை விரித்துச்சென்றன. கவிக்குயில் சரோஜினி தேவியின் சகோதரரான அரீந்திரநாத் சட்டோபாத்யாய எழுதி நடித்த நாடகங்களும் ஆஸ்கர் ஒயில்டு, பெர்னார்டு ஷா, ஆண்டன் செக்காவ், டால்ஸ்டாய், சேக்ஷ்பியர், கோல்டுஸ்மித், கார்ல்ஸ் ஒர்த்தி, விக்டர் ஹியூகோ, இப்சன், பைரன் போன்ற மேலை நாட்டுப் படைப்பாளிகளின் நாடகங்களும் புதினங்களும் கட்டுரைகளும் இவரது சமூக நோக்குக்கு அடிப்படைகளை நல்கியுள்ளன. இந்த விரிந்த பார்வையும் ஆழ்ந்த சிந்தனையும் முற்போக்குக் கொள்கைகளும் காட்டிய வழியில் கால் பதித்தன இவரது சமூக நாடகங்கள்.

அண்ணாவின் சமூக நாடகங்களை அவற்றின் பாடுபொருள் அடிப்படையில் பகுத்துக் காண முடியும் :

(1) மக்களைச் சுரண்டிப் பிழைக்கும் நில உடைமைக்காரர்களையும் சமயத்தின் பெயரால் மக்களை அடிமைப் படுத்தித் தாம் மட்டும் கொழுக்கும் மடாதிபதிகளையும், அரசியல் சுரண்டல் வாதிகளையும் அடையாளம் காட்டும் நாடகங்கள்.

(2) மூடக்கொள்கைகளும் பிற்போக்கு எண்ணங்களும் மக்களின் முன்னேற்றத்திற்குத் தடைக் கற்களாய் அமைவதை எடுத்துரைக்கும் நாடகங்கள்.

(3) சமுதாய வாழ்வு சீர்குலைந்து நிற்பதையும் அதையும் மீறி வெளிவரத் துடிக்கும் போர்க்குணம் கொண்ட தன்மான

உணர்வு மிக்க, பகுத்தறிவு இயக்கம் சார்ந்த கருத்துகளை எடுத்துரைக்கும் நாடகங்கள்.

(4) தமிழனின் இன உணர்வையும் மொழி உணர்வையும் தட்டி எழுப்பும் தலைமை சான்ற நாடகங்கள். சமூக நாடகங்களைப் படைக்கும் பொழுது சமூகச்சீர்கேடுகளையே முன்னிறுத்திக் காட்டும் அண்ணா, வரலாற்று நாடகங்களை வரலாற்றின் காலகட்டங்களினூடே எவ்வாறு தமிழினம் வந்தேறிகளால் அடிமைப்படுத்தப்பட்டது என்ற உண்மையை உணர்த்தப் பயன்படுத்துகிறார்.

(5) வாழ்க்கைச் சிக்கல்களில் அகப்பட்ட கதை மாந்தர், தம் தாழ்வுக்குக் காரணமான மேட்டுக் குடியினரையோ, வேடதாரிகளையோ பழிவாங்கும் நாடகங்கள்.

(6) சமூக முன்னேற்றத்திற்குத் தடையாய் நிற்கும் கோட்பாடுகளையோ, அமைப்புகளையோ, நிறுவனங்களையோ, தனி மனிதர்களையோ கல்லி எறியும் அறநெறி சார்ந்த நாடகங்கள்.

(7) பெண் அடிமைத்தனத்தை எதிர்த்துப் பெண்ணுரிமையை நிலைநாட்ட விழையும் நாடகங்கள்.

(8) விதவையின் மறுமணம், கலப்பு மணம், காதல்மணம் ஆகியவற்றை வலியுறுத்தும் வாழ்க்கையில் அனைவருக்கும் நம்பிக்கையை ஊட்டும் நாடகங்கள்.

(9) சாதி, சமயங்களால் பிளவுபட்டுப்போன சமுதாயத்தின் வேற்றுமைகளை அகற்றி, தொழிலாளி-முதலாளி என்றோ ஏழை-பணக்காரன் என்றோ வேறுபாடு அற்ற சமத்துவ சமுதாயத்தை நிறுவ முயலும் பொதுவுடைமைக் கருத்துச் சார்புடைய நாடகங்கள்.

இந்நாடகப் பகுப்புகளைப் பாடு பொருள் அடிப்படையில் வகைப்படுத்தும் பொழுது, ஓர் உண்மையை உணர முடிகிறது. சமுதாயச் சீர்திருத்தத்திற்கான ஏதேனும் ஒரு கருத்தை மையப் பொருளாகக் கொண்டு எழுத முனையும் அண்ணா, அதே நாடகத்தில் வேறுசிலகருத்துகளை, அந்த முதன்மைக் கருத்துடன்

இணைந்தே செல்லக்கூடிய, மக்கள் மனதில் பதிய வேண்டிய-மக்கள் மனப்போக்கை மாற்றக் கூடிய கருத்துகளை துணைமைக் கருத்துகளாக அமைத்துச் செல்வதைக் காணமுடிகிறது.

பொதுவாக அண்ணாவின் நாடகங்களின் பாடு பொருள்களைத் தொகுத்துக்காணும் பொழுது. சாதி மத பேதம், வகுப்பு வாதம், இன உணர்வு, மொழிப்பற்று பழமை குறித்த செம்மாந்த உணர்வு பகுத்தறிவு வாதம், நாத்திகம், புராணமறுப்பு, ஆரிய எதிர்ப்பு, மூடநம்பிக்கைகள், போலித் தர நிர்ணயங்களும், பொதுவுடைமைப் புரட்சி ஆகியன பற்றிய கருத்துக்களை மக்களிடையே பரப்பி, புரட்சி மனப்பான்மையை உருவாக்கவும், சமுதாய மறுமலர்ச்சியை ஏற்படுத்தவும், தமிழன் தமிழனாக மீளவும் அண்ணா தம் நாடகங்களைப் பயன்படுத்தினர் என்பதை உணரமுடிகிறது.

சமூக மாற்றத்திற்கான அண்ணாவின் இக்கருத்துகள் இவரது 'சந்திரோதயம்' 'ஓரிரவு' 'வேலைக்காரி' ஆகிய மூன்று நாடகங்களிலும் எவ்வாறு அமைந்துள்ளன எனக் காணலாம்.

*சமூக மாற்றத்திற்கான நாடகக் கொள்கை*

காலந்தோறும் மாறும் மக்களின் கருத்தோட்டத்திற்கு ஏற்ப நாடகமும் மாற்றக் கருத்துகளைத் தந்து கொண்டிருக்கவேண்டும் என்ற கருத்துடைய அண்ணா, மூன்று மணி நேரம் நாடகம் பார்க்கும் இரசிகர்கள் வீடு திரும்பும் போது, மேடையில் பேசப்பட்ட சமூகப் பிரச்சனை பற்றிய, ஓரிரு கருத்துகளையேனும் தம்முடன் எடுத்துச் செல்ல வைப்பதாக நாடகம் அமையவேண்டும் என்ற நோக்கோடு தம் நாடகங்களை வடிவமைத்தவர்.

நாடகக் கலையின் வருங்காலத் திட்டம் பற்றிக் குறிப்பிடும் பொழுது,

"இந்த நாடு எப்படியிருக்க வேண்டுமென்று எண்ணுகிறார்களோ அதற்கேற்ற கருத்துகளை நாடகத்தின் மூலம் அளிக்கலாம்... நாடு எப்படியிருக்க வேண்டும் என்பதற்கு ஓர் இலக்கணத்தை வகுத்துக்கொள்வோமேயானால், அந்த இலக்கணத்துக்கு ஏற்றதல்லாதவைகள் என்ற முறையில் இன்று என்ன

என்ன இருக்கின்றன என்ற பட்டியலைப் போட்டுக்கொள்வோம். அந்தப் பட்டியல் தயாராகுமானால், அந்தப் பட்டியலில் காணப்படுபவை கேடுகள் என்று ஒப்புக்கொள்ளப்பட்டால், அந்தக் கேடுகளை நீக்குவதற்கு நாடகத்தின் மூலம் என்னென்ன செய்யலாம்? அந்தக் கேடுகள் நீங்கியான பிறகு வெற்றிடமாக விட்டு விடாமல் அதிலே எதைக் கொண்டு வந்து புகுத்தலாம் என்பதற்கு ஒரு பட்டியலைக் கொண்டு நாடகங்கள் நடத்தப்பட வேண்டும் என்றார். (சிவதாணு, டி.என், 1970:53)

அண்ணாவின் இந்தச் செயல்பாட்டு வடிவமைப்பு வழிகாட்டுதலானது அவரது நாடகக் கொள்கையாகவே விலங்கிற்று எனக் கொள்ள முடியும்.

தம் தாய்த்தமிழ் நாட்டிற்கு உடனடித் தேவை என்ன என்பதில் தெளிவுடன் இருந்தார் அண்ணா.

''முதலில் சமுதாயத்தில் பிறவியின் பெயரால் உள்ள பேதங்களை ஒழிக்க வேண்டும். அதுவே இந்நாட்டின் சமதர்மத்திற்கு முதல் படியாகும். அதனாலேயே பொருளாதார சமதர்மமே மனித சமூக சாந்திக்கு மருந்து என்று கருதியிருக்கும் நான், சமுதாயத்தில், வாழ்க்கையில் சமதர்மத்தை முக்கியமாக வலியுறுத்தி வருகிறேன். ...

... ... ... ... ... சமூகத்தில் மேல் ஜாதி, கீழ்ஜாதி, அடிமை ஜாதி என்பவைகள் இருப்பதோடு, ஆண்-பெண் தலைமைகளில் உயர்வு-தாழ்வு இருந்து வருகிறது; இவைதவிர ஏழை—பணக்காரன், முதலாளி—தொழிலாளி தன்மையும் இருந்து வருகிறது. இவற்றுள் சில இயற்கையாக ஏற்பட்டதாகவும் இவ்வளவுக்கும் காரணம் மனிதன் அல்லவென்றும் சொல்லப்படுகிறது. இவற்றையே மேல் நிலையில் உள்ளவனும், கீழ்நிலையில் உள்ளவனும் நம்பிக் கொண்டிருக்கிறான். இந்த மூட நம்பிக்கை தான் வெகுகாலமாக மனித சமூகத்தில் எவ்வித மாறுதல்களும் ஏற்படுத்துவதற்கில்லாமல் துடித்துக் கொண்டு வருகிறது.

இந்த மாபெரும் சனியனான ஜாதி மத பேதத் தொல்லைகள் மனித சமூகத்தை விட்டுத் தொலைய வேண்டுமானால் மனிதனுக்கு விஞ்ஞான அறிவும், நாட்டில் விஞ்ஞான வளர்ச்சியும் தேவை.

கஷ்டமானதும் இழிவானதுமான வேலை செய்பவர்கள் எல்லாம் கீழ்ஜாதியாகவும் சுகமாகவும் மேன்மையாகவும் உள்ள வேலை செய்பவர்கள் மேல் ஜாதியாகவும், ஒரு வேலையும் செய்யாமல், ஊரார் உழைப்பில் வயிறு வளர்த்துக்கொண்டு வஞ்சித்துத்திரிபவன் மகா மகா மேல் சாதியாகவும் ஏற்பட்டதற்குக் காரணம் விஞ்ஞான அறிவில்லாததே என்று கருதினார். (சிவதாணு, டி.என் : 1970 : 8)

இவர் கூறும் சமூகத்தில் விழிப்புணர்வு, புரட்சி மனப்பான்மை, சமூக மாற்றம் பற்றிய கருத்துகள் பல சமூகவியலார் கூறும் சமூக மாற்றம் பற்றிய கருத்துகளுடன் பெரிதும் ஒத்துள்ளன.

ஒரு சமுதாயக் கட்டமைப்பின் அங்கங்களாக இருக்கக் கூடிய நிறுவனங்கள், தலைமைப் பங்கு ஏற்பவர், சமுதாயப்படித்தரங்கள் போன்றவற்றில் காலப்போக்கில் ஏற்படக் கூடிய மாற்றம் பற்றிக் கூறுவதே சமுதாய மாற்றம். இது இந்த அங்கங்களின் தோற்றம், வளர்ச்சி, வீழ்ச்சி, பற்றியதாக அமையும். சமுதாயத்தின் உட்கூறுகளான இவை தம்முள் கொள்ளும் உறவுகளிலும் இடைவினைகளிலும் ஏற்படும் மாற்றங்கள் சமூகச் செயல்பாடுகளில் ஏற்படும் மாற்றங்கள், சமூகக்கருத்தமைவில், விதிகளில் ஏற்பட்ட மாற்றங்கள் இவற்றின் விளைவால் அதன் வெளிப்பாடுகளில் வாழ்வியல் விழுமங்களில், பண்பாட்டு வெளிப்பாடுகளில், குறியீடுகள் போன்றவற்றில் தெரியும் மாற்றங்கள் ஆகியவற்றை சமூகமாற்றம் எனக் குறிப்பிடுவர். இங்கு மக்கட்குழுவை மையப்படுத்தி அவர்களது நோக்கில் சமூக மாற்றம் பற்றிக் கூறப்பட்டுள்ளது. மோரிஸ் இன்ஸ்பெர்க், மூய், ஹான்ஸ் கெர்த், ரைட்மில் போன்றோர் இக்கருத்தை அரண்செய்கின்றனர்.

சமூக மாற்றம் பற்றிய கொள்கைகளைச் சமூகவியலார் முக்கியமான ஐந்து வகைப்பாடுகளுக்குள் அடக்குவர் அவை

1) சமூக முன்னேற்றத்தினை பரிணாம வளர்ச்சி அடிப்படையில் காண்பவை.

2) சமூக இனங்களிடையே, சமூகக் கொள்கைகள் விதிகளிடையே ஏற்படும் முரண், பொருளாதாரம், தலைமை ஆகியவற்றில் ஏற்படும் முரண் போன்ற விழுமங்கள் அடிப்படையான முரண்களின் விளைவால் உருவாக்கப்படும் சமூக முன்னேற்றம் பற்றிய கொள்கைகள்.

3) சமூகக் கட்டமைப்பிலும், அதன் அங்கங்களிடையே ஏற்படும் இடையுறவுகள் செயல்பாடுகளில், சமச்சீர்மைத் தன்மையை ஏற்படுத்த விழையும் போக்கில் ஏற்படும் மாற்றங்கள் பற்றிய கொள்கைகள்.

4) பல்வேறு உள்ளுறுப்புகளைக் கொண்ட உயிரி, ஒன்றின் செயல்பாட்டில் அவ்வுறுப்புகளின் தொடர் பணி எவ்வாறு முக்கியமோ அதுபோல சமூகமும் தன் உள்ளுறுப்புகளின் தொடர்பணியினால் தொடர்வினை புரியும். அதேபோல் உறுப்புகளிடையே ஒரு சமச்சீர்மையை உருவாக்கிக்கொண்டு தன்னை நிலைப்படுத்திக்கொள்கிறது எனவும் தன் அகச்சூழல் புறச்சூழல்களுக்கு ஏற்பத் தன்னை மாற்றிக்கொள்கிறது எனவும், மாற்றம் என்பது வெறும் ஆற்றல்மிக்க போக்கிளால் ஏற்படக்கூடிய தன்னியல்பான ஒன்று அல்ல; அதைச் சமூகத்தின் தேவைக்கு ஏற்ப, இலக்கு நோக்கிய வழித்தடம் அமைத்து அவ்வழியில் மாற்ற முடியும் என்றும் கூறுகின்றன அமைப்புகள் கொள்கைகள் (Systems theories).

(5) சமூக உளவியல் கொள்கைகள் சமூக முன்னேற்றத்தில் மக்களின் நடத்தையில் ஏற்படும் மாற்றங்களுக்குப் பெரும்பங்குண்டு என்பதை வலியுறுத்துகின்றன. (Steven Vago, 1989 : 27-59) இவை யாவும் ஒவ்வொரு நோக்கு நிலையில் இருந்து சமூக மாற்றம் பற்றிக் கூறுவன. ஒரு முழுமையான சமூகமாற்றம

என்று கூறும்பொழுது, எந்த எந்தக் கூறுகளில் மாற்றம் ஏற்பட்டுள்ளது. மாற்றத்தின் திசை என்ன? ஒரேசீராக முன்னோக்கிய நேர்போக்கு மாற்றமா? இலய — ஊசல் மாற்றமா? அல்லது பரிணாம மாற்றமா? இம்மாற்றம் எவ்வாறு நிகழ்கிறது? இதற்குக் காரணம் என்ன? இம் மாற்றத்தில் சமூக உள்ளுறுப்புகளின் நிலை, பணி என்ன? இயங்கு நிலைகள் எவை? மாற்றத்திற்குட் படும் சமூகம் பெற்றுள்ள புறச் சூழல்களின் பாதிப்பு எவ்வாறுள்ளது என்பன போன்ற சமூக மாற்றம் குறித்த அனைத்து வினாக்களுக்கும் விடையளிக்கக் கூடிய கொள்கை விளக்கம் இன்னமும் ஏற்படவில்லை என்பர் சமூகவியலார். (steven vago 1989 : 397).

இலக்கு நோக்கிய, திட்டமிடப்பட்ட மாற்றத்தைக் கொணரவும், அமுக்கப்பட்ட மக்கள் குழுவின் நிலையை மாற்றி உயர்த்தவும், சமூகச்சீர்கேடுகளுக்குக் காரணமாய் விளங்கும் சில தேவையற்ற கூறுகளைக் கெல்லி எறியவும் அண்ணாவின் நாடகங்கள் கூறும். கருத்துக்களை வரிசைப்படுத்திக் காணமுடியும்.

1) எந்த மாதிரியான மாற்றத்தை அவர் விழைகிறார்?

2) அம்மாற்றத்திற்கான வழிமுறைகளை எவ்வாறு எடுத்தோதியுள்ளார்?

3) மக்களுக்குவிழிப்புணர்வூட்டி, அவர்தம் மனப்பான்மைகளும் நடத்தைகளும் மாறுவதற்கு எத்தகு அறிவை அவர்களுக்குப் புகட்டினார்?

4) யாரைத் தம் பார்வையாளராகக் கருதித் தம் நாடகங்களைத் தந்துள்ளார்?

5) மாற்றத்தை உடனடியாகக் கொணர எண்ணினாரா? அல்லது படிப்படியாக மாற்றத்தைக் கொணர விரும்பினாரா?

(6) இவ்விருப்பத்திற்கு ஏற்பத் தம் நாடகங்களின் அடிக் கருத்துக்களையும், முதன்மைப் புனைவுக் கூறுகளையும் எவ்வாறு அமைத்துள்ளார்?

7) ஒரு மாற்றத்தை இலக்காகக் கொண்டானா? அன்றி சங்கிலித் தொடராக அமையக்கூடிய சிறு சிறு மாற்றங்கள் இறுதியில் அவர் விரும்பிய இலக்கு நோக்கி மக்களை இட்டுச் செல்லக்கூடிய வழியாக அவர்தம் நாடகங்களை வடிவமைத்திருக்கிறாரா?

8) இதற்கு எவ்வகையான செயல்பாட்டு வழிமுறைகளைத் தம் நாடகம் மூலம் தருகிறார் — என்ற வினாக்களுக்கு அவர் நாடகங்களில் விடை காணமுடியும்.

"சந்திரோதயம்" ஒரு சமூக மாற்றத்தைக் கொணர முயலும் விழிப்புணர்வு நாடகம்; முதன் முதலில் அண்ணா எழுதிய சமூக நாடகம் இதைப் பகுத்தறிவுப் பாசறையின் போர் முரசாகவே கருதுவர்.

"வேலைக்காரி" ஏழை பணக்காரர் 'ஆண்டான் அடிமை' 'சாதி—சமய வேறுபாடுகள்' போன்ற சமூக முரண்கள் சமூகத்தில் வேரோடிப் போயிருப்பதைச் சுட்டிக் காட்டுவது. இதன் கதாநாயகன் ஆனந்தன்; ஏழைகள் உலகின் பிரதிநிதி—ஏழைகளைச் சுரண்டிப் பிழைக்கும் வேதாசல முதலியார் தான் தன் தந்தையின் தற்கொலைக்குக் காரணம் என்று அறிந்த ஆனந்தன் பழிவாங்கும் கதையே இந்நாடகம். ஆனால் சமூக உணர்வு உடைய மனித நேயம் கொண்ட அவன் மூலம்தான் அண்ணா தம் சமூக மாற்றக் கருத்துக்களை எடுத்துரைக்கிறார்.

பாரதியின் புதிய ஆத்திச்சூடி வலியுறுத்தும் "கீழோர்க்கு அஞ்சேல் சீறுவோர்ச் சீறு, செய்வது துணிந்து செய், நேர்படப் பேசு, நையப்புடை, பிழைக்கு இடங்கொடேல், உலுத்தரை இகழ், வெடிப் புறப் பேசு" எனும் கருத்துகளின் விளக்கமாக அமைவது வேலைக்காரியின் பாத்திரப்படைப்புகள் என்கிறார் இரா. ஜனார்த்தனன்.

"ஓர் இரவு" —நாடகம் அண்ணாவுக்குத் "தமிழகத்தின் பெர்னார்டு ஷா" என்ற பட்டத்தை ஈட்டித்தந்தது. மாற்றான் தோட்டத்து மல்லிகையும் மணக்கும் என உலகிற்கு உணர்த்தி,

தியது. இதன் கதாநாயகியான சொர்ணம், 'கோரிக்கையற்-றுக் கிடக்கும் வேரில் பழுத்த பலாவாக' விளங்கும் விதவை. வசதியும் வாய்ப்பும் பெற்ற பெருந்தனக்காரர்களால் காதலிக்கப்பட்டு, கைவிடப்பட்டு வஞ்சிக்கப்பட்ட சமூகச் சுரண்டல் களுக்கு ஆளாகும் பெண்ணினத்தின் பிரதிநிதி இவள்.

பின்னோக்கு உத்தியை முதன் முதல் தமிழ் நாடக மேடைக்கு அறிமுகப்படுத்திய இந்நாடகம் கல்கி, நாரண துரைக் கண்ணன், நாவலர் நெடுஞ்செழியன் ஆகியோரால் பலபடப் புகழப்பட்டது.

''ஓர் இரவு'' ஓர் உயர்ந்த லட்சியத்துடன் எழுதப்பட்ட நாடகம். நம் சமுதாயத்தில் உள்ள ஊழல்களை நாகரீகமாக எடுத்துக் காட்டி, மக்கள் தங்களை மூடப் பழக்க வழக்கங்களிலி-ருந்தும் அர்த்தமற்ற கொள்கைகளிலிருந்தும் விடுவித்துக் கொண்டு நல்வாழ்வு வாழ வழிகாட்டும் நாடகம்' என்கிறார் நாரண. துரைக்கண்ணன் (சிவதாணு, டி. என், 1970:137).

''காதல் ஜோதி''—சாதிசமய போதையில் மூழ்கிக் கிடக்கும் தமிழ் மனதைத் தட்டியெழுப்பி பேத வேறுபாடற்ற சமு-தாயம் உருவாக வேண்டிய கருத்துகளை முன்வைக்கும் நாட-கம் ''நாட்டிலே சாதிதான் மக்களுக்குள் பேதத்தை ஏற்படுத்தும் முதல் சாதனம், மக்களின் ரத்தத்திலே கலக்கப்பட்டிருக்கும் கடும் விஷம். மனதிலே முடக்கு நோயைப் புகுத்திவிட்ட முறை. எனவேதான் பேதமற்ற சமுதாயத்தை, சமத்துவத்தை, சம. தருமத்தை நாம் காண வேண்டுமானால் முதலில் சாதியைத் தொலைத்தாக வேண்டும். இந்தக் கருத்தை வலியுறுத்தித் தீட்-டப்பட்டதுதான் காதல் ஜோதி'' என்று தம் நாடக முன்னுரையி-லேயே கூறிவிடுகிறார் அண்ணா (அண்ணாதுரை, சி.என், 1978).

ஆண்டான் ஊரில் உள்ள பெருந்தனக்காரரான சந்திர சேகர ஐயரின் செயல்பாடுகள் மூலமும் அவரது மகன் நடி கனான அருள் குமரரின் கயமைச் செயல் மூலமும் உண்மைக் காதலுக்கு சாதிவேறுபாடும் சமுதாயப் படிநிலையில் உள்ள

வேறுபாடும் காரணமாவதையும் 'காதல் ஜோதியை சாதிப்புயல் அழிக்கமுடியாது' என்பதையும்உணர்த்துகிறார்.

## சமூக மாற்றத்திற்கான முதன்மைக் கருத்துகள்

சமூகத்தின் அவல நிலைகளை அடையாளம் காட்டுவது ''சந்திரோதயத்தின்'' அடிக்கருத்து எனலாம். இதனை ஒரு பெரிய அடிக்கருத்தாகக் கொண்டு,

1. பெற்ற பெண்ணையே பணத்தாசையால் வாணிபப் பொருளாக்குவது;

2 சாதிசமய போதையால் உண்மைக்காதலை மறுப்பது;

3 பொருந்தாமணமும் அதன் விளைவான கைம்மையும்;

4. மேல் மட்டத்து வர்க்கத்தினரே ஒருவரை ஒருவர் ஏமாற்றிப் பிழைப்பது;

5. ஆதீனங்களும் மடங்களும் மக்களைச் சுரண்டுவது;

6. தீண்டாமை எளிய மக்களை எவ்வாறு வதைக்கிறது எனச் சுட்டுவது போன்ற சமூக அவலங்களை எடுத்துரைக்கும் கதைக் கூறுகளை அடிக்கருத்து அலகுகளாகக் கொள்ளலாம்.

வட்டியூரின் செல்வச்சீமான் சிங்கார வேலர் வட்டியென்ற பெயரில் தனக்குக் கடன்படும் எளிய மக்களின் சொத்துகளைச் சுரண்டிக் கொழுப்பவர்; அவரது பணத்தாசைக்குத் தூபம் போட்டு அவரது தீமைகளுக்கெல்லாம் துணையிருக்கும் வாஞ்சி நாத ஐயர் சிங்கார வேலரையே ஏமாற்றி அவரது பணத்தைக் கொள்ளையடிப்பவர். அவ்வூர்புத்துலகக் கழகத்தின் இயக்குநரான துரைராசு கதையின் நாயகன்; வைதிகத்தின் இருப்பிடமாக வேடம் கட்டும் வாஞ்சிநாத ஐயரின் உண்மை உருவை உணர்ந்தவன். எனவே அவன் மீது திருட்டுக் குற்றத்தைச் சுமத்தி அவனை ஊரை விட்டே விரட்டுகிறார் வாஞ்சிநாத ஐயர் சிங்கார வேலரின் மகள் சந்திரா; இவள் சாம்பசிவம் எனும் புத்துலகக் கழகத்தின் செயலரைக் காதலிக்கிறாள். இதை வளரவிடக்கூடாது என்று தூண்டும் வாஞ்சிநாத ஐயரின் வஞ்சக வினையால்,

சாகும் நிலையில் உள்ள கிழவனுக்கு, அவன் பணம் படைத்த நல்லூர் ஜமீன் என்ற ஒரே காரணத்திற்காக மனைவி ஆக்கப்படுகிறாள், விரைவில் விதவையும் ஆகிறாள்.

இங்குச் சாதி வேற்றுமை, பொருளாதார வேற்றுமை, கொள்கை வேற்றுமை ஆகியன மட்டுமின்றி செல்வம் சேர்க்கும் பேராசையும் அந்தஸ்து ஆசையும் பெற்ற மகளையே விற்கச் செய்யும் நிலையையும் எடுத்துரைக்கிறார் அண்ணா.

ஊரை விட்டுச் சென்ற துரைராசு ஒரு சத்திரத்தில் உறங்கிக் கொண்டிருக்கும் பொழுது அழகூர் மடாதிபதியின் எதிரிகளால் அழைத்துச் செல்லப்பட்ட மடாதிபதிப் பதவியைத் கற்காலிகமாகப் பெறுகிறான்.

"ஊர்ச் சொத்தைத் தின்று ஊன் சுமந்துதிரியும் உலுத்தர் கூட்டம்". என்றும் "கடவுளின் பெயராலும் மதத்தின் பெயராலும் அளவுக்கு மீறிய சொத்துக்களை மடாலயம் என்றபெயரால் அனுபவித்து வரும் அயோக்கியர்கள்" என்றும் அவர்களைப் போன்றவர்களால் வஞ்சிக்கப்பட்டு, வாழ்க்கையின்கடை நிலையில் இருக்கும் பல ஏழைகளுக்கு அம்மடத்தின் செல்வங்களை வாரிக் கொடுக்கவும் கல்வி நிலையங்களுக்கும் அனாதை இல்லங்களுக்கும் மருத்துவ மனைகட்கும் அறக்கொடை செய்யவும் அந்த வாய்ப்பைப் பயன்படுத்திக் கொள்கிறான். அத்துடன் தான் சார்ந்த புத்துலகக் கழகத்தின் வளர்ச்சிக்காகவும் தன் கொள்கைகளை நிறைவேற்றவும் தேவையான செல்வத்துடன் 'செல்வச் சீமான் மாயேந்திர பூபதி' என்ற பெயருடன் மாறு வேடமிட்டுத் தன் ஊருக்கே திரும்புகிறான். உரிமையற்ற வாழ்வு வாழும் பெண்களின் பிரதிநிதியாக நிற்கும் சந்திராவை அவளது பழைய காதலன் சாம்பசிவத்துடன் இணைத்து வைப்பதுடன் வாஞ்சிநாதஐயரின் உண்மைக் குணத்தையும் சிங்காரவேலர் அறியச்செய்கிறான். வாஞ்சிநாதரால் தன் செல்வமனைத்தையும் இழந்த சிங்கார வேலர் அந்த ஆத்திரத்துடன், கூடவேயிருந்து குழிபறித்த ஐயரைக் கொன்று விடுகிறார். அக்கொலைப் பழியைத் தன்மேல் ஏற்றுக் கொண்ட மாயேந்திர பூபதி, தான்

தான் புத்துலகக் கழகத்து துரைராசு என்பதைக் கூறி, நஞ்சருந்தி இறந்து விடுகிறான். தான் செய்த குற்றங்களுக்குத் தற்கொலையே சரியான வழியென்று முடிவெடுக்கிறான் தன்னுயிரைத்தந்து பிறரைக் காப்பாற்றும் அவனது பெருந்தன்மையால் இறுதியில் மனம் திருந்துகிறார் சிங்காரவேலர். வறுமையில் அடிபட்டு, வாழ்க்கைச் சுழல்களைக் கடந்து வந்தவனாயினும், தனக்குக் கிடைத்த ஒரு சந்தர்ப்பத்தையும் பயன்படுத்தி, எல்லோர்க்கும் எல்லாமான புதிய சமுதாயத்தை நிறுவும் கொள்கையில் தன்னால் இயன்ற வரை நடத்திக் காட்டிய துரைராசு அண்ணாவின் குரலாகவே ஒலிக்கிறான்.

இந்நாடகத்தில் அண்ணா விரும்பிய சாதி வேறுபாடற்ற சமுதாயத்திற்கு ஒரு வழியாகவே காதல் மணத்தைச் சுட்டுகிறார். அக்காதல் மணம் விதவை மறுமணமாகவும் அமைகிறது. தான் விரும்பிய கணவனை அடையவும் உரிமையற்ற பெண், ஜமீன் சொத்துக்களுக்காக அடிமைபோல நடத்தப்படுவதும் திருமண ஏற்பாடு கூட அடிமை வியாபாரமாகவே இருப்பதும் உணர்த்தப் படுகிறது.

1 இந்நாடகத்தின் மூலம் மடாலயங்களில் நிலவும் உட்பகையும் ஊழலும் சுட்டிக்காட்டப்படுவதுடன் அவற்றில் தேங்கிக்கிடக்கும் செல்வம் எவ்வாறெல்லாம் சாதாரண மக்கள் நலமுறப் பயன்படுத்தப்பட முடியும் என்பதும் எடுத்துரைக்கப்படுகிறது.

2 பெண் உரிமை வாழ்வு பெறக் கழகத்தோழர்கள் உதவுவதாகக் காட்டி, சமூக மாற்றத்தில் தம் இயக்கத்தின் செயல்பாடு எவ்வாறெல்லாம் மக்களுக்கு உதவமுடியும் என்று விளக்கிக் காட்டுவதுடன் கழகத்தின்பால் மக்கள் நல்லுணர்வு கொள்ளவும் பகுத்தறிவுக் கொள்கைகளையும் சமூகச் சீர்திருத்தக் கருத்துக்களையும் மக்கள் தாமே முன்வந்து ஏற்கவும் வழி வகுக்கிறார் அண்ணா,

3. சாதி சமய வேறுபாட்டை ஒழிக்கக் கலப்புத்திருமணமும் காதல் மணமும் ஒரு கருவியாகும் என்பதைச் சுட்டுகிறார்;

4. பொருந்தா மணம் புரியும் இளம்பெண்களின் வாழ்வில் ஏற்படக்கூடிய பெருந்துன்பத்தை நாடகம் பார்ப்பவர்களை உணர வைக்கிறார்.

5. பிறரை வஞ்சித்து வாழும் வாஞ்சிநாத ஐயர் போன்ற ஏமாற்றுக்காரர்களை அடையாளம் காட்டி, மேலும் அவர்களிடம் ஏமாறாது விழிப்புடன் இருக்க வழிகாட்டுகிறார்.

6. தீண்டாமை எனும் நச்சுநாகத்தால் தீண்டப்பட்ட மக்கள் படும்பாட்டை அவையோர் அனைவரும் உணரச் செய்கிறார்.

தீண்டாதவனாகக் கருதப்பட்ட ஒருவன் பொதுக் குளத்தில் இறங்கி நீர் அருந்தினான் என்பதற்காக ஜாதி இந்துக்கள் அவனை நையப்புடைத்து விடுகின்றனர். அவன் உடலில் இருந்து இரத்தம் கொட்டுகிறது. அங்கு எதேச்சையாக வந்த அவனது நண்பன் கேட்கிறான் "ஏனப்பா, உடலில் இரத்தம் சொட்டு-கிறதே!" என வினவ, அவன்: ஆமாம்! என்கிறான். என்ன? மாடு முட்டியதா? என நண்பன் மீண்டும் வினவ அதற்கும் ஆமாம் என்கிறான். மீண்டும் நண்பன் "அல்லது நாய்கடித்-ததா?" என வினவ அதற்கும் 'ஆமாம்' தான் பதில்; என்னப்பா! மாடு முட்டியதா என்றாலும் ஆமாம் என்கிறாய். நாய்-கடித்ததா என்றாலும் ஆமாம் என்கிறாயே"—இதற்கு இவன் பதில்: ஆமாம்! மாடு! நாய்! போன்றவர்கள்தான் என்னை அடித்தார்கள். மனிதர்கள் இதைச் செய்ய மாட்டார்கள் ஏன் அடிக்கிறீர்கள்? என்ன காரணம் என்றால் நான் தீண்டப்-படாதவன் என்கிறார்கள். உண்மைதான் நான் ஊர்ச் சொத்தைத் தீண்டியதில்லை! நான் கொடுமையைத் தீண்டியதில்லை! நான் வசதியைத் தீண்டியதில்லை! நல்வாய்ப்பைத் தீண்டியதில்லை. எனவே நான் தீண்டாதவன் (அண்ணாதுரை, சி. என். 1944 : 45).

இவன் பேச்சின் ஒவ்வொரு அலகும், எவ்வாறு அந்தக்கால கட்டத்தில் ஒரு இனத்தார் பிறிதோர் இனத்தால் நசுக்கப்பட்டு நலிவடைந்திருந்தது என்பதையும் கல்வியிலோ, வேலை வாய்ப்-

பிலோ முன்னேற வழியற்றிருந்தது என்பதையும் எடுத்துரைக்கிறது நசுக்கப்பட்ட கூட்டத்தாரின் ஒவ்வொரு மனிதனின் குரலாகவும் ஒலிக்கிறது.

இவ்வாறு ஒரு இனம் பிறிதொரு இனத்தை அடக்குவதன் மூலமும் அடக்கப்பட்ட இனத்தின் உழைப்பை உறிஞ்சி, தான் மட்டும் பொருளாதார அனுகூலங்களைப் பெற்றிருக்கிறது என்பதை உணரவைக்கிறார்.

சமுதாயத்தின் ஒரு பகுதி தாழ்த்தப்பட்டதாக மதிக்கப்படுமேயானால் கீழான வேலைகளில் அவர்களில் பலர் ஈடுபட்டிருப்பார்களேயானால், மேன்மை அடைந்த குழு குறைவான ஊதியத்தை அளித்து, அவர்களிடம் அதிகமான வேலையைப் பெறுவதன் மூலம், தங்கள் குழுவின் அனுகூலங்களை அதிகரித்து கொள்கிறது (நாராயணன், ஜெ, 1964 : 402).

"தங்கள் அரசியல் மேன்மையையும் அதிகாரத்தையும் நிலை நிறுத்திக் கொள்ள உயர்ந்த குழுக்கள், இன வெறுப்பைப் பயன் படுத்திக்கொள்ள. தாழ்த்தப்பட்ட இனம் அரசியல் உரிமைகளைப் பெறவும், அதிகாரத்தைக் கைப்பற்றுவதில் இருந்தும் முடிந்தவரை தவிர்க்கப்படுகிறது. மேன்மையான இனம் அதிகாரம் முழுவதையும் குவித்து வைத்துக் கொண்டிருக்கும் என்றெல்லாம் சமூகவியலார் கூறும் கருத்துகளை உள்வாங்கிக் கொண்ட அண்ணா குறிப்பிட்ட ஒரு இனத்தாரிடம் குவிக்கப்பட்டு இருக்கும் அதிகாரமும் வாய்ப்புகளும் பிரிக்கப்பட்டுப் பரவலாக்கப் படவேண்டும் என்பதை மக்களை உணரச் செய்வதற்கு மேற்கூறப்பட்டது போன்ற தர்க்கரீதியான உரையாடல்களைச் சமயம் கிடைத்த போதெல்லாம் பயன்படுத்தி மக்களின் கவனத்தைக் கவர்ந்து அவர்களுடைய மூடநம்பிக்கைகளையும் அறியாமையையும் களைந்து புரட்சி மனப்பான்மையை ஊட்டி, சமுதாய மறுமலர்ச்சிக்கு ஏற்ற மனநிலையைத் தன் பார்வையாளர்களிடம் உருவாக்கினார் அண்ணா. இதைத்தான் சமூகவியலார் இலக்கு நோக்கிய படிப்படியான தொடர் மாற்றம் என்பர்.

''ஓரிரவில்'' சமுதாய மாற்றத்திற்கான கருத்துக்கள்

ஒரு நாளிறுதியில் சந்திரோதயம் தோன்றியது முதல் விடியும் வரையிலான ஓர் இரவில் நிகழ்ச்சிகளின் கதைவடிவத் தொகுப்பே 'ஓரிரவு' நாடகம்.

சென்னை நகரின் இரவு நேர வாழ்க்கையைப் படம் பிடித்துக்காட்டும் இந்நாடகம். வாழ்க்கையின் ஒவ்வொரு நிலையிலும் இருக்கும் வெவ்வேறு பிரிவினரும் ஒரு நாள் இரவில் எவ்வெவ்வாறெல்லாம் நடந்து கொண்டனர், எவ்வாறான ஈடுபாடு இருந்தது என்பதைச் சுட்டுகிறது.

பெருந்தனக்காரர்களின் சுயநலத்தாலும் நம்பிக்கை துரோகத்தாலும் வாழ்விழந்த பெண்ணின் பாதுகாப்பற்ற நிலலயை சமூகத்தின் பிற அங்கத்தினர்கள் எவ்வாறு பயன்படுத்திக் கொள்கின்றனர் என்பதை எடுத்துரைப்பதே இந்நாடகத்தின் மைய நோக்கமாகும்.

சமூகக் கட்டுப்பாடும் பொருளாதார வேறுபாடும் காதலுக்குத் தடையாக அமைவதால் ஏற்படும் பின் விளைவுகளைச் சுட்டுவதுடன் பணக்கார உலகம், பாட்டாளி உலகம் என இரு உலகாகப் பிரிந்து கிடக்கும் காட்சிகளைக் காட்டி. ஒருலகில் இசையும் மகிழ்ச்சியும் என நிறைந்திருக்க பிறிதோருலகில் சண்டை, கலகம், கல்வீச்சு, கத்திக்குத்து, கள், குடிவெறியாட்டம் என இருப்பதை எடுத்துக் காட்டுகிறார் அண்ணா.

ஜமீன்தார் கருணாகரத் தேவர் தன்மகள் சுசீலாவை விரும்பும் டாக்டர் சேகரிடம் தன் மைத்துனான செகவீரபாண்டியனின்கைப்பாவையாகத் தான் ஆடவேண்டியிருக்கும் சூழலை விவரிக்கிறார். ஆராயாது, ஆத்திரப்பட்டுச் சூழலின் கைதியாகித் தான தன் மனைவி பவானியைக் கொலை செய்ய நேர்ந்ததையும் அக்கொலையைப் படம்பிடித்து வைத்துக் கொண்ட செகவீரபாண்டியன் தன் செல்வங்களையெல்லாம் சூறையாடுவதுடன் தன் பெண்ணையும் பலி கேட்பதைக் கூறுகிறார். தன் சுய நலத்துக்காகத் தன் மகளது காதலைத் தீய்க்க வேண்டிய நிலையில் இருக்கும்

அவரை அந்த இக்கட்டிலிருந்து காப்பாற்றுகின்றனர் சேகரும், கருணாகரத்தேவரால் கைவிடப்பட சொர்ணத்தின் மகனான இரத்தினமும். செகவீரனின் சூதுக்கோட்டையை இடித்துத் துளாக்கி விட்டு இன்பத்தோடு ஆரம்பித்த இரவு இன்பத்தோடு முடிகிறது.

சமூகத்தின் மேட்டுக்குடியினரின் செயல்களே சமூகச் சாய்க்கடைகளை உருவாக்குகின்றன என்பதும் அவர்களால் உருவாக்கப்பட்ட அபலைப் பெண்களும் அனாதைக் குழந்தைகளும் சாக்கடைப் புழுக்களாக மாறி சமூகம் முடைநாற்றம் எடுக்கக் காரணமாதல் இரண்டையும் சுட்டிக் காட்டி இந்நிலை ஒழிய சமூக வீரர்கள் தோன்ற வேண்டும் என்று உணரவைப்பதே நாடகத்தின் மையக்கருத்து. இக்கருத்தை வலியுறுத்த நாடகக்கதைப் பின்னலின் பிற கதைக் கூறுகள் அமைக்கப்பட்டுள்ளன.

அவை :

1. இளம் காதலர் சந்திப்பு 2. இளம் விதவையான மகளை வீட்டில் பக்த விஜயம் படிக்கச் சொல்லி விட்டுத் தந்தை இரண்டாம் தாரத்துடன் திரைப்படம் காணச் செல்லுதல்.

3. ஊர்ச் சாவடியில் நிகழும் சைவம் பெரிதா வைணவம் பெரிதா என்ற தத்துவத்தைச் சுட்டிக்காட்டி மதங்கள் மக்களை வழிநடத்திச் சென்றது போக மக்களைத் தமக்குள் போட்டியிடவும் பொறாமைப்படவும் வைப்பதை எடுத்துக் காட்டல்.

4. வீட்டில் குழந்தையும் மனைவியும் ஏங்கி நிற்க, கணவன் குதிரைப்பந்தயம் பற்றி நண்பர்களிடம் ஆலோசித்தல் இக்காட்சியின் மூலம் மக்களைச்சுரண்டுவது அறியாமையும் கள்ளும் மட்டுமல்ல. குதிரைப் பந்தயம், சீட்டு போன்ற சூதாட்டங்களும் தான் என்பதை உணரவைக்கிறார் அண்ணா.

5. இளம் விதவையான சுவர்ணாவைக் காதலித்த கருணாகரன் சமூகக் கட்டுப்பாட்டிற்குப் பயந்து சூலுற்ற அவளைக் கைவிட்டு செகவீரனின் தங்கை பவானியை மணப்பது.

6. கைவிடப்பட்ட அபலைப்பெண் எவ்வாறு தன்னையும் தன் மகன் இரத்தினத்தையும் காத்துக்கொள்ள மருதூர் மிட்டா-

தாரின் ஆசைக்கிழத்தியாக மாறுகிறாள் என்பதைக் கூறுவதன் மூலம் வறுமைச் சூழலும் வாழ்க்கைச் சூழலும் ஒரு ஆதரவற்ற பெண்ணை வழுக்கிவிழச் செய்கிறது என்பதை எடுத்துரைப்பது.

7. மருதூர் மிட்டாதாரின் பாதுகாப்பிலிருந்து சுவர்ணா வெளியேற்றப்படக் காரணமான கருணாகரன் மீண்டும் அவள்வாழ்வில் நுழைவது. கருணாகரனையும் சுவர்ணாவையும் மருதூர் மிட்டாதார் அடித்து விரட்ட மீண்டும் அவளை உதறிச் செல்வதிலேயே குறியாக இருக்கும் கருணாகரனுக்கு போலி கௌரவமும் சமூக ஏற்பும் குறித்த பயமுமே முக்கியமாகப் படுகிறது.

8. ஏழை எளிய மக்களிடமே இன்னமும் மனிதநேயமும் உதவும் பண்பும் மிச்சம் இருப்பதைத் தோட்டக்காரனின் செயல்பாடுகள் மூலம் விளக்குவது.

9. "இரும்புப் பெட்டிக்கும் இதயத்துக்கும் ஈஸ்வரன் சம்பந்தம் வைக்கிறது இல்லை" என்றும் "ஏழையின் முதுகிலே ஏறிச்சவாரி செய்து செய்து, பரம்பரை பரம்பரையா பழக்கப் பட்டுப் போச்சி, ஆனா இப்ப குதிரைகளெல்லாம் கொஞ்சம் இடக்கு செய்யுது" என்றும் கூறும் தோட்டக்காரனின் கூற்று மூலம் எவ்வாறு அச்சமகால சமூகத்தில் எளியோர்-தமை வதையே செய்யும் வலியோரை எதிர்க்கத் துணிந்த நிலை உருவாகிறது என்பது சுட்டப்படுவது.

10. செகவீரன் தான் சீமான் செட்டியாரிடம் பெற்ற கடனுக்காகத் தன் தங்கை பவானியை விலாசினி என்ற பாடகியாக அறிமுகப்படுத்துவதாகப் படைப்பதன் மூலம் சமுதாயத்-தில் உயர்குடிப் பெண்ணாயினும் சரி, அபலைப் பெண்ணாயினும் சரி ஆணின் சுய நலத்துக்காக இன்பப் பொரு-ளாகவும் வியாபாரப் பொருளாகவும் பயன்படுத்தப்படுவதை உணர்த்துவது. இதே போன்றதுதான் ஆறுமுகத்தால் பயன் படுத்தப்படும் வேதத்தின் நிலையும் செகவீரபாண்டியரை இரவிலேயே தேடிப் போகும் சேகரும் இரத்தினமும் சேரியில் சந்திக்கும் இவர்கள் சமூகத்தால் ஏளனத்துடன் பார்க்கப்பட

அதே நோக்கில், போக்கில் செய்யப்படும் செகவீரபாண்டிய னும் விலாசினியும் சபலபுத்தி உள்ளவர்களால் மெச்சப்படு கின்ற வேறுபாட்டையும் இப்பாத்திரப்படைப்புகள் சித்திரிக்கின்றன,

11. விலாசினி செட்டியார் வீட்டிற்கு வந்த சூழலைச் சரியாகப் புரிந்து கொள்ளாது, தான் கண்டதே காட்சியாகக்கொண்டு, தன் மனைவியைச் சந்தேகித்துக் கொலை புரிதலும் அதைப்படம் பிடித்த செகவீரன் மிரட்டுவதும் மேல் மட்டத்துச் சமூக அங்கத்தினர்கள் கூட தமக்குள் ஒருவரை ஒருவர் சுரண்டிப் பிழைப்பதும் வாய்ப்புக் கிடைக்கும் பொழுது ஒருவரை ஒருவர் நசுக்குவதும் சுட்டப்படுகின்றன.

12. தன் தாயின் வைத்தியச் செலவிற்குப் பணமற்ற நிலையில் தன் தந்தையின் வீட்டிற்கே திருடச் சென்ற இரத்தினத்தைத் தன் தமையன் என்று அடையாளம் காண இயலாத சுசீலா தன்மாமனை ஏமாற்றுவதற்காக அவனைத் தன் காதலனாக நடிக்கச் சொல்ல, எதிர்பாராத அங்கு வந்த அவள் தந்தையும் உண்மைக் காதலனும் அவளைச்சந்தேகிக்கச் செய்தல்; பெண்கள் ஆராய்ந்து பாராது ஆதாவற்ற நிலையில் அவசரமாக எடுக்கும் முடிவு இறுதியில் தீமை விளைவிப்பதாக அமையக்கூடும் என்பதை உணர்த்துகிறது. தேவையால அளவு செல்வமிருந்தும் தந்தையின் செயலால் சுசிலாவுக்கு வாழ்க்கையில் எண்ணியதைப் பெறுவதில் தடை தந்தை சுயநலத்துடன் செயலாற்றுதல். ஆனால் தாயின் முழுமையான அ.ாபிருந்தும் அன்பிற்கு உரிய அவளைக் குணப்படுத்தவும் இரத்தினத்திடம் செல்வமற்ற நிலை எனப் பணம் படுத்தும்பாட்டை உணர வைக்கிறார் அண்ணா.

13. சேகரின் மனதில் விளைந்த சந்தேகத்தைத் தீர்க்க இரத்தினம் தன்தாயிடம் பேசும் பேச்சை அவர்கள் அறியாது சேகர் கேட்பதாக அமைத்தமை—இவ்விரண்டு காட்சிகளிலும் ஆண்கள் உண்மையை முனைந்து காணாது, தெளிந்து தேராது கண்டதே காட்சியாகக் கொண்டு உடனே அவசர முடிவு எடுப்பதும் அதனால் அவர்களுடன் தொடர்புடைய பெண்கள் பாதிக்கப்படுவதும் சுட்டிக் காட்டப்படுகின்றன.

14. மது, மாது, சூதாட்டம், ஒழுக்கக் கேடு எல்லாம் இணைந்து உருவான மேட்டுக்குடியை அறிமுகம் செய்தல்.

15. 'இதுதான் சாக்கடை' எனச் சுட்டிக்காட்டுவதுடன் அமைந்து விடவில்லை அண்ணா; இந்தக் கோரமும், கொடுமையும் ஆபாசமும் உருவாகக் காரணங்களையும் சொல்வதன் மூலம் அவற்றைக் களைய முற்படவேண்டும் என்ற மனப்பான்மையை மக்களிடம் ஏற்படுத்துகிறார். ஏழ்மை, படிப்பில்லாமல் இருக்கிறது; நல்லவர்கள் நமக்கென்னவென்று போய்விடுவது - இதுதான் காரணம் என்பதை எடுத்துரைக்கிறார்.

'தமிழ்க்குலத்தை அழிக்கும் வேர்ப்புழுக்களை அழித்தாலன்றி தமிழகம் தழைக்குமாறில்லை (ஜனார்த்தனம் இரா.1974 : 239) என்பதை உணர்ந்த அண்ணா அப்புழுக்களை அகற்றும் பூச்சிக் கொல்லியாகத் தன் நாடகங்களைப்படைத்தார்.

*முடிவுரை*

சமூக மாற்றம் பற்றிக் குறிப்பிடும் பொழுது, 'முன்னேற்றம் என்பது விரும்பத்தக்க வளர்ச்சியை நோக்கி முன்னேறிச் செல்லுதல் என்று சமூகவியலார் கூறுவர்.

'தரம் (Scale) திறன் (efficiency) சுதந்திரம் (freedom), பரிமாற்றம் (Mutuality) ஆகிய முடிவுகளை நோக்கிச் சமூகம் முன்னேறுகிறது எனவும் நாம் நல்லது, உயர்ந்தது மதிக்கின்ற ஒரு திசையில் ஏற்படும் பரிணாம வளர்ச்சி என்றும் விளக்குவர். இத்தகு முன்னேற்றங்களுக்கு முதல்படியாக அமைந்தன அண்ணாவின் நாடகங்கள். இவருக்கு முன் சமூகச் சீர்திருத்தம் பற்றிச் சிந்தித்த சமூக நலம் நாடிய சிந்தனையாளர்களும் இலக்கியவாதிகளும் இப்படிக்கு அடிக்கல் நாட்டியவர்கள் எனலாம். அவர்களை முன்னோடியாகக் கொண்ட அண்ணா தமிழன் தன் நிலையை முழுமையாக உணரவைத்ததுடன் அதை மீறி வெளிவர முயலும் முதல் அடிக்கு உதவியவர் எனலாம்.

இந்த முதலடி இன்று ஒரு நீண்ட நடைப் பயணத்திற்குப் பாதை வகுத்துள்ளது.

1) பெண் உரிமை, பெண் விடுதலை முதலியவற்றை வலியுறுத்தும் மனப்போக்கு பெண்களிடமும் ஆண்களிடமும் வளர்ந்துள்ளது.

2 திருமணம் தெய்வீகச் சடங்கு என்ற நிலையில் இருந்து மாறித் திருமணத்தை ஒரு சமுதாய ஒப்பந்தமாக, வாழ்க்கை ஒப்பந்தமாக ஏற்கும் மனப்பான்மை வளர்வதற்கு ஏற்ற சூழல்களைச் சமூக மாற்றம் உருவாக்கியுள்ளது.

3. கலப்புமணம், காதல்மணம், சீர்திருத்தமணம், புரட்சிமணம், எனத் திருமண உறவுகளை ஏற்படுத்தும் சடங்கினை மூட நம்பிக்கைகளின் பிடியிலிருந்து விடுவித்து அந்தணர் அற்ற திருமணம், இராகு காலத்தில் புரட்சி மணம், தமிழ்த் தலைவர்களின் வாழ்த்துடன் நடைபெறும் தமிழ்த்திருமணம், பதிவுத்திருமணம் என மக்கள் மனதில் மாற்றங்கள் ஏற்பட்டுள்ளது.

4. மண முறிவு, மணமுறிவு பெற்ற பெண்களின் மறுமணம் பற்றி சிந்தனையும் விதவை மறுமணத்தை ஏற்கும் மனநிலை உருவாக்கப்பட்டுள்ளது.

5. முழுமையாக நூறு விழுக்காடு தீண்டாமை ஒழியவில்லை எனினும், முன்பிருந்த கடுமையான தள்ளி வைப்பு முறை இன்று குறைந்துள்ளது. கோவில், பொது இடங்களில் சம உரிமையுடன் கலந்து கொள்கின்றனர்.

6. பரம்பரைத் தொழில் மூலம் சாதிப் பிரிவுகள் அழுத்தம் பெற்றமையைக் கண்டித்து, தொழில் இழிவு பற்றிய கண்ணோட்டத்தைப் போக்கியதுடன், பரம்பரைத் தொழில் முறை மாறி, அனைவரும் கல்வி கற்பதன் மூலம் புதிய வேலை வாய்ப்புகளைப் பெறக் கூடிய சூழல் மாற்றம் ஏற்பட்டுள்ளது.

7. ஆரிய மாயை பெருமளவு குறைக்கப்பட்டுள்ளது.

8. இனவெறுப்பு என்ற நிலையிலிருந்து மாறி நாமும் முன்னேற வேண்டும் என்ற உந்துதல் ஏற்பட்டுள்ளது. இந்த உந்து சக்திக்கு அடிப்படையாகத் தமிழினத்தின் தொல் பெருமைகளை நினைவு கூர்வதற்கு உதவிய இலக்கியப்படைப்பாளிகள் தாம் எனலாம். இவர்களால் உருவானதே தமிழ் இனத்தை ஒற்றுமைப்படுத்தி, ஒன்றாகச் செயல்படச் செய்கிற "நாம்—உணர்ச்சி (we-Teeling)"

9. வாயடியும் கையடியும் செய்து மருட்டுகின்ற மதத்தலைவர்கள் என்ற நிலைமாறி, மடாதிபதிகளும் மதத்தலைவர்களும் மக்கள் நல வாழ்வு பற்றிய சிந்தனையுடன் செயல்பட ஆரம்பித்துள்ளனர்.

10. பழைய புராணக்கதைகளையும் அவற்றை ஒட்டிய மூட நம்பிக்கைகளையும் எதிர்க்கும் போக்கு வளர்ந்துள்ளது.

11. வினைக் கோட்பாடு, தலையெழுத்து போன்ற தன்னம்பிக்கையைக் குறைக்கும், தாழ்வு மனப்பான்மையை உருவாக்கும் பழ மரபுக் கூறுகளை அடையாளம் கண்டு ஒதுக்கும் மனப்பான்மை வளர்ந்துள்ளது.

12. சாதி மத எதிர்ப்பு அலை இருப்பினும் அதனுடன் பிரிக்க இயலாதவாறு சாதிமத உணர்வுகள் அரசியல் முதற்கொண்டு பல்வேறு சமுதாய நிறுவனங்களால் வளர்க்கப்படுவது ஒரு முரண்பட்ட சமூக யதார்த்தம் எனலாம். அரசியல் மதத்திற்கும் சாதிப் பிரிவுகளுக்கும், ஆதரவாக இருக்கும் வரை மதத்தையோ சாதியையோ முழுமையாக அழிக்கமுடியாது. ''இந்திய சமூக அமைப்பைத்திருத்தி அமைக்க வேண்டுமென்றால், அரசியல் சீர்திருத்தத்திற்கு முன் சமூகச் சீர்திருத்தம் ஏற்படவேண்டும்'' என்றார் அம்பேத்கார். இலக்கியமும் சமூகமாற்றமும் என்ற அடிப்படையில் இரண்டு வித அணுகுமுறைகள் உள. ஒன்று சமூக மாற்றம் பற்றிய கருத்துகளைப் பிரதிபலிக்கும் அடிக்கருத்துகளைப் பாடு பொருளாகக் கொண்டுள்ள இலக்கியங்கள். இரண்டாவது பாடு பொருள் அடிப்படையில் சமூக மாற்றங்கள் பற்றிய கருத்துக்களை அடிக்கருத்தாகக் கொள்ளாதிருப்பினும் முழுக்க முழுக்கச் சமூகப் புரட்சியில் மூழ்கித்திளைத்து, அதிலிருந்து பெற்ற புதிய எண்ணங்களுடன் வெளிப்படுபவை. இவற்றை முறையே புரட்சிபற்றிய இலக்கியம், புரட்சியால் விளைந்த இலக்கியம் எனலாம் (Leon Trotsuy - 1991, 228-229). அண்ணாவின் நாடகங்கள் முன்னதற்கு எடுத்துக்காட்டாகத் திகழ்கின்றன.

## துணை நூற்பட்டியல்

1. அண்ணாதுரை, சி. என்., அண்ணாவின் நாடகங்கள் (தொகுப்பு), பரிமளம் பதிப்பகம், சென்னை 34, 1971.

2. அண்ணாதுரை, சி. என்., சந்திரோதயம், பூம்புகார் பிரசுரம், சென்னை. 1944.

3. அண்ணாதுரை, சி. என்., ஓர் இரவு, பாரிநிலையம், சென்னை, இரண்டாம்பதிப்பு, 1969.

4. அண்ணாதுரை, சி. என்., வேலைக்காரி, பூம்புகார் பிரசுரம், 1980.

5. அண்ணாதுரை, சி. என்., சந்திரமோகன் அல்லது சிவாஜி கண்ட இந்துராஜ்ஜியம், பூம்புகார் பிரசுரம், சென்னை, 1980

6. அண்ணாதுரை சி. என்., காதல் ஜோதி, பாரிநிலையம், சென்னை, 1978.

7. அண்ணாதுரை, சி. என்., நீதிதேவன் மயக்கம், பூம்புகார் பிரசுரம், சென்னை 1980.

8. அண்ணாதுரை, சி. என்., புதிய மடாதிபதி, பூம்புகார் பிரசுரம் சென்னை, 1980

9. அண்ணாதுரை, சி. என்., கல்சுமந்த கசடர், பூம்புகார் பிரசுரம், சென்னை, 1980,

10. அண்ணாதுரை, சி. என்., கண்ணாயிரத்திரத்தின் உலகம், பூம்புகார் பிரசுரம், சென்னை, 1980

11. அண்ணாதுரை சி. என்., ஆரியமாயை, திராவிடப் பண்ணை, சென்னை, 1981

12. அண்ணாதுரை, சி. என்., ஏ தாழ்ந்த தமிழகமே, பூம்புகார் பிரசுரம், சென்னை.

13. பேறிஞர் அண்ணாதுரை, புன்னகை, அன்பு நிலையம், சென்னை, 1984.

14. சிவதாணு டி. என் (தொ.ஆ) நாடக உலகில் அண்ணா. சங்கரதாஸ் சுவாமிகள் நினைவு மன்றம், 1970.

15. ஜனார்தனம், இரா. அண்ணா ஒரு நாடக அறிஞர், அவர் கலைநயமும் கருத்து வளமும், நக்கீரம் வெளியீடு, சென்னை, 1974.

16. நாராயணன் ஜே. (மொ. பெ. ஆ), சமூகவியலின் அடிப்படைக் கோட்பாடுகள், பி.கில்பர்ட், தமிழ் வெளியீட்டுக் கழகம், சென்னை, 1964.

17. Steven vago, Social Charge, Second Edition, 1989.

18. Anand Prakash (Ed) Literature and Revolution - Leon Trotskey, New Delhi.

19. தேசிக விநாயகம் பிள்ளை, கவிமணியின் உரை மணிகள், பாரதிநிலையம், 1993.

# அறிஞர் அண்ணாவின்
# 'கலிங்கராணி'

ம. திருமலை

மேடைப் பேச்சினாலும் தமது தனிப்பட்ட இயல்புகளாலும் தமிழகத்தின் அனைத்துப் பகுதிகளிலும் தமது பெயரை ஒலிக்கச் செய்தவர் அறிஞர் அண்ணா; அவர் தமது எழுத்தாற்றலாலும் தம்மை நிலை நிறுத்திக் கொண்டவர். தமிழக அரசியல் வரலாற்றில், இந்திய தேசிய காங்கிரஸ் கட்சிக்கு ஒரு மாற்றுச் சக்தியாக உருவாகி வளர்ந்த ஒருபெரும் இயக்கமான 'திராவிட முன்னேற்றக் கழகத்தின் சிந்தனைகளைத், தமிழ் இளைஞர் நெஞ்சங்களில் மிக ஆழமாக விதைத்த பெருமை அறிஞர் அண்ணாவுக்கு உண்டு. மேடைப் பேச்சுக்கள் மூலம் இந்தச்செயலைச் செய்தது போலவே எழுத்துக்கள் மூலமாகவும் தமது கோட்பாடுகளை அண்ணா பரப்பியுள்ளார். கடிதங்கள், கட்டுரைகள், சிறுகதைகள், புதினங்கள் என்று பல எழுத்து வடிவங்களையும் இதற்கே அவர் பயன்படுத்தியுள்ளார்; அவருடைய படைப்புக்கள் அனைத்திலும் இழையோட்டமாக ஒரு செய்தி தொடர்ந்து அடைத்து கொண்டே இருக்கிறது; ஆரிய திராவிடர் முரண்பாடு, ஆரியர்களால் திராவிடர் சுரண்டப்பட்டு ஏமாற்றப்பட்டு அடிமைகளாகத் திகழ்தல் இறுதியில் விழிப்புணர்வு பெறுதல் முதலான கருத்துக்கள் ஏதாவது ஒரு சில வரிகளில் இவருடைய படைப்புக்களில் வெளிப்படுகின்றன.

சிறுகதை, நாவல், கடிதம், கட்டுரை என்று பல எழுத்து வடிவங்களையும் கையாண்ட அறிஞர்அண்ணா அவ்வடிவங்களின் கலை நுட்பங்களை எவ்வாறு பயன்படுத்தியுள்ளார் என்று காண்பது இக்கட்டுரையின் நோக்கமாகும். இதற்காகக் 'கலிங்கராணி' என்ற அவரது நாவல் இங்குத் தரவாக மேற்கொள்ளப்படுகிறது.

கலிங்கராணி நாவலில் அறிஞர் அண்ணா, ஆரிய—திராவிட இன முரண்பாட்டினைத் தெளிவாகச் சித்திரித்துக்காட்டியுள்ளார். ஆரிய இனத்தைச் சேர்ந்த ஒரு ஆலயப் பூசாரி அந்நாட்டு மக்கள், அரசி மீது செலுத்தும் தவிர்க்க இயலாத ஆதிக்கத்தினையும் அதனைத் தமிழ் வீரமரபினர் முறியடிப்பதையும் நாவலில் சித்திரிக்கிறார். இதனைச் சிறந்த, செறிவான கட்டமைப்பின் மூலம் அறிஞர் அண்ணா அவர்கள் சித்திரித்திருக்கின்றார்,

அதனை விளக்கும் முன்னர் கலிங்கராணி நாவலின் கதைச் சுருக்கம் இங்குக் கூறப்படுகின்றது.

சோழ நாட்டுக் குதிரைப் படைத்தலைவன் வீரமணி அங்கிருந்த அரண்மனையைச் சேர்ந்தபெண்ணான நடன ராணியைக் காதலித்துக் கொண்டிருக்கிறான். குறுநில மன்னர்கள்பலர் சோழனுக்குத் திறை செலுத்த, கலிங்க மன்னன் மட்டும் திறை செலுத்தாததால், சோழன் கலிங்க நாட்டின் மீது படையெடுப்பு நடத்துகிறான். அதில் குதிரைப்படைக்குத் தலைமையேற்று வீரமணி செல்கிறான். கலிங்க அரண்மனையில் சோழன் மகளுடன் மிக நெருக்கமாக இருக்கும் நடன ராணியை அரண்மனையை விட்டு வெளியேற்ற, ஆரியமாது கங்கபாலா முயற்சி செய்கிறாள். போரில் கலிங்க மன்னன் அனந்தவர்மன் தோற்று ஓடிவிடுகிறான்; போர்க்களத்தில் இறக்கும் தறுவாயில் இருக்கும் ஒருமுதிய கலிங்க வீரனின் வரலாற்றை வீரமணி கேட்டறிகிறான். மலர்புரியின் விதவை ராணியின் காமவேட்கையைத் தீர்ப்பதற்காக, இறைவனால் அனுப்பப்பட்ட தேவனின் அம்சம் என்று ஆரியரால் கற்பிக்கப்பட்டதற்கிணங்க தேவியின் சன்னிதியில் மலர்புரி அரசியுடன் தான் உறவுகொண்டதும், அதனால் பெண் குழந்தை பிறந்ததும், தான் தேவனல்ல மனிதன் என்ற உண்மையைக் கூறியும் அரசி ஆரியமுனிவனின் போதனையால் அதனை நம்பாததும் வீரமணிக்குக் கலிங்க வீரனால் கூறப்படுகின்றன. இதனால் சோழர் படைத்தலைவரால் துரோகி எனக் குற்றம் சாட்டப்பட்டு வீரமணி நாடு கடத்தப்படுகிறான். நாடு கடத்தப்பட்ட வீரமணி, கலிங்க வீரன் குறிப்பிட்ட கதைப்படியும், அவன் குறிப்பிட்ட, நீலமணி அணிந்த அவனது மகளைத் தேடியும் மலர்புரிக்கு வருகிறான். அங்கு மணிவீரன் என்ற பெயருடன் ஆரியனின்மெய்க்காவலனாகச் சேர்கிறான். இதற்கிடையில் காஞ்சியில், நடனா தன் காதலனுக்கு நேர்ந்த பழியினை எண்ணி உடல் நலிய, அதற்கு வைத்தியம் செய்ய வந்த அற்புதானந்தரின் காமவேட்கைக்கு வற்புறுத்தப்படுகின்றாள்; மறுத்துரைத்ததால், கங்கபாலவும் அற்புதானந்தரும் விஷமிட்டு அவளைக் கொல்ல முனைகின்றனர்; சதி அம்பலமாக கங்கபாலா சிறைப்படவும் வைத்தியர் இறக்கவும் நேர்கிறது.

தனது காதலனைத் தேடிப்புறப்பட்ட நடனாவும் அவள் குழுவினரும் ஆரியப் பூசாரியின் தேவி சேனையால் தாக்கப்பட்டு, சிதறி ஓட நடனாவின் மெய்க்காவலன் உத்தமன் சிறைப்படுகிறான். நடனா பாண்டியமன்னன் அவையில் இடம் பெறுகிறாள்.

மலர்புரி அரசியைக் கொன்று ஆட்சியைக் கைப்பற்ற எண்ணிய ஆரியன், தளபதி கரிமுகனைத் தூண்டி படைப்புரட்சிக்கு ஏற்பாடு செய்கிறான். இதன் மூலம் மக்களால் கரிமுகனையும் கரிமுகனின் அரசியையும் கவிழ்த்துவிட்டு, தானே அரசனாகத் திட்டமிடுகிறான். அரசி திருக்கோவிலுக்கு வரும்போது தேவியின் சிலைக்குள் உத்தமனை ஒளிந்திருக்கச் செய்து அரசியைக் கொல்லவும் திட்டமிடுகிறான். எதிர்பாராத விதமாக மக்கள் எழுச்சியால் கரிமுகன் இறக்க மீண்டும் மருதவல்லி அரசியாகத் தொடர்கிறாள்.

தனது திட்டம் செயல் வடிவம் பெறக் காத்திருக்கும் ஆரியன், மணிவீரனையும் சிறையில் அடைத்து, அரசியைக் கொல்ல முயற்சி செய்கிறான். சிறைக்குள் மறைந்திருந்த உத்தமன் தன் மனத்திற்குள் திட்டமிட்டவாறு ஆரியரைக் கொன்று விடுகிறான்.

சிறையிலிருந்து தப்பிச் சென்ற மணிவீரன், தற்செயலாகக் காட்டுவாசிகளிடம் சிக்கி, ஒரு வயோதிகப் பெண்ணால் பாலுறவுக்காக நிர்ப்பந்திக்கப்படுகிறான். இதனால் மனநோயாளியாகி கையில் கலிங்க வீரன் தந்த நீலமணியுடன் தெருவில் அலைகிறான். நாட்டை பாண்டியமன்னன் பாதுகாப்பில் இருந்தபோதும் பிரதானி ஒருவனால் பாலுறவுக்கு நிர்பந்திக்கப்பட, மீண்டும் தப்பி ஓடி, இறக்கும் தருவாயில் மன்னனால் காப்பாற்றப்படுகின்றான். நீலமணியுடன் அலைந்த வீரமணி, நாட்டை காக்கு பாண்டிய மன்னனிடம் கொண்டுவரப்பட்டவுடன் மர்மங்கள் விடுபடுகின்றன. நடனா பாண்டியமன்னனின் அண்ணன் மகள் என்றும் காதலால் நாடும் முடியும் துறந்து சென்ற அவளே கலிங்கப்போரின் இறுதியில் வீரமணியைச் சந்தித்துத் தன் கதையைக்கூறிய முதியவளாவாள் என்பதும் பாண்டிய மன்னனால் கூறப்படுகின்றது.

பாண்டிய மன்னன் மாறுவேடத்தில் சென்று மலர்புரி அரசியிடமும் சோழனிடமும் நடனா வீரமணி பற்றிய உண்மைச் செய்திகளைக் கூற, இதனால் மனம் நெகிழ்ந்த சோழன் நடன ராணியை, புதிதாகவென்று இணைத்துக் கொண்ட, கலிங்க நாட்டின் ராணியாக்குகிறான்; மலர்புரியையும் கலிங்கநாட்டுடன் இணைக்கின்றான். நடனராணி கலிங்கராணியாக ஆகிறாள். கலிங்கராணி நாவலின் கதைப்பகுதி இது.

மேற்கூறப்பட்ட மையக் கதையை அறிஞர் அண்ணா தமிகவாறு இணைத்து, கதைப்பின்னலைத் திறம்பட விளக்கியுள்ளார். கதைப்பின்னலில் இடம்பெறும் நிகழ்ச்சிகள் மிகுந்த செறிவுடன் ஒன்றுடன் ஒன்று இணைக்கப்பட்டுள்ளன. மரபு வழியாகக் கதை கூறும் நாவல்களில் காணப்படுவது போன்ற கட்டமைப்பு இதில் உள்ளது.




கதைப்பின்னலில் வேறுபட்ட பண்புகள் கொண்ட மனிதர்கட்கிடையிலே நடைபெறும் முரண்பாடுகள், போராட்டங்கள் சிக்கலை (Conflict) விளக்குகின்றன.

1) சோழ மன்னனின் வேட்டை நிகழ்ச்சி, காஞ்சிக்கு வருதல், கலிங்கன் திறை கொடாமை முதலியவை சிக்கல் அல்லது முரண்பாட்டின் களமாக அமைகின்றன.

2) கலிங்கப்போர் அதில் வீரமணி, முதிய கலிங்க வீரனை சந்தித்து மலர்புரியின் கதையை அறிதல் சிக்கலின் தோற்றமாகின்றது. இதனைத்தொடர்ந்து வீரமணி துரோகக் குற்றம் சுமத்தப்பட்டு நாடு கடத்தப்பட்டு சிக்கலின் வளர்ச்சியாகக் காட்டப்படுகிறது.

3) வீரமணி நாடு கடத்தப்படல், மலர்புரிக்கு வருதல், அதே சமயத்தில் சோழ நாட்டிலிருந்து நடனராணி வெளியேறுதல் மலர்புரியில் நிகழும் அரசாங்கக் குழப்பங்கள் இதில் பலர் கொல்லப்படுதல் ஆரியமுனி உத்தமனால்கொல்லப் படுவது கதைப் பின்னலில் உச்சநிலையாக அமைகின்றது.

4) மணிவீரன் சிறையிலிருந்து தப்பி ஓடுதல். நடனா, பாண்டிய மன்னனிடம் அடைக்கலமாதல் அங்கு மனநோயாளியாக மணிவீரன் வந்ததும் அனைவரும் ஒன்றுபடுதல்—இது சிக்கலின் இறங்குமுகமாக அமைகின்றது.

5) சிக்கல் விடுவிப்பு முடிவும் பகுதியில் நடனாவின் தந்தை பாண்டிய மன்னனின் அண்ணன் என்பதும், தாய் மலர்புரி அரசி என்பதும் தெரியவருதல்.

6) நடனராணி கலிங்கராணியாக அமைவதை இந்த நாவலின் நிறைவுப்பகுதி கூறுகிறது.

மேற்கூறப்பட்ட முறையில் கலிங்கராணி நாவலின் கதைப்பின்னலை விளக்கலாம். இதில் கலிங்க நாட்டின் வரலாறோ, தமிழகத்தில் பிற்காலச் சோழர்களின் வரலாறோ எதுவும் இடம் பெறவில்லை. ஆயின் வீரமணி — நடனராணி என்ற இருவரின் காதல் நிறைவேற்றம்; மலர்புரி நாட்டில் ஆரியனின் சூழ்ச்சித் திறன்கள் அதனை தமிழர்கள் எதிர்த்து நின்று வீரத்தால் வெற்றி கொள்ளுதல் என்ற மையக் கருத்துக்கள்தான் நாவலில் கூறப்படுகின்றன. இந்த மையக் கருத்தினைச் சிறப்பிக்கும் வகையில் நாவலின் துணை நிகழ்ச்சிகள் அமைந்திருக்கின்றன.

சோழர் அரண்மனையினின்றும் நடனாவை அப்புறப்படுத்தி அதன் மூலம் சோழ மன்னனுக்கு ஊறு விளைவிக்க வேண்டும் என்று அம்மங்கையின் பிராமணத்தோழி கங்கபாலா எண்ணுகிறார். இதற்கேற்ற வகையில், வேட்டையிலிருந்து வீடு திரும்பாமல் காஞ்சி சென்ற வீரமணி கொடுத்தனுப்பிய பேசும் கிளி

அம் + மங்கை என்று நடனாவைக் குறிப்பிட, அதனைக் கங்க பாலா அம்மங்கை என்று விளக்கி, வீரமணி மன்னன் மகளை மணந்து, அரசனாகச் சதி செய்கிறான் என்று பழிதூற்றுகிறார். இது அம்மங்கைக்கு, நடனாவின் மீதும் வீரமணிமீதும் ஐயத்தை ஏற்படுத்தும் வித்தாக அமைகின்றது. இதன் பின்னர் அம்மங்கை-யின் அழகில் ஈடுபட்ட வைத்தியர் அற்புதானந்தர் ஏமாற்றத்-தினைப் பயன்படுத்தி, விஷத்தை அம்மங்கைக்குத் தரக் கங்க-பாலா ஏற்பாடு செய்கிறாள்.

மலர்புரியில் அரசி மருதவல்லியன் அறியாமையினையும் பக்தியையும் பயன்படுத்திக் கொண்டு, ஆரியமுனி பல தீச்-செயல்கள் செய்கிறான். பாண்டிய நாட்டின் முடிதுறந்து நாடோடி யாகச் சென்ற இளைஞனை வசீகரமாகப் பேசி கடவுளின் அம்சமாக நடிக்கச் செய்து, தேவியின் திருவுருவத்திற்குப் பின் மறைந்-திருக்கச் செய்து, அரசி வழிபட வரும் நாளில் இரவில் அவனை வெளிவரச் செய்து அவன் கடவுளால் அனுப்பப்பட்டவன் என்று அரசியை நம்ப வைத்து இருவரும் தொடர்பு கொள்ள ஏற் பாடு செய்கிறான். குழந்தை பிறந்ததும் இளைஞனைக் கலிங்க நாட்டுக்கு அனுப்பி விடுகிறான்.

பல்லாண்டுகட்குப் பிறகு நாட்டைக் கவர்வதற்கு, கரிமுகன் பெரிதும் தளபதியைத் தூண்டி விடுகிறான்; தளபதியை அடக்கி வைக்க அரசி அவரிடம் காதல் நாடகம் ஆடுகிறாள்; எதிர்க்கும் கரிமுகன் மக்களால் கொல்லப்படுகிறான். ஆரிய முனிவனைக் கொல்ல ஓங்கிய வாளினை, மேலே கூரையில் பொருத்தப்பட்ட காந்தத்தினால் அந்தரத்தில் தொங்கச் செய்து -அது கடவுளின் செயல் என்று மக்களை நம்பவைக்கிறான். இதுபோன்று பல துணை நிகழ்ச்சிகளை இந்நாவலில் அமைத்து மையக்கருத்து நன்கு புலப்படும்படியாக அறிஞர் அண்ணா அவர்கள் கதைப் பின்னலை அமைத்திருக்கிறார். மையக் கருத்து அல்லது நாவ-லின் முதன்மை நோக்கத்திற்குகந்த வகையில் கதைப் பின்னல் ஒரே நேர்கோட்டில் அமைந்திருக்குமாறு அறிஞர்அண்ணா அவர் கள் படைத்திருப்பது அவரது கதை கூறும் திறனுக்குச் சான்றாக அமைகிறது. இதன் மூலம் நாவலை ஒரு சாராசரி வாசகனால் இடைவிடாமல் வாசிக்க இயலுகிறது; அத்தகைய ஒரு சர்ப்பு க்கதி நாவலின் கதைப்பின்னலில் காணப்படுகிறது.

கதை மாந்தர்கள் முழுமையான பண்புடையவர்களாகப் படைக்கப்பட்டிருக்கின்றனர். யதார்த்த நெறியில் படைக்கப்படும் நாவல்களில் கதைமாந்தர்கள் முழுவார்ப்பாக அமையாமல் சூழல்களுடன் இயையவும் நன்மை தீமை முதலான பண்புக்கலப்புடையவர்களாகவும் படைக்கப்படுவர். பெட்மண்ட்புல்லர் என்னும் திறனாய்வாளர் யதார்த்த நாவல்களின் கதைமாந்தர் படைப்புபற்றிக் கூறியுள்ள கருத்து எதனையும் அண்ணாவின் நாவல்களின் கதைமாந்தர்களுடன் பொருத்திப்பார்க்கவியலாது. அண்ணாவின் கதைமாந்தர்களின் பண்பு நலன்கள் வரையறுக்கப்பட்டவை. ஆரியர்கள் என்றால் அவர்கள் தீமை செய்பவர்கள்தான்; திராவிடர்களின் கடமை ஆரியத்தீமைகளை எதிர்த்துப் போராடி வெல்லுவதாக இருக்கும். இத்தகைய வகைமாதிரிப் பண்புடைய கதைமாந்தர்கள் இடம் பெற்றிருப்பதால், நாவலில் கதைப்பின்னல் ஒரே நேர் கோட்டில் அமைந்திருக்கிறது. ஆனால் உண்மையில் இந்த வாழ்க்கையில் எதுவும் நேர் கோட்டில் அமைவதில்லை. அறிஞர் அண்ணா அவர்கள் தாம் விரித்துக் கொண்ட கோட்பாட்டுக்கு இணங்க நாவலைப்; படைத்திருப்பதால் இத்தகைய கதைமாந்தர் படைப்பு அமைகின்றது; இதன் தொடர்ச்சியாக, மிகச் செறிவான விறுவிறுப்புத் தன்மைவாய்ந்த கதைப்பின்னல் நாவலில் அமைந்திருக்கிறது பொதுவாக யதார்த்த நோக்கும் பாத்திரப் படைப்பில் பன்முகத்தன்மையும், வரலாற்றினைப்பிரதிநிதிப்படுத்தும் பண்பும் உடைய நாவல்களில்கதைப் பின்னல்கள்செறிவாகஅமைவதில்லை, விறுவிறுப்புத் தன்மையும் குன்றியிருக்கும். ஆயின் தமிழில் இதுவரை எழுதப்பட்டுள்ள செயல்திறம் மிக்க நாவல்கள் அனைத்திலும் (குறிப்பாக தமிழ் வரலாற்று நாவல்கள், துப்பறியும் நாவல்கள்) செறிவான வாசகனைப் பற்றியீர்க்கும் கதைப் பின்னல்கள் அமைந்திருக்கின்றன. அத்தகைய கதைப்பின்னலை அறிஞர்அண்ணா அவர்கள் கலிங்கராணி நாவலில் அமைத்திருக்கின்றார். நாவல் கலைநுட்பத்திறன் என்ற அடிப்படையில், சிறந்த கதைகூறும் திறன் படைத்தவராக அறிஞர் அண்ணா இந் நாவலின் மூலம் புலப்படுகின்றார்.

தனிமனிதர்களை முதன்மைப்படுத்தாமல் வரலாற்று நிகழ்வுகளை முதன்மைப் படுத்தி அவை எவ்வாறு தவிர்க்கவியலாத வகையில் மனித வாழ்க்கையில் நடத்தப்படுகின்றன,

என்பதைக் கலை நயத்துடன் உணர்த்தும் நாவல்கள் சில வெளி வந்திருக்கின்றன. மாஸ்தி வெங்கடேச ஐயரால் கன்னடத்தில் எழுதப்பட்டு, தமிழில் மொழி பெயர்க்கப்பட்ட சிக்கவீர ராஜேந்திரன், சென்னபசல் நாயக்கன் முதலியவையும் பாண்டிச்சேரி மாநிலத்தின் வரலாற்றைக் கூறும் பிரபஞ்சனின் 'மானுடம் வெல்லும்' 'வானம் வசப்படும்' முதலிய நாவல்கள் இவ்வகையினவாகும். இந்நாவல்களில் எந்தத் தனி மனிதரும் நாயகர்கள் அல்ல, உண்மையில் வரலாற்றுப் போக்கில் தவிர்க்கவியலாதவாறு சிக்கிச் செயல்படும் கருவிகளாகவே இந் நாவல் கதையாசிரியர்கள் படைக்கப்பட்டுள்ளனர். இவர்களுள் எவரும் மீமானிடர்கள் அல்லர். இந் நாவல்களின் முதன்மையான நோக்கமும் மனிதர்களைச் சித்திரிப்பதோ அல்ல; மனிதர்களிடையேயான போராட்டங்களைக் காட்டுவதோ அல்லது அதன் வெற்றி தோல்விகளைத் தீர்மானிப்பதோ அல்லது சமூகம் எவ்வாறு தொடர்ந்து இயங்கிக் கொண்டிருக்கிறது என்பதைக் காட்டுவதே ஆகும். அதற்குத் தகுந்தவாறு இந் நாவல்கள் அனைத்தும் கதைப் பின்னல்கள் ஒழுங்கற்று நேர்கோட்டுத் தன்மையை இழந்து காணப்படும். பேரறிஞர் அண்ணா அவர்கட்கு கலிங்கநாட்டின் வரலாற்றினையோ, பண்பாட்டினையோ சோழ மன்னர்களின் படையெடுப்புக்களையோ அதன் மூலமாக ஏற்பட்ட பண்பாட்டுச் சிதைவு அல்லது கலப்பு ஆகியவற்றைக் காட்டுவது நோக்கமல்ல, ஆரிய திராவிட இன உணர்வு முரண்பாட்டினைச் சித்திரிப்பதே இவரது முதன்மை நோக்கம் என்பதால் அதற்கு தகுந்த வகையில் கலிங்கராணி நாவல் படைப்பைச் செம்மையாக அமைத்திருக்கிறார்.

# அண்ணாவின் மொழிநடை

தூ. சேதுபாண்டியன்

திராவிட இயக்கத் தலைவர்களுள் தமக்கென ஒரு தனி-யிடத்தைப் பெற்றுத் திகழ்ந்தவர்; தமது பேச்சாலும் எழுத்தாலும் தமிழகத்தின் தலைஎழுத்தையே மாற்றியமைத்தவர்; பண்டி-தர்களுக்குரியதாயிருந்த தமிழைப் பாமரர்க்குரிய தமிழாய், அழகு தமிழைப் பழகுதமிழாய் மாற்றியமைத்த பெருமைக் குரியவர்; என்றெல்லாம் பலவாறாகப் புகழப்படும் அறிஞர் அண்ணதுரையின் மொழி நடையில் காணலாகும் நடையியற் கூறுகளை இனங்கண்டு சுட்டிக்காட்ட முயல்கிறது இக்கட்டுரை.

அண்ணாவின் படைப்புகள் ஏராளம், ஏராளம். சிறுகதைகள் நாவல்கள், நாடகங்கள், கட்டுரைகள், கடிதங்கள் எனப்பலப்பல. கால எல்லை கருதியும், படைப்பிலக்கியமல்லாத (Non-fictions) பகுதிகளே படைப்பாளனின் இயல்பான சொந்த நடையாகும் என்ற கருத்தின் அடிப்படையிலும், அண்ணாவின்—படைப்பிலக் கியங்கள் தவிர்த்த—கடிதங்கள், கட்டுரைகள், மேடைப் பேச்சின் எழுத்துவடிவங்கள் ஆகியனவையே இந்த ஆய்வுக்குரிய தரவுகளா-கின்றன.

அண்ணாவின்—'தம்பிக்கு' என விளித்து எழுதப்பட்ட—கடிதங்கள் யாவும் பல்வேறு காலகட்டங்களில் எழுதப்பட்டவை. இவை அனைத்துக் கடிதங்களும் திராவிட இயக்க இதழ்களான 'திராவிடநாடு', 'காஞ்சி' ஆகிய இதழ்களில் வெளிவந்தவை. இவை எழுதப்பட்ட காலங்களில் நிகழ்ந்த பல்வேறு அரசியல் சமூக நிகழ்வுகளைக் குறித்துத் தம் தொண்டர்களுக்கு விளக்கம் கூறும் வகையில் எழுதப்பட்டனவேயாம். இக்கடிதங்கள் இயக்-கத்தின் நிறுவனர்—தலைவர்—என்ற முறையில் இயக்கத்தோழர் களிடம் நேரடித்தொடர்பு கொள்ளும் நோக்கத்துடன் எழுதப்-பட்டவை.

கடிதங்களைப் போலவே கட்டுரைகளும், மேடைப் பேச்-சுக்களின் தொகுப்பாகவே—பல்வேறு காலகட்டங்களில் அண்ணா ஆற்றிய சொற்பொழிவுகளின் எழுத்துவடிவங்களாகவே—விளங்-குகின்றன. இக்கருத்துரைகளிலும் பேசப்படும் பொருள் பன்முக-தன்மை கொண்டனவாய் அமைந்துள்ளன.

கடிதங்களிலும், கட்டுரைகளிலும் கையாண்டுள்ள மொழி அண்ணாவின் பொது மொழி நடையே. அண்ணா தம் படைப்பிலக்கியங்களில உள்ள கதைகூறும் பகுதியில்உள்ள மொழிநடையும், இக்கடிதம், கட்டுரைகளில் அமைந்துள்ள மொழி நடையும் ஒன்றே! எனினும் இதை நிறுவுவது அல்ல இக்கட்டுரையின் நோக்கம். அண்ணாவின் மொழி நடையினகண் அமைந்துள்ள நடையியற் கூறுகளை அண்ணாவின் கடிதங்கள், கட்டுரைகள் இவற்றைத் தரவாகக் கொண்டு ஆய்வதே நோக்கமாகும்.

தமிழ் உரைநடை பற்றிக் குறிப்பிடும் போது தமிழகத்தில் ஒரு சிலருடைய மொழிநடையே தனித்தன்மை வாய்ந்ததாக விளங்குகின்றது என்னும் பொருள்பட ''உ.வே.சா., கல்கி, புதுமைப்பித்தன், அண்ணா, அகிலன் போன்றோர் தனிநடை வாய்க்கப்பெற்றவர்கள்'' (இராமலிங்கம்.மா, 1978;63) என்னும் கூற்று இங்கு நினைவு கூர்தற்குரியது. தமிழ் உரைநடையின் வரலாற்றில் குறிப்பிடத்தக்க இடத்தைப் பெற்று விளங்குபவர்களில்அறிஞர் அண்ணாவும் ஒருவர் என்பது இக்கூற்றால் தெளிவாகிறது.

மோனையில் மோகம்

அண்ணாவின் நடை என்றவுடனேயே அனைவருக்கும் நினைவுக்கு வருவது அவர்தம் உரை நடையில் இடம்பெறும் மோனையும் எதுகையும் தான். செய்யுளுச்குரியதான எதுகை. மோனை ஆகியவை அண்ணாவின் உரை நடையில் விரவிககிடக்கின்றன. அண்ணாவிற்கு மோனை மீது அளவுகடந்த மோக முண்டு.இதனை அவர்தம் இயக்கத் தோழர்களுக்குக் கொடுத்துள்ளசிறப்புப் பெயர்களிலேயே கூடக் காணலாம். தோழர்களின் இயற்பெயருடன் சிறப்புப் பெயரும் மோனை இயைபுடையதகா அமையுமாறே வழங்கியிருப்பதனைக் காணலாம்

கலைஞர் கருணாநிதி
நாவலர் நெடுஞ்செழியன்
சிந்தனைச் சிறபி சிறறரசு

எனப் பல தோழர்களுக்குச் சிறப்புப் பெயர் கொடுத்தவர் அண்ணா,அண்ணாவின் படைப்பிலக்கியங்களான நாவல்.நாடகம்

சிறுகதைகளில் கூடத் தாம் படைத்த பாத்திரங்களின் பெயர்கள் கூட மோனை நயம்பட அமைந்திருப்பதைக் காணலாம்.

மிராசுதார் மீனாட்சி சுந்தரம்
மாஜிஸ்ட்ரேட் மருதவாணம் பிள்ளை
வண்டிக்கார வரதன்
ரங்கூன் ராதா
அரிசிமண்டி ஆறுமுக முதலியார்

இவை யாவும் அண்ணாவின் சிறுகதைகளிலும் நாவல்களிலும் காணலாகும் பாத்திரங்களின் பெயர்கள். இச்சான்றுகள் எல்லாம் அண்ணாவின் மொழியில் மோனை பெறுமிடத்தை விளக்குகின்றன. மோனை என்னும் ஓசை அழகில் அண்ணாவிற்கு இருந்த ஈடுபாட்டை இவை வெளிப்படுத்துகின்றன.

அண்ணாவின் மொழியில் மோனை பெறுமிடம் பெருமிடமாக விளங்குகிறது. சான்றாகச் சில பகுதிகளைக் காணலாம்:

வழக்கமாகக் கூடி வசீகரமாகப் பேசி
வளைவது குனியாது வாய்வீரம் காட்டிவிட்டு
வாகை சூடியதாக மனப்பால் குடித்துவிட்டுத் தோகையர்
புடைசூழ போகபூமிக்குச் செல்லும் சுகபோகிகள் கூட்டம் அல்ல'

என்னும் பகுதி விடுதலைப் போர் என்னும் நூலில் இடம்பெற்றுள்ளது, (மேற்கோள்:இராமலிங்கம் 1978;97)

'அவனைச்
சிறையிலடைத்துச் சிந்தனையைச் சிதைக்க முயன்றது நஞ்சை நாவால் சுவைக்கச்செய்து நமனுலகுக்கு அனுப்பியது'' (அண்ணாதுரை, சி.என், 1983;37) என்றமையும் பகுதியில் 'யமன்' என்ற சொல் மோனைக்காகவே நமன் என்று மாறுவேடம் பூண்டிருப்பதைக்காணலாம்.

பிறிதோரிடத்தில் இளைய தலைமுறைக்கு அறிவுரை கூறும் இடத்தில்,

"அதற்குத் தடையாகக் கடவுளே வரினும் கலங்காதீர்!
சிவனே வரினும் சிதறாதீர்!
மதமே வரினும் மயங்காதீர்!
மானமே பெரிதென மதியுங்கள்
(அண்ணாதுரை,1983;58)

என மோனை நயம் பொருந்த உரைக்கிறார். இவையெல்லாம் அண்ணாவின் மொழியில் மோனைஎன்னும் ஒலிநயக் கூறு பரந்தளவில் காணப்படுகிறது என்பதைவிளக்கும் பதச்சோறு-களாம்.

எதுகையின் எழில் :

அண்ணாவின் நடையில் மோனை இடம் பெறுவது போலவே எதுகையும் இடம் பெறுகின்றமையைக் காணமுடிகிறது. தம்பிக்கு எழுதியிருந்த கடிதங்களைத் தாம் முதல்வர் பொறுப்பேற்றபின் எழுத வியலாதுபோனது என்ற தம் நிலையை விளக்க முயன்ற அண்ணா,

"எந்தப் பணி எனக்கு இனிப்பும் எழுச்சியும் தந்து வந்ததோ, எந்தப் பணியிலே நான் ஆண்டுபலவாக மிக்க மகிழ்ச்சியுடன் ஈடுபட்டு வந்திருந்தேனோ,

எந்தப் பணியின மூலம் என்னை உன் அண்ணனாக நீ உள்ளன்புடன் ஏற்றுக்கொண்டு பெருமிதத்துடன் உலகுக்கு அறிவித்துவந்தனையோ

எந்தப் பணி வாயிலாக என்கருத்துக்களின் வெற்றிக்கான வழியினைக்காண முடிந்ததோ,
எந்தப் பணியின்மூலம் எப்போதும் உன் இதயத்தில் எனக்கு ஓர் இடம் கிடைத்து அதுகுறித்து நான் அளவற்ற அகமகிழ்ச்சி பெறமுடிந்ததோ,

அந்தப் பணியினை முன்புபோலச் செய்ய முடியாதவனாக்கப் பட்டுச் சூழ்நிலையின் கைதியாகக்கிடக்கிறேன்" (அண்ணாதுரை 1969:113)

என்று எதுகை நயம் பொருந்த எழுதுவதைக் காண முடிகிறது. அண்ணாவின் நடையில் எதுகை இயல்பாக அமைந்திருப்பதை

''மாலைவேளைகளில் பெரியார் உலாவச் செல்வார்.
சாலையில் உடன் நான் செல்வேன் வெண்ணிறத்தாடி......
பொன்னிற மேனி''
என்றமையும் பகுதியில் காணலாம்.

இயைபு இயைந்த நடை

அண்ணாவின் மொழிநடையில் காணலாகும் மற்றுமோர் ஒலிநிலைக் கூறு 'இயைபு' ஆகும். இறுதியில் ஒலி ஒற்றுமையுடன் அமைவதே இயைபு எனப்படும். அண்ணாவின் மொழியில் இயைபும் விரவிக்கிடப்பதைக்காணலாம்,

> ''மக்களைக் காணமட்டுமல்ல, மலை உச்சி ஏறிமகிழ, மலர்த்தோட்டம் கண்டு இன்புற, அலங்காரப் படகுமூலம் ஆறுகளைக் கடந்து ஆனந்தம் கொள்ள, கிராமிய நடனம் கண்டு களிப்படைய'' (அண்ணாதுரை. சி.என்.1963;200)

என்றமையும் பகுதியில் இயைபுத் தொடை அமைத்து ஓசைநயம் பயப்பதைக் காணலாம்.

உணர்வு வெளிப்பாட்டிற்காகவும், சொல்லப்படும் கருத்துக்கு அழுத்தம் தருவதற்காகவும் சொற்களையோ, கருத்துக்களையோ திரும்பத் திரும்பப் பயன்படுத்துவது உண்டு இதனால் கூற வந்த கருத்துக்கு ஓர் அழுத்தம் கிடைக்கிறது. அண்ணாவின் மொழிநடையில் பல இடங்களில் இத்தகைய மறித்து வரு (Repetition) உத்தி பயன்படுத்தப்பட்டுள்ளது. சான்றாகச் சிலவற்றைக் காணலாம்.

''கடல் கடந்தவன் தமிழன்! இமயத்தில் புலியைப் பொறித்தவன் தமிழன்! ரோம்நகருக்குப் பொன்னாடை விற்றவன் தமிழன்! எந்நாடும் வியக்கும் வீரன் தமிழன்! ஏறுநடை உடையவன் தமிழன்! இன்னல் கண்டு புன்னகை புரிபவன் தமிழன்! அவனுக்குப்பட்டம் சோப்பும், சீப்பும் கண்ணாடியும் விற்க வந்து பின்னர் அரசாள ஆரம்பித்த துரைமக்கள் தருவதா? (மேற்கோள் : இராமலிங்கம், மா. 1978 ; 98)

என்றமையும் இப்பகுதியில் தமிழன் என்ற சொல் திரும்பத்திரும்ப இடம் பெறுவதால் தமிழன் என்ற சொல்லுக்கு அழுத்தம் கிடைக்கிறது. இதுபோன்றே மற்றோரிடத்தில், ''துணைக் கழகங்கள் தூதுவிடும் கழகங்கள், வம்புக்கிழுக்கும் கழகங்கள் ஆகியவை பற்றி என் கருத்து யாது என்பது பற்றியும் உரையாடி எடுத்துக்காட்ட முடியும்'' (அண்ணா, 1963:11) என்றமையும் பகுதியில் கழகங்கள் என்ற சொல் திரும்பத்திரும்ப இடம் பெற்றுள்ளதைக் காணலாம்.

## சிந்தனையைத் தூண்டும் நடை

படிப்போரை — கேட்போரைச் — சிந்திக்கவைக்கும் தன்மை வினாத் தொடர்கள் அமைந்த தொகுதிக்கு உண்டு. இங்குப் பேசுபவர் — எழுதுபவர்—தொடுக்கும் வினாக்களுக்கு அவர் விடை எதிர்பார்ப்பதில்லை. இத்தகைய வினாக்கள் கேட்போர் —படிப்போர் தம் சிந்தனையைத் தூண்டும் வகையிலேயே இப்பகுதியில் அமைகின்றன. இவ்வாறு தம் தொண்டர்களின் சிந்தனையைத் தூண்டும் நடையினைப் பல இடங்களில் அண்ணா பயன்படுத்தியுள்ளார். சான்றாகச் சிலவற்றைக் காணலாம்.

'நம்மிடம் பட்டம் இருந்தென்ன? பதவி இருந்தென்ன? செல்வமும் சிறப்பும், அறிவும் ஆற்றலும், உழைப்பும் ஊதியமும் இருந்தென்ன? பக்குவமிழந்தோம், பராரியானோம், பகுத்தறிவிழந்தோம், பாரிழந்தோம் ......... (அண்ணாதுரை, சி. என். 1983:86) என்றமையும் பகுதியில் உள்ள வினாத்தொடர்கள் படிப்போரைச் சிந்திக்கத்தூண்டுவதைக் காணமுடிகிறது.

இன்னோரிடத்தில், ''இதுவேதான் விதியா? நாதன்கட்டளையா? நயவஞ்சகச் சூழ்ச்சியா? ......'' (அண்ணாதுரை, 1983:86 என்றமையும் பகுதியும் வினாத்தொடரால் அமையும் பகுதி கேட்போரைச் சிந்திக்கத்தூண்டும் என்பதற்குச் சான்றாய் அமைகின்றது.

பிறிதோரிடத்தில் ஈ. வே. ரா வைப் பற்றிக் கூறுமிடத்தும் இது போலவே வினாத்தொடர் அமைந்த நடையியல் கூறினைக் காண முடிகிறது.

''அவர் பேசாத நாள் உண்டா? அவர் குரல் கேட்காத ஊர் உண்டா? அவரிடம் சிக்கித்திணறாத பழமை உண்டா! எதைக்கண்டு அவர் திகைத்தார்.? எந்தப் புராணம் அவரிடம் தாக்குதலைப் பெறாதது? எனவேதான் பெரியாருடைய பெரும் பணியை நான் தனிமனிதனின் வரலாறு என்றல்ல—ஒரு சகாப்தம் — ஒரு காலகட்டம் — ஒரு திருப்பம் — என்று கூறுகிறேன்.' மேற்கோள் : இராமலிங்கம் மா, 1978 : 105). இங்கும் பெரியார் தம் சிறப்பைச் சிந்திக்கத் தூண்டுவதாகவே இப்பகுதி அமைகின்றது.

உருவகப் பாங்கான நடை :

சொல்வதை நேரடியாக — வெளிப்படையாக — அணியலங்காரமின்றிச் சொல்வதைவிடச் சுவைபட உருவகப்பாங்காகக் கூறும் போது கேட்போர்க்கு — படிப்பவர்க்குச் — சுவை பயக்கின்றது. அண்ணாவின் மொழியில் பல இடங்களில் உருவகப்பாங்கான நடையைக் காணமுடிகிறது.

அண்ணா 1963 ஆம் ஆண்டு நவம்பர் 17 ஆம் நாள் காலையில் அரசியல் சட்டத்தின் மொழிப் பிரிவைக் கொளுத்தப் போவதாக அறிவிக்கப்பட்டுவிட்டது. ஆனால் நவம்பர் 16 ஆம் தேதியே காஞ்சிபுரத்திலிருந்து சென்னை வரும் வழியிலேயே அண்ணா கைதுசெய்யப்படப் போகிறார் என்பதைச்சிலர் செயல்கள் மூலம் உணர்கிறார். இதை எழுதும் போது ''கொடி ஏறிவிட்டது. இனித்திருவிழா நடக்கப்போகிறது என்று தெரிந்து விட்டது'' என்று எழுதுகிறார். இப்பகுதி படிப்போர்க்குச் சுவையூட்டுவதைக் காணலாம்.

மற்றோரிடத்தில்

''உள்ள உயிர் ஒன்றுதான்; அது பிரிவதும் ஒருமுறைதான்: பிரியப் போவதும் உறுதிதான்; வறுமைத்தேள் கொட்டியோ; வர்ணாஸ்ரமப் பாம்பு தீண்டியோ...எதனாலோ போகப் போகும் இவ்வுயிர் எங்கள் நாட்டை மீட்கப் போர் தொடுத்து உரிமைப் போரில் போகட்டும்'' (அண்ணாதுரை, சி. என்). என்றமையும் பகுதியில் வறுமை தேளாகவும் ; வர்ணாஸ்ரமம் பாம்பாகவும் உருவகிக்கப்பட்டுள்ளதைக் காணலாம்.

பிறிதோரிடத்தில் அவர் இடதுகரத்தில் இருந்த வலி வலது கரத்துக்கும் பரவுகிறது என்பதை ''இடதுகரத்தில் இருந்த வலி மெல்லமெல்ல வலது கரத்திலும் படையெடுக்கத் தொடங்கிவிட்டது'' என்று எழுதுகிறார் (அண்ணாதுரை, 1980 : 61) இங்கு வலிபரவுவது படைஎடுப்பாக உருவகிக்கப்படு கிறது.

மற்றோரிடத்தில் ''காங்கிரஸ் கட்சி பண பாணத்தை ஏவிக்கழகத்தைச் சிதறடிக்கப் போகிறது என்ற மிரட்டல் வந்து-கொண்டிருக்கிறது'' (அண்ணாதுரை, 1980 : 147) என்கிறார். இவ்விடத்தில் பணம் பாணமாக உருவகிக்கப்படுகிறது.

அண்ணாவின் மொழியில் தீமைகள் யாவும் தேளாகவும், நன்மைகள் யாவும் தேனாகவும் உருவகிக்கப்படும் நிலை பொது-வாகக் காணப்படுகின்றது.

*சான்றாகச் சில :*

''காஞ்சிபுரத்தில் வெற்றி, ஆரணியில் வெற்றி என்ற செந்தேன் இன்று கிடைத்தது'' (அண்ணாதுரை, சி. என். 1980 : 15?)

ஒரு காவலாளி, ''வேலூரிலும் உங்கள் கட்சிதான் சேர்-மனாம் யாரோ சாரதியாம்'' என்று கூறினார்...... அன்று 'தேன்' கொடுத்து விட்டல்லவா அறையைப் பூட்டினார். (அண்ணாதுரை, சி. என்., 1980 : 167) இப்பகுதிகளில் எல்லாம் மகிழ்ச்சி, வெற்றியாகியவை தேனாக உருவகிக்-கப்படுகின்றன. சென்ற இடமெங்கும் வறுமைச் செந்தேள் கொட்டுகிறது. திராவிடரை (அண்ணாதுரை 1963 : 95) ''தொத்தா பற்றிய நினைவு வந்து விடும் — வேதனை மீண்டும் தேளாகிக் கொட்டும்'' (அண்ணாதுரை, சி. என்., 1980 : 81) என்றமையும் பகுதிகளில் வறுமை, வேதனை ஆகியவை தேளாக உருவகிக்கப்படுவதைக் காணலாம். இவ்வுருவகப்பாங்கான நடை படிப்போரைக்கவரும் பாங்கு-டையதாய் உள்ளது. இது உரைநடைக்கு ஓர் எழில் ஊட்டுகிறது.

*எள்ளல் நிறைந்த நடை :*

சொல்ல வரும் கருத்தைக் கேட்பவர்/படிப்பவர் சுவைக்கும்/ ரசிக்கும் வகையில் கூறுவதற்கு எள்ளல் கூறு அமைந்த நடை

துணைபுரிகிறது. அண்ணாவின் மொழியில் பல இடங்களில் எள்ளல் சுவை ததும்புவதைக் காணமுடிகிறது.

அண்ணா சிறைச்சாலையிலிருந்து எழுதும் கடிதம் ஒன்றில், ''தனியாக அடைபட்டுக்கிடப்பவன் என்று கூறினேனே தம்பி! அது முழு உண்மை அல்ல!! — எனக்குத் துணையாக, சுறு-சுறுப்பான எத்தனை எத்தனை மூட்டைப்பூச்சிகள், கொசுக்-கள்!!'' (அண்ணாதுரை, 1980 : 62) என்று அமையும் பகுதி சிறைச்சாலை கொசுவும், மூட்டைப்பூச்சி நிரம்பிவழியும் தூய்-மையற்ற பகுதியாக உள்ளதைச்சாடும் எள்ளலாக அமைந்-துள்ளது.

மற்றோரிடத்தில் அந்நாள் அமைச்சர் சி. சுப்பிரமணியத்தின் பேச்சில்தொனித்த கோபத்தைச் சுட்டிக்காட்ட, ''சென்ற கிழமை 'கோபாதிபதி' அவருக்கு உச்சஸ்தானத்தில் இருந்திருக்கிறான்'' (அண்ணாதுரை, 1963:70) என்று எள்ளல் கலந்த நடையில் எழுதுகிறார்.

பிறிதோரிடத்தில் என். வி. நடராசன் காங்கிரஸ் கட்சியில் இருந்த போது தம்மை அவர் எவ்வாறு திட்டினார் என்பதைக் கூறுமிடத்தில், ''சென்னையில் எங்குப் பார்த்தாலும் இந்த 'எலும்பு மனிதர்' காங்கிரஸ் அல்லாத கட்சிகளின் மீது கண்டனம் பொழிவார். வசை மொழியால் என்னை அர்ச்சிப்பதில் அவருக்கு அப்போது அலாதி ஆசை. நான் கார்ப்பொரேஷன் தேர்தலில் ஈடுபட்டபோது என்னைத் தோற்கடிக்க முழுமூச்சாக வேலை செய்தவர். அப்போதெல்லாம் அவரிடம் 'நாலாம் தமிழ்' நட-மாடும். நாலாம் தமிழ் என்றால் தெரியவில்லையா? இயல், இசை, நாடகம் — முத்தமிழ் வசை நாலாம் தமிழ்!'' (அண்ணாதுரை 1963 : 84) என்றமையும் பகுதியிலும் எள்ளல் நடையைக் காணமுடிகிறது.

*போலச் செய்தல்*

நகைச் சுவையூட்டும் வகையில் அமையும் வாக்கியங்களை அண்ணா போலச் செய்தல் பாணியில் உருவாக்குவதைக் காண முடிகிறது. அவர் தாம் பேசும் போதே இது யாரைப் பார்த்து

அமைத்துக் கொண்ட தேபாலச்செய்தல் என்றும் கூறிவிடுகிறார். இது படிப்பவருக்கு நகைச்சுவை பயப்தபாக அமைகின்றது.

"நாடகம் எழுதிக் கொடுங்கள்" என்று கேட்டார்கள், "ஆகட்டும் பார்க்கலாம்" என்று காமராஜர் போலச் சொன்னேன். (அண்ணாதுரை 1980:97) என்றமையும் பகுதியும்,

"சிறையில் உள்ள தோழர்களில் இருவர் மோகனசுந்தரம், லோகநதான் மாநகராட்சி மன்றத் தேர்லில் சுடுபட்டவர்கள் — இதிலே லோகநாதன் வெற்றிபெற்றார் — மற்றவர் நாவலர் நடையிலே சொல்லுவதானால்,வெற்றிக்கான வாய்ப்பை இழந்து விட்டார்." (அண்ணாதுரை 1980:94) என்றமையும் பகுதியும் இதற்குச் சான்றாகின்றன.

*கள் விகுதி பண்புகளை உணர்த்தல்*

மனிதரின் இயற்பெயர்களோடு—கள் விகுதியை இணைப்பதன் மூலம் அந்த மனிதருக்குரிய பண்புகளைக் குறிப்பது அண்ணாவின் நடையில் காணலாகும் ஒரு சிறப்புக் கூறாகும். காங்கிரஸ் கட்சியிலிருந்து இந்தி ஆதிக்கத்தை எதிர்த்து வெளிவந்த என். வி. நடராசனைப் பற்றிக் குறிப்பிடும் போதும் சத்தியமூர்த்தி போன்ற இந்தி ஆதரவுத் தலைவர்களை குறிப்பிடும் போதும் இம் முறைதயை தகையாள்வதை தகாணமுடிகிறது.

'தேச தபதி அவருக்குத் லையில் ஏராளமாக! தூபம் போட சத்திய மூர்த்திகள் ........ இந்தி எதிர்ப்புப் பேசும் காங்கிரஸ்காரர்களை அடக்கியாக வேண்டும் என்ற நிலைமை ஏற்பட்டுவிட்டது சத்தியமூர்த்திகளுக்கு...... சத்திய மூர்த்திகள் தடைவிதித்தாலும் மீறித் தாய் மொழியைக்காக்கும் பணிபுரிந்தாக வேண்டும் என்ற கட்டம் வந்து விட்டது. நடராசன் போன்றோருக்கு ...... நடராசர்கள் எங்கும் இருதகிறார்கள்" (அண்ணாதுரை : 1963 : 85-86) இங்குச் சத்திய மூர்த்திகள் என்ற சொல்லும், நடராசர்கள் என்ற சொல்லும் பயன்படுத்தியுள்ள முறையில் அண்ணாவின் மொழி நடை புலப்படுகிறது.

*சிறுகதைகள் கூறி விளக்கல்*

அண்ணாவின் நடையில் உள்ள மற்றொரு சிறப்புக்கூறு தாம் கூற வரும் கருத்துக்களை விளக்க அவ்வப்போது சிறு சிறு கதைகள் கூறி அக்கதைகள் மூலம் தாம் கூறவந்த கருத்தைப் படிப்போர் எளிதில் புரிந்து கொள்ளச் செய்தல், இதனை அண்ணாவின் உரைநடையில் காணலாகும் திட்டப்பாங்கு (fore grounding technique) என்றே கருதலாம். சான்றாக ஒருகதைப் பகுதியைக் காணலாம்.

தமிழகக் காங்கிரசு அரசுமேற்கொண்டு விட்ட 'கெடுபிடி' நடவடிக்கைக்குக் காரணம் இது தான் தம்பி!

''எங்கே அந்தப்பய? எங்கே?'' கோபமாகக் கூவுகிறான் கணவன். ''ஏன் இப்படிப் பதைக்கிறீங்க? பையன் என்ன செய்து விட்டான்?'' பதறிக் கேட்கிறாள் மனைவி.

''என்ன செய்தானா? அடியே! என் தலைக்குத் தீம்பு தேடிட்டான் என் பிழைப்பிலே மண்ணைப் போட்டுட்டான்'' ஆத்திரத்துடன் பேசுகிறான் கணவன் என்னத்தைச் செய்துட்டான் சொல்லித் தொலையுங்களேன்! மனைவி கேட்கிறாள். குரலைச் சற்றுத் தாழ்த்தி கணவன் கூறுகிறான்: ''அவனோட அம்மாதானடி நீ? உனக்கு வேறெ எப்படி இருக்கும் புத்தி, தெருவில யார் தெரியுதா? எஜமானரு? ஏன் நிற்கிறாரு தெரியுமா? அவரோட அருமையான நாயை இந்தப்பய... கல்லால அடிச்சிருக்கான். எஜமானரு பதைக்கிறாரு பதர்றாரு. கொண்டாடா அந்தப்பயலை, உன்னாலே அடக்கமுடியாவிட்டால் நான் முதுகுத் தோலை உரிச்சுப்போடறேன்னு கொதிக்கிறாரு''.

''நல்லாயிருக்குங்கநியாயம்! நாயி, கடிக்கவந்தது, கல்லைத்தூக்கிப் போட்டான். அது பெரியதப்பா? நாயி கடிக்கலாமா? இவரு வீட்டு நாயி நம்ம மகனைவிட ஒசத்தியா? ''மனைவி கேட்டாள் கோபத்தோடு. கணவனுக்கு என்ன சொல்வதென்றே புரியவில்லை. ஓங்கிக் கொடுக்கிறான் முதுகில், கன்னத்தில், ''ஐயோ அம்மாடி' என்ற அலறல். எஜமானர் மீசையை முறுக்கியபடியே வீட்டை விட்டு வெளியே செல்கிறார் தன் மாளிகைக்கு — வெற்றிக்களிப்புடன்,

"அது வெறிநாய் — எல்லோரையுந்தான் கடிக்க வருது!"— என்று ஊரில் பேசிக்கொள்கிறார்கள்.

கதை என்கிறாயா? தம்பி — கட்டப்பட்டது. கருத்துக்காக. இரண்டு முறை படித்துப்பார். தமிழக அரசு மேற்கொள்ளும்

போக்குக்கான காரணம் விளங்கும். (அண்ணாதுரை. சி. என். 1980:33:34) என்றமையும் பகுதியில் கதையில் உள்ள ஒவ்வொரு பாத்திரமும் குறியீடுகளாக அமைந்து — பிறிது மொழிதல் அணியாய்உரை நடையில் கருத்துணர்த்தும் பாங்கினை அண்ணாவின் உரை நடையில் மிகுதியாகக் காணமுடிகிறது. படைப்பிலக்கியமல்லாத கடிதங்களில் கூட இத்தகைய படைப்பிலக்கியத்திற்கான கற்பனை கலந்த உரையாடல்கள் இடம்பெறும் கதைகளைப் பயன்படுத்தியிருப்பது அண்ணாவின் உரைநடையில் காணலாகும் தனித்துவக் கூறு எனலாம்.

சில சமயங்களில் தாம்படித்ததாகச் சில கதைகளைக் கடிதங்களில் தம்பிக்கு எழுதுவதைக் காணமுடிகிறது. அத்தகைய கதைகளில் கருத்து விளக்கம் என்ற நோக்கம் ஏதுமின்றித் தொண்டர்களுடனான—தம்பிகளுடனான—தொடர்பினைப்புதுப்பித்துக் கொண்டு நிலைபெறச்செய்து உறவினை வளர்த்தல் என்ற நோக்கம் இருப்பதாகக் கருதலாம்.

## எண்ணி எண்ணி ஏங்கும் துயரம்

அண்ணா அவர்கள் தம் தோழர்களுக்கும், தம்பிகளுக்கும் பக்குவம் வேண்டும் எனப் பலமுறை அறிவுரை கூறுபவராக இருந்தாலும் தம் நிலையில் மிக எளிதில் உணர்வு வயப்படக் கூடியவராய்த் திகழ்வதை அவருடைய மொழி நடையில் காணமுடிகிறது. இவர் துயர நிகழ்ச்சிகளைக் கூறும் போதெல்லாம்- அது யார் பற்றிய துயர நிகழ்ச்சியாக இருந்தாலும் சரி — தன் சிற்றன்னை 'தொத்தா' அவர்களின் இறப்புப்பற்றியதாக இருந்தாலும் சரி காருகுறிச்சி அருணாசலம் மறைந்த போதும் சரி; திமுகவினரைக் 'கண்ணீர்த்துளிகள்' என்று கைகொட்டிக் கேலிசெய்த பாவேந்தர் மறைந்தபோதும்சரி; மதுரை சரஸ்வதி உயர்நிலைப்

இடிந்து விழுந்து பள்ளிக்குழந்தைகள் இறந்த போதும் சரி அமெரிக்கக் குடியரசுத்தலைவர் கென்னடி சுட்டுக்கொல்லப்பட்ட போதும்சரி; இவரால் தூற்றப்பட்ட இவருடைய அரசியல் எதிரி பண்டிட் ஜவஹர்லால் இருந்தபோதும் சரி — இவர் மிகவும் உணர்ச்சிவசப்பட்டுவிடுகிறார். எல்லோருடைய மறைவும் இவ-ரால் நெஞ்சம் திடுக்கிடத்தக்க விதமான மறைவு என்றே பேசப் படுகிறது. எல்லாருடைய மறைவும் இவரை எண்ணி எண்ணி ஏக்கமுறச் செய்துவிடுகிறது. மகிழ்ச்சியானாலும் சரி, துக்க மானாலும் சரி தாங்கிக்கொள்ளமுடியாத அளவிற்கு இவர் மொழி யில் கொட்டிவிடுவதைக் காணமுடிகிறது. சான்றாகச் சில தொடர்களைக் காணலாம்.

''அமெரிக்கக் குடியரசுத் தலைவர் கென்னடி படுகொலை செய்யப்பட்ட பாதகத்தை எண்ணி எண்ணி நான் மிகுந்த வேத னையில் ஆழ்ந்து போயிருந்தேன்''. (அண்ணாதுரை 1980; 40)

''காருகுறிச்சியை தமிழகம் இழந்து தத்தளிக்கிறது........ என்பதுபற்றியெல்லாம் எண்ணி எண்ணி ஏக்கமுற்றுக்கிடந்-தோம்'' (அண்ணாதுரை 1980 : 263)

துயரத்தில் நிலைகுலைந்து போவது போலவே மகிழ்ச்சி யிலும் இவர் நிலைகுலைந்து போகிறார். அண்ணாவின் உள்ளம் குழந்தையுள்ளம். சின்னச்சின்ன மகிழ்ச்சிகூட இவரை மிக அகமகிழவைக்கிறது.

''நமது கழகத் தோழர் நகராட்சி மன்றத்தலைவர் ஆகி-யிருக்கிறார் என்பது கேட்டு அகமிக மகிழ்ந்தோம்''. (அண்ணாதுரை 1980 : 151)

*உணர்வு வெளிப்பாடு*

பகை, வெறுப்பு, விரோதம் போன்ற உணர்வுகளைப் பற் றிப் பேசும் போதெல்லாம் கக்குதல் என்ற வினையையே பயன் படுத்துகிறார் அண்ணா. இதனை அவருடைய மொழி நடை-யில் காணலாகும் தனித்துவக் கூறாகக் கொள்ளலாம்.

"மற்றச்சிலர் போல என்னிடம் தனிப்பட்ட முறையில் பகைகக்கினவரல்ல" (அண்ணாதுரை, சி.என்.1980:163)

"ஆட்சியாளர் எவ்வளவு பகைக்கினாலும் மக்களின் ஆதரவு நமக்கு இருக்கிறவரையில் நாம் கவலைப்படத் தேவையில்லை" (அண்ணாதுரை 1980:167)

"ஆபத்தைக் கக்கியபடியே இருக்கும்" (அண்ணாதுரை சி.என், 1980:171)

"பகைகக்கும் விழிகளும்" (அண்ணாதுரை சி.என் 1980:250)

"விரோதத்தைக் கக்கிக்கொண்டிருப்பதிலேயே காலத்தைப் பாழாக்கிக் கொள்ளவில்லை" (அண்ணாதுரை சி.என் 1980:240)

"காங்கிரஸ்காரர்கள் கனல் கக்குகிறார்கள்" (அண்ணாதுரை சி.என் 1980:259)

"உள்ளம் எரிமலையாகிறது கக்கிவிட்டார் (அண்ணாதுரை சி.என்., 1963;71)

## வழக்குச் சொற்பயன்பாடு

அண்ணா அவர்கள் தம் மொழியில் தூய தமிழ்ச்சொற்களைப் பெய்து எழுதுவதையும் காணமுடிகிறது. அதேநேரத்தில் அவர்தம் வட்டார வழக்குச் சொற்களையும் தம் மொழி நடையில் கையாள்வதைக் காணமுடிகிறது, சான்றாகச்சில வழக்குச் சொற்களைப் பயன்படுத்துவதைக் காணலாம்.

ஆட்சி, அரசு என்பதைக் குறிக்குமிடத்தில் எல்லாம் குறிப்பாக நடுவணரசைக் குறிக்கும் இடத்தில் எல்லாம். இந்தியத்துரைத்தனம் என்ற சொல்லையே பயன்படுத்துகின்றார்.

"இத்தப்போக்கு ஒருவிதமான கிலியை ஏற்படுத்தத் தான் செய்தது" (அண்ணாதுரை 1980;217)

பலபள்ளிக் கூடங்கள் கலனாகிக் கிடக்கின்றன.

கழகம் மேலும் வலுவு பெறவேண்டும்

ஆனால் அவர் தம் படைப்பிலக்கியங்களில் வட்டாரவழக்குச் சொற்கள் இடம் பெற்றுள்ள அளவுக்கு படைப்பிலக்கியமல்லாத வற்றின் மொழியில் வழக்குச் சொற்கள் இடம் பெறவில்லை என்பது இவண் குறிப்பிடத்தக்கது.

*திங்களும் மாதமும்*

தூய தமிழ் எழுதுவோம் என்ற நோக்குடன் வடமொழியிலிருந்து ஆக்கிக்கொண்ட (வட சொற்களைத்) சொற்களைத் தவிர்த்து எழுதி வரும் மரபு சிலரிடம் காணப்படுகிறது. அவர்களே 'வாரம்' என்ற சொல்லைக் 'கிழமை' என்றும், 'மாதம்' என்ற சொல்லைத் 'திங்கள்' என்றும் எழுதுவர். அண்ணாவின் மொழியில் 'திங்கள்' 'கிழமை' ஆகிய தூய தமிழ்ச்சொற்கள் இடம் பெறுகின்றன. ஆனால் அவர் மாதம், வாரம் என்ற சொற்களையும் பயன்படுத்துவதைக்காண முடிகிறது. இச்சொற்பயன் பாட்டில் ஏதொரு வரையறையும் இருப்பதாகக் கூற முடியவில்லை. இதற்குச் சான்றாகப் பின்வரும் பத்தியைக் கூறலாம்.

"தண்டனை தான் ஆறு திங்களே தவிர அவர்கள் வழக்கு நடைபெற்று முடிய எடுத்துக்கொள்ளப்பட்ட 4 மாதங்களும் சிறையிலே இருந்துவந்தனர்; ஆக மொத்தத்தில் பத்துமாதச்சிறை என்று ஆகிறது" (அண்ணாதுரை, சி. என். 1980 : 275) இந்தப் பகுதியில் மாதம், திங்கள் ஆகிய இரண்டு சொற்களும் பயன் படுத்தப்பட்டுள்ளன.

> "மூவருக்கும் ஆறு வாரக் கடுங்காவல் தண்டனை" (அண்ணாதுரை 1980 ; 274),
>
> "அதிகாரிகள் கைதிகளைப் பார்வையிடுகிறார்கள் - இது ஒவ்வொரு கிழமையும்"
>
> இப்பகுதிகளில் வாரம் என்ற சொல்லும் கிழமை என்ற சொல்லும் பயன்படுத்தப்பட்டுள்ளன.

*பிறமொழிச்சொற்களின் பயன்பாடு*

அண்ணாவின் மொழியில் பல பிறமொழிச் சொற்கள் காணப்படுகின்றன அண்ணாவின் மொழியை ஆராயும் போது

அவர் மொழித் தூய்மை என்ற கருத்தை கொள்கையளவில் ஏற்றுக்கொண்டவர் என்றாலும் பயன்பாட்டளவில் பிறமொழிச் சொற்களைப் பயன்படுத்துவதில் எந்தவிதக்கட்டுப்பாட்டையும் விதித்துக் கொண்டதாகத் தெரியவில்லை. அவர் தம மொழியில உற்சவமூர்த்தி, புண்ணியஸ்தலங்கள், மூலவர், கோபாதிபதி, பூர்ண கும்பம், அர்ச்சகர், விருந்துபசாரம், ரோஷம், அன்னியபதார்த்தம் அக்னியாஸ்திரம், தீக்ஷுச்சியாஸ்திரம் போனற வடசொற்கள் எள்ளல் தொனிபடப் பயன்படுத்தபபடுகின்றன.

## அல்லவும் இல்லையும்

தமிழில் 'அல்ல', 'இல்லை' என இரண்டு எதிர்மறை வடிவங்கள் உள்ளன. ஆகும் என்ற வினையின் எதிர்மறை வடிவம் அல்ல' என்பதாகும் இருக்கிறது என்ற வினையின் எதிர்மறை வடிவம் 'இல்லை' என்பதாகும். ஆனால் இன்றைய தமிழில் இருசொற்களின் பொருளும் இல்லை என்ற ஒரு சொல்லாலேயே உணர்த்தப்படுகின்றது. ஆனால் அண்ணாவின் தமிழில் இவ்விரண்டு சொற்களும் இன்றும் வரையறை மீறாமல் பயன்படுத்தப்படுவதைக் காணமுடிகிறது.

> ''இங்கே திராவிட நாடு பிரிவினை எவ்வளவு வேகமாக வளர்ந்திருக்கிறது என்பது எப்படி மற்றபகுதியினருக்குத் தெரியாதபடி 'இருட்டடிப்பு' இருக்கிறதோ, அதுபோல பாஞ்சாலக்கிளர்ச்சி பற்றிய முழுத்தகவலும் நமக்குத் தெரிவது இல்லை''(அண்ணாதுரை, சி. என், 1968:18)
> ''மற்றச்சிலர் போல என்னிடம் தனிப்பட்ட முறையில் பகைக்கினவரல்ல''

## ஒற்று மிகுதலும் மிகாமையும்

அண்ணாவின் மொழிநடையில் தமிழில் ஒற்று மிகுமிடம் மிகாஇடம் பற்றிய சிந்தனை தெளிவாக இருந்ததாகக் கூறமுடியவில்லை. ஆனால் இதனை அச்சுபிழை என மறுக்கவும்

வாய்ப்புண்டு சில சான்றுகளைக் காணலாம்.

அங்குக் காங்கிரசுக்கு வீழ்ச்சி
இங்கு சிறையில் உடல்நிலைகெட்டுக்கிடக்கிறது (1980:58)

மற்றக் கைதிகளுடன் வரிசையில் நின்றேன் (1980:105)
சமீட புத்தகங்கள் சிலவற்றைப் படித்திட முனைந்தது(1980:59)
பில்லைகளை பளபளப்பாக்கிக் கொள்கிறார்கள் (1980:145)
நாளையத் தினம் (1980:109) (1981:147)

அந்த புத்தகத்தைப் பரிமளம் தந்தான் (1980:169)
அந்தப் புத்தகம் பற்றிப் படிக்கவேண்டும் என்ற ஆவல் கொண்டிருந்தேன்(1980:169).

சிலஒற்று மிகாத இடங்களில் ஒற்று இட்டு எழுதும் நிலையும் அண்ணாவின் தமிழில் காணப்படுகின்றது.

*எத்தனையா? எத்துணையா?*

அண்ணாவின் மொழியில் எத்தனை/எத்துணை ஆகிய இரண்டு வடிவங்களும் காணப்படுகின்றன. இவை இரண்டும் மயங்கிவரும் நிலை காணப்படுகின்றது.

எத்துணை எழுச்சியும் கடமையுணர்ச்சியும் கொண்ட பண்பாளர்கள் இந்தக் கழகத்திலே இருக்கிறார்கள் என்பது பற்றி எண்ணிப் பெருமிதம் அடைந்தேன் (அண்ணாதுரை 1980 :180)

மாற்றார்கள் எத்துணையோ இட்டுக்கட்டியும் மூட்டிவிட்டுங் கூட நமது கழகம் இத்தகைய கேட்டினுக்கு இரையாகாமல் இருந்துவருவது பற்றி, வியந்து பேசிக் கொண்டிருந்தோம். (அண்ணாதுரை 1980 : 181)

ஆட்சியாளர் எத்தனை பகை கக்கினாலும் மக்கள் ஆதரவு நமக்கு இருக்கிறவரையில் நாம் கவலைப்படத்தேவையில்லை (அண்ணாதுரை, 1980 :167)

இந்தியை எதிர்த்து எத்தனை கிளர்ச்சிகள் நடத்தினாலும் எத்தனைபேர் சிறை புகுந்தாலும் மூடிமறைத்துவிட முடியும் (அண்ணாதுரை, 1963 : 63)

இவ்விடங்களில் எல்லாம் எத்துணை எத்தனை என்ற இரு வடிவங்களின் வருகையை வரையறை செய்ய இயலவில்லை. 'எத்துணை' என்பது அண்ணாவின் மனதைக்கலந்த வடிவமாகும். அண்ணா இவ்வடிவத்தை அதிகம் கையாள்கிறார்.

## தொடர்களில் சில நீக்கல்கள்

அண்ணாவின் மொழியில் வாக்கியங்களில் சில நீக்கல்கள் (deletion) இடம் பெற்றுள்ளன. இவை பெரும்பாலும் பேச்சு மொழியின் தாக்கத்தால் ஏற்பட்ட நீக்கல்களேயாகும்.

"கருணாநிதியும், நடராசனும் அறப்போரில் ஈடுபடுவதற்கான நாளை அவர்களே தேர்ந்து எடுத்து அறிவித்திருக்கிறார்கள். இடையிலே அவர்கள் ஆற்ற வேண்டிய பணி நிரம்ப. எனவே அவர்கள் தம்மீது தொடரப்படும் வழக்கு பற்றி உயர்நீதிமன்றம் வரை சென்று நீதி பெற முயற்சிக்கக் கடமைப் பட்டிருக்கிறார்கள். (அண்ணாதுரை, 1980 : 268)

## தொடரமைப்பில் மாற்றம்

தமிழ் வாக்கிய அமைப்பு எழுவாய்—செயப்படுபொருள்—பயனிலை என்றமைவதே பொதுவிதி. ஆனால் தமிழ் உருபனிலையில் மிகவும் செறிவான மொழியாக இருப்பதால் தொடர்நிலையில் இவ்வரிசை மாறினாலும் பொருள் மாறுபடுவதில்லை என்பதால் வரிசை முறை மாறுவதை நடையியல் கூறாகக் கருதவாய்ப்புள்ளது. இவ்வரிசைமுறை மாற்றம் சில வரையறைக்குட்பட்டது.

எழுவாய் — பயனிலை — செயப்படுபொருள் எப்படியும் மாறலாம் இதற்குச் சான்றாக அண்ணாவின் மொழியில் காணலாகும் தொடர்களைக் காணலாம்.

"வாங்கவாங்க மணிஆறு அடிச்சாச்சி என்று கூப்பிட்டார் ஒரு காவலாளி கீழே இருந்த எங்களை"

இம் முறை மாற்றம் இலக்கண விதியை மீறியதாகாது.

ஆனால் எச்சமும் வினைமுற்றும் ஒரேவாக்கியத்தில் அமைந்தால் வினைஎச்சம் முதலிலும் வினைமுற்று பின்னரும் வரவேண்டும் என்பதுதான் இலக்கணவிதி.ஆனால் அண்ணாவின் மொழியில் இவ்விலக்கண விதியும் மீறப்பட்டுள்ளதைக் காண-முடிகிறது.

"மாடிப்படியின் மீது நின்றுகொண்டு பார்க்கிறேன், விதவிதமான நோயின் பிடியிலே சிக்கி நொடித்துப் போய்க் கிடக்கும் 'பாதிமனிதர்கள்' கொண்டுவரப்படுகிறார்கள் அடைக்கப்படுவதற்காக"

காரியம்—காரணம் என்ற முறையில் வாக்கியம் அமைதல் வேண்டும் ஆனால் அண்ணாவின் நடையில்,

"நாளைக்கு என்னைக்காண அநேகமாக யாரும் வர-மாட்டார்கள் என்று எண்ணுகிறேன். இன்று நிரம்பப்பேர் வந்து போனதால்" என ஒரு வாக்கியம் முதலில் காரியமும் அதன் பின்னர்க்காரணமும் என எந்த ஒரு இணைப்பும் இன்றி இடம் பெறுகின்றது. இதுபோன்ற தொடர்களை அண்ணாவின் மொழியில் அதிகம் காணமுடிகிறது.

*முடிவுகள்*

இதுகாறும் கண்ட சான்றுகளிலிருந்து அண்ணாவின்மொழி நடையில் காணலாகும் நடையியற் கூறுகளாகப் பின்வருவன-வற்றைக் கூறலாம்.

1. எதுகை, மோனை, இயைபு ஆகிய ஒலிநிலையிலான நடையியற் கூறுகள் அண்ணா மொழியில் மிகுந்து காணப்-படுகின்றன. இவை அவரின் மொழிநடைக்கு எழில் ஊட்டு கின்றன.

2. அண்ணா சிந்தனையைத் தூண்ட விரும்பும் இடங்களில் எல்லாம் வினாத் தொடர்களைப் பெய்து எழுதுகிறார்.

3. அண்ணாவின் நடையில் உருவகம் குறிப்பிடத்தக்க இடத்தைப்பெற்று விளங்குகின்றது.

4. அண்ணாவின் நடையில் விஞ்சிநிற்கும் ஒரு கூறாக எள்ளல் சுவை விளங்குகின்றது.

5. அவருடைய நடையில் சிறுகதை கூறி விளக்குதல் என்ற திட்டப்பாங்கு காணப்படுகிறது.

6. அண்ணா தம் துயரத்தை ஒரேமாதிரிதான் வெளியிடுகிறார் இதுபோலவே வெறுப்பு, பகை, போன்ற உணர்வுகளை ஒரு குறிப்பிட்ட சொற்றொடர்களாலேயே விளக்குகிறார்.

7. அண்ணாவிடம் மொழித்தூய்மை பற்றிய சிந்தனை கொள்கையளவில் காணப்படுகிறதே ஒழிய பயன்பாட்டில் மொழித்தூய்மை இல்லையென்றே கூறும் அளவுக்குப் பிறமொழிச் சொற்கள் பயன்படுத்தப்படுகின்றன.

8. ஒற்றுமிகுதல் மிகாமை பற்றிய இலக்கணக் கூறும் அண்ணாவின் மொழிநடையில் சரிவரப் பின்பற்றப்படவில்லைஎன்றே தோன்றுகின்றது.

9. தொடரமைப்பில் வரிசைமுறையில் நிகழும் பிறழ்ச்சிகள் பல அண்ணாவின் மொழி நடையில் அமைந்த சிறப்புக் கூறுகளாகக் காணப்படுகின்றன.

## துணைநூல் பட்டியல்

1. அண்ணாதுரை, சி, என், 1961 ''கொள்ளையில் குழப்பமேன்?'' மரகதம்பண்ணை, சென்னை.

2. அண்ணாதுரை சி.என். 1963 தம்பிக்கு அண்ணாவின் கடிதங்கள் (முதற்பகுதி) பாரிநிலையம், சென்னை.

3. அண்ணாதுரை, சி.என். 1969 உழைப்பே உயர்வு, ஒன்பதாம் வகுப்புத் தமிழ்ப்பாட நூல், தமிழ் நாட்டுப் பாடநூல் நிறுவனம்.

4, அண்ணாதுரை, சி.என். 1980, கைதி எண் 6342, பாரி நிலையம், சென்னை.

5. அண்ணாதுரை, சி.என். 1981 (a) தம்பிக்கு அண்ணாவின் கடிதங்கள், பாரி நிலையம், சென்னை.

6 அண்ணாதுரை, சி,என், 1981, (b) (16 th Ed,) ஆரிய மாயை, திராவிடப்பண்ணை, திருச்சி.

7. இராமலிங்கம், மா., 1978, புதிய உரைநடை, தமிழ்ப்புத்தகாலயம், சென்னை,

8. நீதிவாணன், ஜெ. நடையியல், மணிவாசகர் நூலகம் சிதம்பரம்.

# அறிஞர் அண்ணாவின் கடித இலக்கியத் திறன்

இரா. மோகன்

கடிதங்களில் பொதுவாக இரண்டு வகைகள் உண்டு. ஒருவர். தமது நெருங்கிய நண்பர், உறவினர், காதலர் முதலானோர்க்குத் தனிப்பட்ட முறையில் எழுதும் கடிதம் முதல் வகையினது; புகழ் பெற்ற அரசியல் தலைவர்கள், எழுத்தாளர்கள், ஆன்மீகவாதிகள் முதலானோர் தம்பி, தங்கை, அன்னை, நண்பர் உடன்பிறப்பு இப்படி ஏதேனும் ஒர் உறவை முன்னிலைப் படுத்திக் கற்பனையாக எழுதும் கடிதம் இரண்டாம் வகையினது. தமிழ் இலக்கிய உலகில் இரண்டாம் வகையில் அடங்கும் கடிதங்களை எழுதியோருள் டாக்டர் மு. வரதராசனாரும் அறிஞர் அண்ணாவும் சிறப்பாகக் குறிப்பிடத்தக்கவர்கள் ஆவர். டாக்டர் மு. வ. 'தம்பிக்கு', 'தங்கைக்கு', 'அன்னைக்கு'. 'நண்பர்க்கு' என்ற தலைப்பில் கடித வடிவில் எழுதிய நூல்கள் அவருக்குப் பரந்த புகழையும் பெயரையும் தேடித் தந்தவை ஆகும். அதே போல், அறிஞர் அண்ணாவும் தாம் நடத்தி வந்த 'திராவிட நாடு' 'காஞ்சி' என்னும் இதழ்களில் 'தம்பிக்கு' என்ற பொது தலைப்பில் 21 தொகுதிகளாக - 'திராவிட நாடு 'இதழில் வெளிவந்த கடிதங்கள் பதின்மூன்று தொகுதிகளாகவும்' 'காஞ்சி' இதழில் வெளிவந்த கடிதங்கள் எட்டுத் தொகுதிகளாகவும் — நூல் வடிவில் வெளிவந்துள்ளன. சென்னை 'பாரி நிலையத்தார் அந்நூல் வரிசையை வெளியிட்டுள்ளனர். 'தம்பிக்கு' என்று தலைப்பிட்டு அறிஞர் அண்ணா எழுதிய கடிதங்களின் பொது அமைப்பினையும் தனித்திறனையும் ஆராய்வது இக்கட்டுரையின் முதன்மை நோக்கம் ஆகும்.

*பொது அமைப்பு*

அறிஞர் அண்ணா, தம்பிக்கு எழுதிய கடிதங்களின் பொது அமைப்பு ஒரு படித்தாகவே காணப்படுகின்றது. எவ்விதமான அடைமொழியோ தொடரோ இன்றி வெறுமனே 'தம்பி' என்ற ஒற்றைச் சொல்லால் விளித்தே அண்ணா தம் கடிதங்கள் எல்லாவற்றையும் தொடங்குகின்றார்; அதே போல எல்லாக்கடிதங்களையும் முடிக்கும்போது அவர் வலது புறத்தில் 'அன்புள்ள அண்ணாதுரை' என்று பெயரைச் சுட்டியும், இடது புறத்தில்

கடிதம் எழுதிய நாளைக் குறிப்பிட்டும் காட்டியுள்ளார் 'மானே தேனே', 'கண்ணீரும் பன்னீரும்,, 'ஆவடியும் காவடியும்', 'உலாவும் ஊழலும்', 'படமும் பாடமும்', 'சூடும் சுவையும்', ,புலித்தோலும் எலிவாலும்', 'அடித்தாலும் அணைத்தாலும்'' 'ஒளி படைத்த கண்ணினாய் வா! வா! வா!', 'குற்றம் பார்க்கில் சுற்றம், 'நெற்றிக் கண்ணைக் காட்டினாலும்', வாழு!வாழ விடு!' 'பட்டப் பகலில்', 'ஏழை சொல் அம்பலம் ஏறிவிட்டது, 'இலவு காத்த கிளி', 'ஒன்றாகக் கூடி இன்பத் திராவிடம் தேடி, 'இயற்கை கொஞ்சுகிறது இல்லாமை கொட்டுகிறது', முயன்றால் முடியும்' என்றாற் போல் எதுகை மோனை நயம் வாய்ந்த— பழமொழி வழக்குத் தொடர் இலக்கிய வரி முதலானவற்றின் அடிப்படையிடல் அமைந்ததலைப்புக்களைக்கடிதங்களுக்குப்,பொருத்தமாகச் சூட்டியுள்ளார், முகப்பில் கடிதச் செய்தியைக் குறிப்புச் சட்டகமாகவும் தந்துள்ளார். ''எடுத்துக்காட்டுகள், உவமைகள், கவிதைகள். கதைகள் ஆகியவைகளைக் கொண்டு தேவையான அரசியல் சமுதாயக் கருத்துக்களை எளிய முறையிலே அனைவரும் புரிந்து கொள்ளச் செய்யும் முறை-என் கண்டுபிடிப்பு அல்ல நீண்ட பழம் காலத்தோட்டு, அறிவாளர் மெத்த அருமையாகக் கையாண்ட வழி ...'' (தம்பிக்கு அண்ணாவின் கடிதங்கள் ஒன்பதாம் பகுதி, ப. 10) எனத் தம் கடிதங்களில் கையண்டுள்ள அமைப்பு முறை குறித்தும் அறிஞர் அண்ணா ஓர் இடத்தில் சுட்டிக்காட்டியுள்ளார்.

*மகிழ்ச்சியும் மன எழுச்சியும் தரும் பணி*

தம்பிக்குக் கடிதம் எழுதுவது என்பது அறிஞர் அண்ணாவைப்பொறுத்த வரையில் ஒரு செயல் மட்டுமன்று; அது ஒரு புனிதமான பணி; மகிழ்ச்சியும இன்பமும் பெருமிதமும் எழுச்சியும் தருகின்ற ஓர் அரிய பணி.

'என் கடன் பணி செய்து கிடைப்பதே' என்றார் அப்பர் பெருமான்; அறிஞர் அண்ணாவோ 'என் கடன் தம்பிக்குத் தினமும் கடிதம் எழுதும் பணி செய்து கிடப்பதே' என்பதையே தம் வாழ்நாள் குறிக்கோளாகக் கொண்டார்; அப்பணியில் அவர் தனியானதோர். இன்பத்தினையும் மகிழ்ச்சியையும் கண்டார்; அதனால் அவ்வப்போது எழுச்சியும் பெருமிதமும் பெற்றார். ''பிரச்சினைகளை விளக்கிட, ஐயப்பாடுகளைப் போக்கிட, அச்சம்

துடைத்திட, மறுப்புக்கு மறுப்புரைக்க, 'வாழ்க வசவாளர்' என்று அவர்களையும் வாழ்த்திட, தம்பிக்குக் கடிதம்' மிக நேர்த்தியான முறையில் பயன்பட்டு வந்தது. எனக்குத் தோன்றும் எண்ணங் களை உன்னிடம் கூறிடுவதிலே, தனியானதோர் மகிழ்ச்சி. எனக்கு ஏற்படும் மகிழ்ச்சியினை உன்னோடு பங்கிட்டுக் கொள் வதிலே ஓர் இன்பம், கவலை குடையும் போது, மன உளைச் சல் ஏற்படும் போது, உன்னோடு உரையாடி, தம்பி உடையான் படைக்கு அஞ்சான் என்ற எழுச்சி பெற்று வந்தேன்'' (தம்பிக்கு அண்ணாவின் கடிதங்கள், இருபத்தொன்றாம் தொகுதி ப.133) என அவரே 'தமிழர் திருநாள்' என்னும் தலைப்பில் 'காஞ்சி' இதழில் எழுதிய கடிதம் ஒன்றில் தம் உள்ள உணர்வுகளைப் பதிவு செய்துள்ளார். இங்ஙனம் 'தம்பி! தம்பி! தம்பி!' என்று கிழமை தவறாமல், பலப்பல ஆண்டுகள் அழைத்து, உரையாடி, அளவளாவி வந்த அண்ணாவுக்குத் தமிழக முதலமைச்சர் பொறுப்பை ஏற்றதும் பல்வேறு பணி நெருக்கடிகள் காரணமாகத் 'தம்பிக்குக் கடிதம்' எழுத இயலாமற்போயிற்று. அப்போது அவர் அடைந்த வருத்தத்திற்கும் ஏக்கத்திற்கும் அளவே இல்லை.

''தம்பி, எந்தப் பணி எனக்கு இனிப்பும் எழுச்சியும் தந்து வந்ததோ, எந்தப் பணியிலே நான் ஆண்டு பலவாக மிக்க மகிழ்ச் சியுடன் ஈடுபட்டு வந்திருந்தேனோ, எந்தப் பணி மூலம் என்னை உன் அண்ணனாக நீ உள்ளன்புடன் ஏற்றுக்கொண்டு, பெரு- மிதத்துடன் உலகுக்கு அறிவித்து வந்தனையோ,, எந்தப் பணி வாயிலாக என் கருத்துக்களை உனக்கு அளித்து உன் ஒப்பு- தலைப் பெற்று அந்தக் கருத்துக்களின் வெற்றிக்கானவழியினைக் காண முடிந்ததோ. எந்தப் பணியின் மூலம் தமிழகத்தை அறியவும் உலகத்தை உணரவும், தமிழ்ப்பண்பை நுகரவும் வழி கிடைத்து வந்ததோ, எந்தப் பணி மூலம் எப்போதும் உன் இதயத்தில் எனக்கு ஓர் இடம் கிடைத்து அது குறித்து நான் அளவற்ற அக மகிழ்ச்சி பெற முடிந்ததோ, அந்தப் பணியினை முன்பு போலச் செய்ய முடியாதவனாக்கப்பட்டு, முடியவில்லையே என்ற ஏக்கத்- தால் தாக்கப்பட்டு, சூழ்நிலையின் கைதியாக்கப்பட்டுக் கிடக்கி- கிறேன் என்பதனை அறிவாய். 'சூழ்நிலையின் கைதி'—என்ற சொற்றொடருக்குத்தான், முதலமைச்சர் என்று முத்திரையிட்டு-

ருக்கிறார்கள்'' (தம்பிக்கு அண்ணாவின் கடிதங்கள், இருபத்தொன்றாம் தொகுதி, ப-132) என அவரே தம் ஆழ்ந்த வருத்தத்தையும் ஏக்கத்தையும் குறித்து ஒரு கடிதத்தில் உருக்கமாக எழுதியுள்ளார்.

## தம்பியர்மேல் அண்ணா கொண்டிருந்த அளவற்ற பற்று

அறிஞர் அண்ணா, தம்பியர் மேல் கொண்டிருந்த பற்று அழுத்தமானது; ஆழமானது; அளவிட முடியாதது. அவர் அவ்வப்போது இதழ்களில் எழுதிய கடிதங்கள் வாயிலாகத் தம்பியருடன் உரையாடி இன்புற்றார்; உறவாடி மகிழ்ந்தார்; உலக நடவடிக்கைகளையும், தமது உள்ளத்தை ஆட்கொண்ட இலட்சிய வெற்றிக்கான பிரச்சினைகளையும் எடுத்துரைத்தார்.

''தாத்தாவுக்கு ஏன் கைவலி தெரியுமா?... 'எழுதுவதாலே!'- என்று என் பேரன் மலர்வண்ணன்-என் மகன் டாக்டர் பரிமளம் பெற்ற செல்வம் கூறுகிறான். உண்மை தான்! வலி இருக்கத்தான் செய்கிறது!-ஆனால் தம்பிக்கல்லவா கடிதம் எழுதுகிறேன்! அது தனியானதோர் சுவையைத் தருகிறது'' (தம்பிக்கு அண்ணாவின் கடிதங்கள், இருபத்தொன்றாம் தொகுதி, ப. 152) என்றும் ''தம்பி! உனக்கு என்னிடம் உள்ளன்பு இருக்கிறது, உணருகிறேன்; என் உயிருக்கு அஃதன்றி வேறு ஊதியம் இல்லை; என் வாழ்க்கைக்கு அதனினும் வலுவான ஊன்றுகோல் இல்லை'' (தம்பிக்கு அண்ணாவின் கடிதங்கள், எட்டாம் பகுதி, 197) என்றும், ''ஆங்கில இதழின் உணர்ச்சியிலேயே என்னை நான் பின்னிக்கொண்டு, உன்னுடன் உரையாடும் மகிழ்ச்சியை இழந்துவிடுவேனோ என்று ஐயப்படாதே, தம்பி. அது முந்திரிப் பருப்பானால், இது வெண்பொங்கல்! அது கருவி, இது என் உள்ளம்! அது பிறர் நெஞ்சைத் தொட, இது உன்னுடன் உறவாட! அது நம்மைப் பிறருக்கு விளக்க, இது நம்மை உருவாக்க! எனவே, இதனை இழந்து விட ஒருபோதும் சம்மதியேன்'' (தம்பிக்கு அண்ணாவின் கடிதங்கள், ஐந்தாம் பகுதி ப. 132) என்றும் அண்ணாவே, தமக்கும் தமது தம்பி-

யர்க்கும் இடையே நிலவிய உறவின் நெருக்கத்தைப் பற்றிப் பல இடங்களில் உணர்ச்சியோடும் உருக்கத்தோடும் எழுதியுள்ளார்.

*தன் வரலாற்றுக் குறிப்புக்கள்*

கடிதம், நாட்குறிப்பு, பேட்டி போன்றவற்றில் தன்வரலாற்றுக் குறிப்புக்கள் இடம்பெறுவது என்பது தவிர்க்க இயலாத ஒன்றாகும். அதிலும், ஒத்த உணர்வும் ஆழ்ந்த உறவும் நெருங்கிய உரிமையும் கொண்ட ஒருவர்க்கு எழுதும் கடிதத்தில் இவ்வகையான செய்திகள் விரவி வருவது என்பது இயல்பானதே எனலாம். அண்ணா, தம்பிக்கு எழுதிய கடிதங்களில் இடம் பெற்றுள்ள இரு சுவையான தன் வரலாற்றுக் குறிப்புக்கள் இதோ.

''என்னிடம் சில குறைபாடுகள் உண்டு — குறைபாடுகள் என்று சம்பிரதாய முறையில் சொல்கிறேன்— அதிலே ஒன்று தான் கனவு காண்பது; மற்றொன்று மிகக் கஷ்டமான நெருக்கடியின் போதும் சர்வ சாதாரணமாகக் கருதிக் கொண்டு சிரித்துக் கிடப்பது...சிரிக்கத் தெரியாமலிருந்தால் எனக்குப் பொதுவாழ்க்கையிலே ஏற்பட்ட சங்கடங்களால் பைத்தியமே பிடித்துவிட்டிருக்கும்'' (தம்பிக்கு அண்ணாவின் கடிதங்கள், முதற் பகுதி, ப. 13).

''தம்பி! உனக்கு எப்போதாகிலும், நீர் கோர்த்துக்கொண்டதுண்டா? சளி பிடிக்கிறது என்பார்களே. அது? எனக்கு அந்தத் தொல்லை அடிக்கடி! ... வேலையிலே மும்முரமாக ஈடுபட்டிருக்கும் போது, தும்மலாகி, மூக்கைத் துளைத்து, குடைந்து, ஆளைப் படாதபாடு படுத்திவிடும்! ...சளியின் தொல்லை படுபவர்களுக்குத் தான் தெரியும்'' (தம்பிக்கு அண்ணாவின் கடிதங்கள், ஒன்பதாம் பகுதி, பக். 96-97).

புகழ்பெற்ற தலைவர் ஒருவரின் இத்தகைய தன்வரலாற்றுக் குறிப்புக்களுக்கு எப்போதுமே ஈர்ப்பாற்றல் மிகுதியாக உண்டு எனலாம்.

## நிலைத்திறன்

அறிஞர் அண்ணா, தம்பிக்கு எழுதிய கடிதங்களில் தருக்க முறையாக ஒன்றை விளக்குவதற்கு என உரைநடையைக் கையாளாமல் பெரும்பாலும் ஏதேனும் ஓர் உணர்ச்சிக் கலப்புடைய பொருள் ஒன்றை எடுத்துக்கொண்டு, அதனை ஆற்றலோடு புலப்படுத்துவதற்கு ஏற்ற வகையிலேயே உரைநடையைக் கையாண்டுள்ளார்.

## எதுகை மோனைகளும் அடுக்கு மொழிகளும்

உரைநடையை உணர்ச்சியோடும் ஆற்றலோடும் எழுச்சியூட்டும் வண்ணம் கையாள்வதற்கு அவருக்குக் கை கொடுத்திருப்பது எதுகை, மோனை, முரண் முதலிய தொடை வகைகளும் அடுக்கு மொழிகளும் தாம், அவை அவருடைய நடையில் இயல்பாகவே வந்து அமைந்து அணி செய்வதையும் அவருடைய நடைக்கு ஓர் ஓசைச் சிறப்பை நல்குவதையும் காணலாம். இவ்வகை நடைக்கான இரு சான்றுகள் வருமாறு :

> "ஏழை எளியவர் கொட்டுவது கண்ணீர், எய்த்துப் பிழைப்பவன் குளித்திடப் பன்னீர்! ஏனென்று கேட்டிட வீரர் இல்லையா? விவேகி இல்லையா, ஆண்மகன் இல்லையா? என்றெல்லாம் சிலர் ஏக்கமிட்டனர், முணுமுணுத்தனர் பலர், பத்தி பத்தியாக எழுதித் தள்ளினர் சிலர். பாமர மக்கள் பதைத்தனர், பதறினர், பணம் பாழாகிறது! பணம் பாழாகிறது!! என்று கொதித்தெழுந்து கூறினர்" (தம்பிக்கு அண்ணாவின் கடிதங்கள், முதற்பகுதி ப. 100)

> "பதவிப் பிரியர்கள் பல்லிளித்துக் கிடக்க, பணக்காரக் கூட்டம் பாத சேவைசெய்ய, பத்திரிகை முதலாளிகள் பராக்குப் பாட, பவனி வருகிறது. பாரத மாதாவின் ஆசி பெற்ற ஒரு கூட்டம், இதனை, பஞ்சையும் பராரியும் பகல் பட்டினியும் பக்கிரியும் எதிர்க்கிறது. அதிகார வெறியரால் அலட்சியப்படுத்த முடியவில்லை, அடக்கு முறை வீசித்தான் இந்த எதிர்ப்பை ஒழிக்க முடியும் என்ற எண்ணம் பிறக்-

கிறது'' (தம்பிக்கு அண்ணாவின் கடிதங்கள், மூன்றாம் பகுதி, ப.29).

இங்ஙனம் தமிழில் அடுக்குமொழி இரட்டைக் கிளவி, எதுகை மோனை ஆகியவற்றைக் கையாண்டு எழுதி எழுதி—பேசிப் பேசி மக்களை மயக்கி விடுகிறார் அண்ணா, அப்பாவி மக்களும் ஓசை நயத்தில் மயங்கி அவரிடம் தங்கள் உள்ளத்தைப் பறிகொடுத்து விடுகிறார்கள் என்று ஏளனம் கலந்த ஒரு விமர்சனம்— குற்றச் சாட்டு — அண்ணாவின் மீது எழுந்தது; அதை அண்ணா தமக்கே உரிய முறையில் எதிர்கொண்டார்; அடுக்கு மொழி, இரட்டைக் கிளவி, எதுகைமோனை ஆகியவற்றின் எழில், பயன் ஆகியவற்றை விளக்கிக் 'கிளிக்குப் பச்சை பூசுவதா..?' என்ற தலைப்பில் அவர், தம்பிக்கு ஒரு நீண்ட கடிதமே எழுதினார்; அதில், அடுக்கு மொழி களையும் எதுகை மோனைகளையும் எப்படிக் கையாள வேண்டும் என்பது பற்றிய தம் தனிப்பட்ட கருத்தினை ஆழுத்தம் திருத்த-மாக எடுத்துரைத்தார். அக்கருத்து வருமாறு:

''ஓசை நயம் — அடுக்குத் தொடர் — இரட்டைக் கிளவி — போன்றவைகள், பூங்காவிலுள்ள கவின்மலர்கள் போன்ற வை! தாமாக மலர வேண்டும் — மணமுள்ளவைகளைப் பத-மாகப் பறித்துப் பக்குவமாக மாலை தொடுக்க வேண்டும் — அப்போது தான் கவர்ச்சி கிடைக்கும். ஓசை நயத்தை எப்-படியும் பெற்றுத் தீர வேண்டும் என்று முயற்சித்தாலோ-காது குடைச்சல் ஏற்படுவது மட்டுமல்ல, மொழிக்கு ஏற்-பட்டுள்ள பெருமதிப்பும் குன்றும், குறையும்'' (தம்பிக்கு அண்ணாவின் கடிதங்கள், இரண்டாம் பகுதி. பக். 187—88)

அடுக்குத் தொடர், இரட்டைக் கிளவி, எதுகை மோனை முரண் தொடைகள் முதலானவற்றை அண்ணா தம் மொழி நடையில் பதமாகவும் பக்குவமாகவும் — அளவாகவும் அழகாகவும் அவற்றின் இடமறிந்து—காலமறிந்து —வலியறிந்து கையாண்டு வெற்றி பெற்றுள்ளார்.

## கருத்துக் கதைகளின் ஆட்சி

ஒரு கருத்தை நேரடியாகச் சொல்லிப் புரிய வைப்பதை விட பொருத்தமான ஒரு கதையின் வாயிலாக அக்கருத்தை உணர்த்துவது என்பது எளிது. இதிகாச காலம் முதல் இன்றைய கணிப்பொறிக் காலம் வரை கதைக்கு என்று ஒரு தனிப்பட்ட ஆற்றலும் செல்வாக்கும் உண்டு. அதுவும், தமிழைப் பொறுத்த வரையில் என்றால் சொல்லவே வேண்டாம்; 'கதை கேட்டுக் கதை கேட்டு வளர்ந்த இனம்' தமிழினம்! கருத்துப் புலப்பாட்டு நெறியில் கதைக்கு உள்ள ஆற்றலைநன்கு உணர்ந்த அறிஞர் அண்ணா, தம்பிக்கு எழுதும் கடிதங்களில் ஆங்காங்கே கதைகளைத் திறம்படக் கையாளுகின்றார். கருத்துக் கதை, மக்கள் நாவில் வழங்கும் நாட்டுப்புறக் கதை, பிறமொழிக் கதை எனப் பல வகையான கதைகள் அவருடைய மொழி நடையில் பயின்று வருவது காணலாம். 'தம்பி, ஒரு கதை உண்டு', 'ஒரு வேடிக்கையான கதை சொல்வார்கள்', 'தம்பி, ஒரு கதை சொல்கிறேன் கேள்', 'தம்பி! உருக்கமான கதையொன்று, நெடுநாட்களுக்கு முன்பு படித்தது நினைவிற்கு வருகிறது' என்றாற்போல் தொடங்கித் தம் கடிதங்களின் ஊடே நல்ல பல கதைகளைக் கூறிச் செல்வது என்பது அண்ணாவுக்குக் கைவந்த ஒன்றாகும்.

'இட்லர் கூடச் சோஷியலிசம் பேசினான்' என்பது 'காஞ்சி' இதழில் அண்ணா எழுதிய ஒரு கடிதத்தின் தலைப்பு. அதன் தொடக்கத்தில் அவர் எடுத்துக்காட்டியுள்ள ஓர்அழகிய குட்டிக் கதை இது :

"தம்பி. ஒரு பணக்காரச் சிறுவன், ஒரு ஏழைச் சிறுவன் இருவரையும் ஒரு மனோதத்துவக்காரர் சோதனை செய்தார் ஒரு படத்தைக் காட்டி.

சாப்பிட்டுக் கொண்டிருக்கும் ஒரு சிறுவன் தன் தாயாரைப் பார்த்துச் சிணுங்கும் காட்சி படத்தில் வரையப்பட்டிருந்தது.

படத்திலுள்ள சிறுவன் என்ன காரணத்துக்காகச் சிணுங்குகிறான் என்று கேட்டார் மனோதத்துவக்காரர்,

ஒரே படம்! இரண்டு சிறுவர்கள் பார்க்கிறார்கள்!! பதில்? இன்னும் கொஞ்சம் சோறு கேட்கிறான் சிறுவன், அதற்காகத் தான் சிணுங்கிக் கொண்டிருக்கிறான் என்று பதில் அளித்தான் ஏழைச் சிறுவன்.

'எனக்குப் பசி இல்லை அம்மா. போதும் சாப்பாடு! இனிச் சாப்பிட முடியாது!!' என்று தாயிடம் சொல்கிறான் படத்திலுள்ள சிறுவன் அதனால் தான் சிணுங்குவது போலப் படம் வரையப் பட்டிருக்கிறது என்று பதில் தந்தான், பணக்காரச் சிறுவன்.

ஒரே படம், இரு வேறு பதில்கள்!!"

இந்தக் கதையை எடுத்துக்காட்டி, 'ஏழை பணக்காரன் என்று இரு வேறு நிலைகள், இரு வேறு இயல்புகளைத் தந்திருக்கிறது என்பதைக் காட்டுவது இந்தக் குட்டிக் கதை' (தம்பிக்கு அண்ணா வின் கடிதங்கள், பத்தொன்பதாம் தொகுதி, பக்-156-57) எனக் கதை உணர்த்தும் கருத்தையும் படிப்பவர் நெஞ்சில் பதியும் வண்ணம் சுட்டிக் காட்டியுள்ளார் அறிஞர் அண்ணா.

கதை சொல்லும் பாங்கில் கை தேர்ந்தவர் அண்ணா என் பதற்குச் 'சிட்டுக்குருவி கருத்துக் கதை' என்னும் தலைப்பில் அவரே இட்டுக் கட்டி எழுதியுள்ள ஒரு கதையினைத் தக்க சான்றாகக் காணலாம். 'தம்பி, ஒரு கதை சொல்கிறேன், கேள் கருத்தளிக்க இட்டுக் கட்டிய கதை' எனத் தொடங்கி அவர் அக் கதையை வளர்த்துச் செல்லும் விதமே தனி இதோ அவரது சொற்களிலேயே அக் கதையைக் காண்போம்;

"சிட்டுக் குருவி ஒன்று அதற்குச் சிறிதளவு அதிகமான குறும்புத்தனமாம். கதை தானே, தம்பி! சிட்டுக்குருவிக்குக் குறும்பு இருக்கும் என்று எப்படி நம்புவது என்று கேட்டுவிடாதே!

மரத்திலே உட்கார்ந்து கொண்டிருந்த அதனிடம் ஒரு 'காசு' இருந்தது. அவ்வழியே ஒரு மன்னன் சென்று கொண் டிருக்கக் கண்ட குருவி, குறும்புள்ளதல்லவா, அதனாலே கூவிற் றாம்,

'எங்கிட்ட ஒரு காசு இருக்கு யாருக்கு வேணும்' என்று.

மன்னன் புன்னகையுடன் இக் காட்சியைக் கண்டுவிட்டு, மேலாக நடந்தான். விடவில்லை குருவி—கீச்சுக் கீச்சென்று விடாமல் கத்திற்றாம்,

எங்கிட்டே ஒரு காசு இருக்கு யாருக்கு வேணும்' என்று

வேடிக்கைக்காக மன்னன் 'எனக்குத் தான் கொடேன்' என்று கேட்டானாம். குருவி உடனே,

"ஐயே, ஒரு ராஜாவுக்குக் காசு வேணுமாம், என் காசு வேணுமாம்! என்று கூவிற்றாம்!

'செச்சே! மெத்தக் குறும்புத்தனம் கொண்ட குருவி இது என்று எண்ணிக் கொண்டு, மன்னன் தன் வழி செல்லலானான்; குருவி விடவில்லை,

'எனக்குப் பயந்து எடுத்தான் ஓட்டம் இதோ ஒரு ராஜா! என்று பாடிற்றாம்,

'போக்கிரிக் குருவியே' என்று கோபமாக அல்ல, செல்லமாகக் கூறியபடி, மன்னன் குருவியை அதட்டினானாம். குருவி அப்போதும் சும்மா இருந்ததா? அதுதான், இல்லை!

'குருவியைக் கொல்ல வருகிற ராஜா பறந்து வா, பார்ப்போம்! என்று சவால் விட்டதாம்.

மன்னன் சிரித்தபடி, தன் அரண்மனையை நோக்கி விரைந்தான். குருவி, குறும்புத்தனத்தை விடவில்லை.

'எனக்குப் பயந்து ஓடிப்போனான் ஏமாந்த ராஜா 'என்று கூவிற்றாம்''. (தம்பிக்கு அண்ணாவின் கடிதங்கள், மூன்றாம்பகுதி, பக். 85-86).

'குறும்புக் குணம் கொண்டவர்கள், ஒருவர் எதைச் செய்தாலும் ஏதாவது பேசுவர்; நமது எந்தச் செயலுக்கும் ஏதேனும் ஓர் விஷமத்தனமான பொருள் கொண்டு, ஏசுவர்; அதிலும் அரசியல உலகில், சொல்லத் தேவையில்லை; வாயைக் கிளறி வயிற்றெரிச்சலைக் கொட்டிக் கொள்வதிலே வல்லமை மிக்கவர்கள் ஏராளம்' என்னும் கருத்தைப் படிப்பவர்கள் எளிதாகவும் நன்றாகவும் புரிந்து கொள்வதற்காக இங்கே இந்தச் சுவையான கதையை எடுத்தாண்டுள்ளார் அண்ணா.

இங்ஙனம் தம் படைப்புகளில் அறிஞர் அண்ணா கையாண்டுள்ள கதைகள் தொகுக்கப் பெற்று 'அறிஞர் அண்ணா சொன்ன குட்டிக் கதைகள் 100 என்னும் தலைப்பில் தனியொரு நூலாகவே வெளிவந்துள்ளன என்பது இங்கே நினைவுகூரத் தக்க செய்தியாகும்.

### நகைச்சுவைத் திறன்

எண் வகைச் சுவைகளுள் நகைச் சுவைக்குத் தனிப்பட்ட ஓர் ஏற்றம் உண்டு. வரிசை முறையில் முதலாவதாக இடம் பெறும் தகுதிப்பாடு அச் சுவைக்கு உண்டு. முதன்மையும் இன்றியமையாமையும் கருதி அதற்கு அந்த இடம் அளிக்கப்பட்டது என்றும் கருதலாம். தொல்காப்பிய உரையாசிரியரான பேராசிரியர், 'நகை என்பது சிரிப்பு; அது முறுவலித்து நகுதலும், அளவே சிரித்தலும், பெருகச் சிரித்தலும் என மூன்று என்ப'என நகைச்சுவையை மூவகைப்படுத்துவர் (தொல்காப்பியம், பொருளதிகாரம், பேராசிரியர், ப. 4) அறிஞர் அண்ணா, தம்பிக்கு எழுதிய கடிதங்களில் இம் மூவகையான நகைச்சுவைகளும் இடம் பெற்றிருப்பதைக் காண முடிகின்றது. ஒரு சில உதாரணங்களால் இக்கருத்தை நிறுவலாம்.

''விகட கவியான தெனாலிராமன், ஒருநாள், காளியைத் 'தரிசனம்' கண்டானாம்' ... அந்தக் காளி, ஆயிரமுக மாகாளி! முகம் மட்டும் தான் ஆயிரம்! கரங்கள் அவ்வளவு இல்லை.

கண்ட உடன் தெனாலிராமன், கடகடவெனச் சிரித்தானாம், அவன் அப்படிச் சிரித்தது கண்டு, எப்படி இருந்திருக்கும் மாகாளிக்கு!... 'எதற்காகச் சிரிக்கிறாய்?' என்று கேட்டாள்.

'தாயே! தயாபரி! எனக்கு இருப்பது ஒரே மூக்கு! அந்தச் சனியனில் சளி பிடித்துக் கொண்டால், இந்த இரண்டு கைகளும் போதவில்லையே! அம்மா! உனக்கோ ஆயிரம் மூக்குகள்! உனக்குச் சளி பிடித்துக் கொண்டால் என்ன பாடுபடுவாயோ என்று எண்ணினேன், சிரிப்பு வந்து விட்டது' என்று தெனாலிராமன் பதிலளித்தானாம்'' (தம்பிக்கு அண்ணாவின் கடிதங்கள், ஒன்பதாம் பகுதி, ப. 97).

'முதல் பந்தி' என்னும் தலைப்பில் 'காஞ்சி' இதழில் தம்பிக்கு எழுதிய கடிதம் ஒன்றில் அண்ணா இவ்வேடிக்கைக் கதையைக் கையாண்டுள்ளார், தெனாலிராமனின் பதிலைக்கேட்டு மாகாளி மட்டுமல்ல, நாமும் விழுந்து விழுந்து சிரிக்கிறோம். அண்ணாவின எழுத்து வாசகரைப் 'பெருகச் சிரிக்க'வும் செய்யும் என்பதற்கு இக்கதைப் பகுதி நல்லதொரு சான்றாகும்.

'உள்ளப் பட்ட நகை' என்னும் தொல்காப்பியம் தொடருக்கு உரை விளக்கம் வரையும் பேராசிரியர், 'உள்ளப் பட்ட நகை என்றதனான் உள்ளத்தொடு பிறவாத நகையும் உள' எனக் கூறி, தம் கருத்திற்குச் சான்றாக 'வறிது அகத் தெழுந்த வாயல் முறுவலள்' என்ற அகநானூற்றுப் பாடல் அடியைச் சான்றாகக் காட்டுவர் (தொல்காப்பியம்-பொருளதிகாரம், பேராசிரியம், ப. 7) மனித வாழ்க்கையில் நகைச்சுவையைத் தோற்றுவிக்கும் நிலைகள் பல உண்டு. எள்ளல், இளமை, பேதைமை, மடம் என்ற நான்கு நிலைக்களன்களில் மட்டுமே நகைச்சுவை பிறக்கும் என்பதில்லை; வேதனையில்—விரக்தியின் விளிம்பில் — அவலத்தின் முடிவில்— நகைச்சுவை பிறப்பதும் உண்டு. 'போஜராஜனும்' காமராஜரும் என்ற தலைப்பில தம்பிக்கு எழுதிய கடிதம் ஒன்றில் இவ்வகையான நகைச்சுவையை அழகுற எடுத்துக்காட்டியுள்ளார்.

"தம்பி!

'நானோ என் மனைவியோ ஒரு குற்றமும் செய்யாத போது என் தாயாருக்குக் கோபம் வருகிறது.

நானோ என் தாயாரோ ஒரு தவறும் செய்யாத போது என் மனைவிக்குக் கோபம் வருகிறது.

என் தாயாரோ மனைவியோ ஒரு பிழையும் செய்யாத போதும் எனக்குக் கோபம் வருகிறது.

இது யாருடைய குற்றம் அரசே!

இப்படி ஒரு கேள்வியைப் புலவர் கேட்ட போது, மன்னன் திகைத்துப் போயிருப்பான் என்று தானே எண்ணிக் கொள்வாய்...

நிதி மட்டும் படைத்தவனாக இல்லை அம் மன்னன். நிரம்ப மதிபடைத்தவன். கேள்விக்கான விடை புரிந்து விட்டது பணியாளை அழைத்து புலவருக்குத் தேவைப்படும் பணம் கொடுத்தனுப்பக் கட்டளையிட்டான்,

மன்னனுடைய மதி நுட்பத்தைக் கண்ட புலவர் பெரிதும் பாராட்டினார்.

காரணமற்ற கோபம் ஒவ்வொருவருக்கும் ஒருவர் மீது ஒருவருக்கு — புலவர் அந்த நிலையைத் தான் எடுத்துரைத்தார்.

வறுமை நோய் வாட்டும் போது மட்டுமே இந்த நிலைமை இருக்க முடியும். கோபம்—ஒருவர் மீது ஒருவருக்கு. தன் குடும்பத்தை வறுமை வாட்டி வதைக்கிறது என்பதைத் தான் புலவர், எடுத்துரைத்தார். என்பதனை உணர்ந்து கொண்ட மன்னன், பரிசுப் பணம் கொடுத்துப் புலவரின் வறுமையை நீக்குவதன் மூலம் அவர் குடும்பத்தில் குதூகலம் மலர்ந்திடச் செய்தான்?'

(தம்பிக்கு அண்ணாவின் கடிதங்கள், இருபதாம் தொகுதி பக். 75 — 76).

போஜராஜனுடைய அறிவுத் தெளிவையும், அவன் புலவர்களை ஆதரித்த பணியினையும் விளக்கிட வழங்கி வரும் அருமையான இந்தக் கதையினை 'வாழ்க்கையின் வேதனையையும் மெல்லிய நகைச்சுவை இழையோடும் வண்ணம் எடுத்துரைக்க முடியும்' என்னும் உண்மையை உணர்த்துவதற்காகக் கையாண்டுள்ளார் அண்ணா.

உலக, இந்திய, தமிழக அறிஞர்கள் கவிஞர்கள் ஆகியோரது வாழ்வும் வாக்கும் மட்டுமன்றி அன்றாட வாழ்வும் அண்ணாவின் நகைச்சுவைத் திறனுக்கு ஓர் அருமையான களமாக அமைந்திருக்கக் காண்கிறோம். ஓர் எடுத்துக்காட்டு:

''ஊதுகுழல் வேண்டுமா, ஊதுகுழல்' என்று கேட்டான் நடைபாதை வியாபாரி.

'வேண்டாமப்பா' என்று கூறினார், அவ்வழி சென்றவர்,

'பொத்தான் வேண்டுமா?'

'பேனா வேண்டுமா?'

'சாக்லெட் வேண்டுமா?'

'சாயப் பவுடர் வேண்டுமா?'

'சோப்பு, சீப்பு, கண்ணாடி, ப்ரோச், பின் வேண்டுமா?'

என்று வியாபாரி விடாமல் கேட்டுக் கொண்டே இருந்தான் அவ்வழி வந்தவருக்கு பெருத்த தொல்லையாகி விட்டது,

அன்று அங்காடி வந்தது எதையும் வாங்க அல்ல, யாரையோ சந்திக்க! வியாபாரி விடாமல் தொல்லை கொடுக்கக் கண்டு' அவர், கோபத்துடன்,

'ஒன்றும் வேண்டாமப்பா, போய்த் தொலை! ஒரே தலை-வலியாகி விட்டது உன்னாலே!' என்றார்.

'அருமையான தலைவலி மருந்து இருக்கிறது! ஆறே அணா, வேண்டுமா' என்று கேட்டானாம், வியாபாரி!'' (தம்பிக்கு அண்ணாவின் கடிதங்கள், ஐந்தாம் பகுதி, பக். 101-102)

— அண்ணாவின் இயல்பான நகைச்சுவைத் திறனை இப்-பகுதியால் உணரலாம்.

உவமையும் உருவகமும்

உவமை, உருவகம் போன்ற அணிநலன்கள் பெரும்-பாலும் கவிதைக் கலைக்கே சிறப்புரிமை உடையன எனினும்

கவித்துவம் சான்ற உரைநடையில் இவை ஆங்காங்கு தோன்றிக் களிநடம் புரிவதும் உண்டு. அண்ணா, தம்பிக்கு எழுதிய கடிதங்களில் ஆங்காங்கே அழகிய உவமைகளும் உருவகங்களும் இடம் பெற்றுப் படிப்பவர் நெஞ்சை அள்ளுகின்றன. ஒரு சில சான்றுகளைக் கொண்டு இக்கருத்தை மெய்ப்பிக்கலாம்.

தூத்துக்குடியைச் சார்ந்த கே. வி. கே. சாமியின் மறைவை ஒட்டி 'வேதனை வெள்ளம்' என்னும் தலைப்பில் 'திராவிட நாடு' இதழில் தம்பிக்கு எழுதிய கடிதத்தின் தொடக்கப் பகுதி வருமாறு

> "தம்பி, நெஞ்சிலே பெருநெருப்பு மூண்டதடா, தம்பி ஓராயிரம் நச்சுப் பாம்புகள் ஒரு சேரக் கூடி இதயத்தைக் கடித்துக் கடித்து, மென்று மென்று கீழே உமிழ்ந்த வண்ணம் இருக்கிறது. வேதனை வெள்ளத்தில் வீழ்ந்து கரை காணாமல் தவிக்கும் நிலையிலே இருக்கிறேன். எதையும் தாங்கும் இதயம் வேண்டும் என்று நான் சொல்லாத நாளில்லை. இதயம் தாங்கிக் கொள்ள முடியாத பெருநெருப்பு புகுந்து சுட்டு எரிக்கிறது ....ஐய்யோ வேதனை, வேதனை இதுநான் வரை நான் அனுபவித்தறியாத வேதனை பித்தன போல வெறிச்சென்றதோர் பார்வையுடன் இருக்கிறேன் பேயறைந்தது என்பார்களே, அது போன்றதோர் கோலம் என்னைப் பிடித்துக்கொண்டது. நான் எந்நாளும் இதுபோன்றதோர் வேதனையைக் கொண்டதில்லை" (தம்பிக்கு அண்ணாவின் கடிதங்கள் நான்காம் பகுதி, பக். 76-77)

டாக்டர். இராதாகிருஷ்ணன்

இங்கே உள்ள திராவிடர் இழிநிலை குறித்துச் சிறிதும் எண்ணிப் பார்க்காமல் லெனின் கிராடு நகருக்குச் சென்று பல்கலைக்கழகப் பேராசிரியர்களுக்கும் மாணவர்களுக்கும் இந்து மதம் குறித்துக் கருத்துரையாற்றியதில் அண்ணாவுக்குச் சிறிதும் உடன்பாடு இல்லை. 'அத்தர் வியாபாரம்' என்னும் தலைப்பில் 'திராவிட நாடு' இதழில் தம்பிக்கு எழுதிய கடிதத்தில் முதலில் முத்தாய்ப்பான ஓர் உவமையை கையாண்டு அவரது போக்கினை எள்ளி நகையாடுகின்றார் அண்ணா.

''இங்கே உள்ள குப்பைக் கூளத்தைக் கூட்டிச் சுத்தம் செய்ய முடியவில்லை. அங்கே போனாராம், அற்புதமாகப் பேசினாராம், வெற்றி பெற்றாராம் பளா, பளா அடுக்களை நாற்றத்தைக் கழுவாமல் அத்தர் வியாபாரம் செய்யப் போனது போலல்லவா இருக்கிறது'' (தம்பிக்கு அண்ணாவின் கடிதங்கள், முதற் பகுதி, ப. 232)

உணர்ச்சி வயப்பட்ட நிலையில் உவமைகளை அடுக்கிக் கூறிச் செல்லும் போக்கும் அண்ணாவிடம் காணப்படுகின்றது. ஓர் எடுத்துக்காட்டு:

''... பல்லாயிரக்கணக்கான பாட்டாளிக் குடும்பங்கள், பாதை ஓரங்களிலே குடில்கள் அமைத்துக் கொண்டு குப்பைக்கு நடுவே குளிரால் கொட்டப்பட்டுக் கோலம் மாறித் திசை தவறிய மரக்கலம் போல சிறகொடிந்த பறவைகள் போல், புழுதி படிந்த சித்திரம் போல், நரம்பறுந்த யாழ் போல் உள்ளனர் ''தம்பிக்கு அண்ணாவின் கடிதங்கள் பத்தாம் பகுதி பக் 27:28)

இப் பகுதியில் நான்கு அழகிய உவமைகள் அணிவகுத்து நிற்பது கண்கூடு.

## மேற்கோளும் பழமொழியும்

அறிஞர் அண்ணா, தம்பிக்கு எழுதும் கடிதங்களில் முன்னோர் மொழிப் பொருளையும் சொல்லையும் பொன்னே போல் போற்றிக் கையாளுவதும் உண்டு; அவரது கருத்துக்களே பல சமயங்களில் நறுக்குத் தெறித்தாற் போல் அமைந்து பொன்மொழிகளாய்ப் படிப்பவர் நெஞ்சில் பதிந்து விடுவதும் உண்டு. இங்கே இருவகைக்கும் உரிய ஒரு சில சான்றுகளைக் காணலாம்.

''தம்பி, உணர்ச்சி ஒரு செல்வம். அதனைப் பெற்றதும துள்ளிக் குதித்து ஓடி ஆடி அதனைப் பாழாக்கி விடுவது அறிவுடைமை ஆகாது, அதனை அடக்கி ஆண்டு ஒருமைப்படுத்தி நேரான வழியில் பயன்படுத்திப் பலன் அடைவதே அறிவுடைமையாகும்'' என்னும் தமிழ்த்தென்றல் திரு.வி. கலியாணசுந்தரனாரின் கருத்துடன் தொடங்குகிறது. அண்ணாவின்

காஞ்சிக் கடிதம் ஒன்று (தம்பிக்கு அண்ணாவின் கடிதங்கள், இருபத்தொன்றாம் பகுதி. ப 1) 'தமிழரின் இதயத்தில் பொறிக்கப்பட வேண்டியதோர் பொன்மொழி' என இதனைப் போற்றும் அண்ணா இப்பொன் மொழியை இன்னும் சுருக்கி-செறிவாக்கி 'குறுகத் தறித்த குறள்' போல் 'உணர்ச்சி ஒரு செல்வம்! அடக்கி ஆண்டால் அரும்பயன் கிடைக்கும்!' எனக் கையாளுகின்றார்.

''கோபம் எழும் போது, உடனே பதில் பேசிவிடாதே! பேசுவதற்கு முன்பு 10 எண்ணிக்கை எண்ணிக் கொண்டிருந்து விட்டுப் பேச ஆரம்பி, கோபம் அதிகமாக இருந்தால், பத்துப் போதாது, நூறு வரையில் எண்ணிவிட்டுப் பிறகு தான் பேச வேண்டும்'' (தம்பிக்கு அண்ணாவின் கடிதங்கள், எட்டாம் பகுதி, ப. 9) என்றும் அமெரிக்கக் குடியரசுத் தலைவர் ஜெப்பர்சனின் பொன்மொழியுடன் தொடங்குகிறது 'திராவிட நாடு' இதழில் அண்ணா எழுதியுள்ள பிறிதொரு கடிதம்.

இங்ஙனம் தமிழக—இந்திய—உலக அறிஞர்களின் கருத்துக்களைத் தகுந்த இடங்களில் மேற்கோள் காட்டி அண்ணா எழுதியுள்ள கடிதப் பகுதிகள், அவரது பரந்துபட்ட இலக்கியப் புலமையைப் பறைசாற்றி நிற்கின்றன.

'கத்தியைத் தீட்டாதே, உந்தன் புத்தியைத் தீட்டு' 'மாற்றான் தோட்டத்து மல்லிகைக்கும் மணம் உண்டு', 'எதையும் தாங்கும் இதயம் வேண்டும்! 'மறப்போம் மன்னிப்போம்', 'நடந்தவைகள் நடந்தவைகளாக இருக்கட்டும், இனி நடப்பவைகள் நல்லவைகளாக இருக்கட்டும்', 'கடமை, கண்ணியம், கட்டுப்பாடு' என்றாற் போல் தமிழக மக்களின் நாவினில் பயின்று வரும் அண்ணாவின் பொன்மொழிகள் பலப்பல உண்டு. அண்ணா தம்பிக்கு எழுதிய கடிதங்களில் இங்ஙனம் படித்தவுடன் நெஞ்சில் பதிந்துவிடும் பொன் மொழி போல் இரத்தினச் சுருக்கமாக அமைந்த சில வாக்கியங்கள் இதோ;

''டாட்டா போன்றோரின் பணப் பெட்டிகள், காங்கிரசின் ஓட்டுப் பெட்டிகளுக்குத் துணையாக நிற்கின்றன'' (தம்பிக்கு அண்ணாவின் கடிதங்கள், ஐந்தாம் பகுதி, ப. 40)

''வீசுப்படுபவை வீழ்ந்துபடும்! நிலைத்து நிற்பது, நிமிர்ந்து நிற்கும்! ''(தம்பிக்கு அண்ணாவின் கடிதங்கள், ஒன்பதாம் பகுதி, ப. 45)

''தம்பி! உண்மையை உரைக்கிறேன் சாகாமலே, உயிரற்றவர்களாகி விட்டவர்கள் உண்டு! செத்து உயிருட்டம் தருபர்கள் உண்டு'' (தம்பிக்கு அண்ணாவின் கடிதங்கள், ஏழாம் பகுதி, ப. 10)

''கருணாநிதியின் பேச்சு கலைமுரசு, பொன்னம் பலனார் பேச்சு புகையும் எரிமலை. கண்ணதாசன் பேச்சில் காரம் கவிதை வடிவில் கிடைக்கிறது. ஆசைத்தம்பியின் பேச்சில் அழுத்தந் திருத்தம் அழகு பெறுகிறது. சீனுவாசன் பேச்சிலே சிந்து பைரவி கேட்கிறது.'' சம்பத்து பேசுகிறான், சம்மட்டி அடி என்கின்றனர் எதிரிகள் (தம்பிக்கு அண்ணாவின் கடிதங்கள், மூன்றாம் பகுதி, பக். 15. 16).

தமிழக மக்களின் நாவில் பயின்று வழங்கும் பழமொழிகளைக் கையாண்டு எழுதுவது மொழிநடைக்கு ஒரு வளத்தையும், வனப்பையும் சேர்க்கும். இவ்வகையில் அண்ணா தம் கடிதங்களில் மக்களின் நடைமுறை வாழ்விலும் அன்றாடப் பேச்சிலும் இயல்பாக இடம்பெறும் பழமொழிகள் பலவற்றை ஆங்காங்கு அழகுறக் கையாண்டுள்ளார். சில சான்றுகள் வருமாறு

''கீழே விழுந்தாலும் மீசையில் மண் ஒட்டவில்லை என்ற பழமொழி போலல்லவா இது இருக்கிறது, இடங்கள் அதிகம் கிடைக்காவிட்டாலும் ஓட்டுகள் ஏராளம் கிடைத்தன என்று 'விண்ணாரம்' பேசுவது என்று சிலர் கூறக்கூடும்''
(தம்பிக்கு அண்ணாவின் கடிதங்கள், ஐந்தாம் பகுதி,ப.40)

''நான் மட்டும் முயன்றால் முடிகிற காரியமா? ஆகவே தான் தம்பி, உன்னிடம் கூறுகிறேன்! தம்பி உடையான் படைக்கு அஞ்சான் அல்லவா!'' (தம்பிக்கு அண்ணாவின் கடிதங்கள், முதற்பகுதி, ப,256),

"மலையைக் கல்லி எலியைப் பிடித்தனர்! என்று நம்மைப் பற்றிக் கேவலமாகப் பேசுவோர் இருக்கத் தான் செய்கிறார்கள். நாடு என்றால், நல்லதும் கெட்டதும், நொந்ததும் வெந்ததும், பலபட இருக்கத் தானே செய்யும்" (தம்பிக்கு அண்ணாவின் கடிதங்கள், ஐந்தாம் பகுதி,ப.34).

இத்தகைய பழமொழிகளின் ஆட்சி, மக்களின் அன்றாட வாழ்வோடு அண்ணா எவ்வளவு நெருங்கிய தொடர்பினை வைத்துக் கொண்டிருந்தார் என்பதைப் புலப்படுத்துகின்றது.

## பேச்சு நடையும் இலக்கிய நடையும்

அறிஞர் அண்ணா, தம்பிக்கு எழுதும் கடிதங்களில் உணர்ச்சிக்கு முதன்மை தரும் பேச்சுத்தமிழ் நடையே பெரும்பாலும் காணப்படுகின்றது; எனினும், இலக்கியத் தமிழ் நடையைக் கையாண்டு எழுதிச் செல்லும் போக்கினையும் ஆங்காங்கே அவரிடம் காணமுடிகின்றது.

"ஐயா! சோறு! என்று ஏழை கேட்கிறான்.
என்ன செய்வது? எப்படி ஏழ்மையைத் தீர்ப்பது? ஆள வந்தார்களை எப்படிக் கேட்பது? என்று புரியாமல், திகைத்துப் போகும் காங்கிரஸ் தொண்டர்கள்,

ஐயா! சோறு! என்று கேட்கும் ஏழையிடம்,

இதோ! நேரு! பாரு! என்று காட்டிக் கொண்டிருக்கிறார்கள்" (தம்பிக்கு அண்ணாவின் கடிதங்கள், பத்தாம் பகுதி,பக். 25-26) என்னும் கடிதப் பகுதி அண்ணாவின் பேச்சுத் தமிழ் நடைக்குத் தக்கதோர் எடுத்துக்காட்டு ஆகும்.

"நறுக்கி எடுத்து, கொதிக்கும் நீரில் வேக வைத்து, அவை கூட்டியான பிறகே, பச்சைக் காய்கறி பண்டமாகிறது, உண்டு மகிழ.

மரண வாயிலில் போய்ப் போய் வந்த பிறகே, தாய், பிள்ளைப் பேறு காண்கிறாள்.

கீழ்மண் மேலாக உழுது கிளறிய பிறகே, போட்டது முளைக்கிறது.

கடைந்தால்தான் மோரிலிருந்து வெண்ணெய் கிடைக்கிறது.

விடுதலை மட்டும் என்ன, வாய்ப் பந்தலிட்டு, வார்த்தைக் கொடிபடரச் செய்து, பறித்தெடுத்திடும் காயோ இல்லை, தம்பி. இல்லை... கொய்தனர் தலையினை! கொளுத்தினர் உயிருடன்! இடித்தனர் மனைகளை! ஒடித்தனர் கரங்களை! பறித்தனர் கண்களை!—என்றெல்லாம் படிக்கிறோம், நாடு மீட்ட வீரர் நடத்திய கிளர்ச்சிக் கதைகளில்'' (தம்பிக்கு அண்ணாவின் கடிதங்கள், பத்தாம் பகுதி, ப. 163)

—இலக்கிய எழில் கொஞ்சும் அண்ணாவின் மொழி நடைக்கு இப்பகுதி தக்கதொரு சான்றாகும்.

ஒரு சில இடங்களில் அறிஞர் அண்ணா பேச்சு நடையையும் இலக்கிய நடையையும் விரவி எழுதிச் செல்வதும் உண்டு. ஓர் எடுத்துக்காட்டு:

''கொச்சையாகக் கூறுவதனால் தம்பி! பொதுமக்கள் இன்று 'எல்லாம் எமக்குத் தெரியும்! மற்ற எவருக்கும் எதுவும் தெரியாது' என்று இறுமாந்து பேசுபவர்களைப் பற்றி,

'பிடித்து வைத்தால் பிள்ளையார்! வழித்தெடுத்தால் சாணி! என்ற முறையிலே தான் கருதுகிறார்கள்.

இலக்கிய நடையில் இது கூறப்பட வேண்டுமா, தம்பி! 'பிடித்தால் கற்றை, விட்டால் கூளம்!

என்று 'மனோன்மணியம்' தெரிவித்திருப்பதைத் தருகிறேன்'' (தம்பிக்கு அண்ணாவின் கடிதங்கள், பத்தொன்பதாம் தொகுதி, ப. 17)

நாவலரின் பாராட்டு

"தமிழின்பத்தை எல்லா வகையிலும் சுவைக்க விரும்புவோர் இந்நூலைச் சுவைத்தாலே போதும். எல்லா வகையான இனிய சுவைகளும் இதனுள் பொதிந்து கிடக்கின்றன......... பொதுவாகக் காதலியிடமிருந்தும், நண்பர்களிடமிருந்தும், நெருங்கிய உறவினர்களிடமிருந்தும் வரும் முடங்கல்களைப் படிப்பதில் ஒருவன் எவ்வளவு ஆர்வமும், அக்கறையும், அக மகிழ்ச்சியும் காட்டுவானோ, அவ்வளவு ஆர்வமும், அக்கறையும் அக மகிழ்ச்சியும் அறிஞர் அண்ணா அவர்களின் கடிதங்களைப் படிப்பதிலும் ஒவ்வொருவரும் காட்டுவர். அவ்வளவு கவர்ச்சியும் அறிவுத் தெளிவும், ஆராய்ச்சித் திறனும் அறிஞர் அண்ணா அவர்களின் கடிதங்களில் காணப்பெறும். அறிஞர் அண்ணா அவர்களின் உயர்ந்த உள்ளத்தை எழுத்துக்களின் மூலம் எளிதில் கண்டறிய இந்நூல் பெரிதும் பயன்படும்" எனத் 'தம்பிக்கு அண்ணாவின் கடிதங்கள்' என்னும் தொகுப்பு நூலுக்கு எழுதிய முன்னுரையில் குறிப்பிடுவர் நாவலர் இரா. நெடுஞ்செழியன் ('முன்னுரை' தம்பிக்கு. அண்ணாவின் கடிதங்கள், முதற்பகுதி பக், 7-8). அவரது கூற்று உண்மை; வெறும் புகழ்ச்சி இல்லை. சுருங்கக் கூறின் 'தம்பி' என உரிமையோடும் உள்ளன்போடும் விளித்துத் 'திராவிட நாடு' 'காஞ்சி' இதழ்களில் அறிஞர் அண்ணா எழுதிய நூற்றுக்கணக்கான கடிதங்கள், அண்ணா அவர்களையும் அவர் உயிருக்கு உயிராய் நேசித்த இலட்சக்கணக்கான தம்பி மார்களையும் ஒருங்கிணைத்து, கலந்து உறவாடி மகிழ்வதற்கு வழி வகுத்தன எனலாம்.

# அண்ணாவின் சிறுகதை உத்திகள்

—மு. மணிவேல்

## முன்னுரை

அறிஞர் அண்ணா அவர்கள் அரசியல் நிலையில் நல்ல தலைவராகவும் நல்ல முதல்வராகவும் விளங்கியவர். தம் பேச்சுத்திறத்தாலும் எழுத்து ஆற்றலாலும் தம்மைப் பேரறிஞராகத் தெரியச் செய்தவர். அறிவாண்மை மிக்க அண்ணா அவர்களின் அரசியல் வாழ்க்கை வெளிப்படையானது. பேச்சுத்திறம் வியக்கவும் சிந்திக்கவும் வைத்தது அது பலராலும் பின்பற்றத் தக்கதாய் அமைந்தது. அவர்தம் எழுத்துக்கள் சமூக, அரசியல் நிலைபாடுகளைப் புலப்படுத்தும் வெளிப்பாடாய் அமைந்தன.

அண்ணா அரசியலால் அகில உலகத்தால் அறியப்பட்டவர்; எழுத்தால் தமிழ் உலகத்தால் தெரியப்பட்டவர். அவருடைய எழுத்துக்கும் கருத்துக்கும் தனிச் சிறப்புக்களும் மதிப்புக்களும் உண்டு. அரசியலில் கால் கொண்டவர்களில் ஒரு சிலரே எழுத்திலும், பேச்சிலும் சிறந்திருப்பதைத்தெரியமுடியும். அவருள் அண்ணா அவர்களுக்கே முதலிடம் எனக் கூறமுடியும்.

இக்கால இலக்கியப்படைப்பிற்கான இலக்கிய வரலாற்றுப் பக்கங்களில் பல பக்கங்கள் அண்ணா அவர்களுக்குரியனவாக அமையும், அவ்வகையில் அண்ணா சிறுகதைள் புதினங்கள் நாடகங்கள், கட்டுரைகள், கடிதங்கள் என்றிவ்வாறான இக்கால இலக்கியப் படைப்பு வகைகளிலெல்லாம் தம் பங்களிப்பைச் செய்து தம் ஆளுமையைக் காட்டியிருக்கிறார். அவர் தம் பேச்சுரைகளும் அச்சில் நூல்களாகி இலக்கிய மேன்மையுடையனவாக விளங்குகின்றன.

அண்ணாவின் அரசியல் வாழ்க்கையில் ஓர் இயக்கப் பின்னணி உண்டு பின்னாளில் அதில் வளர்ச்சியும் பயனும் அமைந்தது சமூக மேன்மை குறித்த எண்ணங்கள்; அரசியல் பின்புலம் மற்றும் அதில் மேன்மை கொள்ளல் ஆகியவற்றின் ஆக்கங்களாக அவர் தம் படைப்புக்களைக் காணமுடியும் சமூக அமைப்பு, சமூக நிகழ்வு சமூக நிகழ்வில் மனிதர்களின் வாழ்க்கை, அவ்வாழ்க்கையின் ஏற்றத்தாழ்வுகள், முரண்பாடுகள், சீர்-

கேடுகள் என்றிவற்றின் உள்ளடக்கங்களாக அண்ணாவின் படைப்புகள் பற்றிய சில ஆய்வுகள் நிகழ்ந்திருக்கின்றன அவற்றின் தொடர்ச்சியாக அண்ணாவின் சிறுகதைப் படைப்பில் அவர்தம் படைப்பாக்க உத்திகளை எடுத்துக்காட்டும் நோக்கில் இவ்வாய்வு மேற்கொள்ளப்பட்டுள்ளது.

*இலக்கியக் கூறுகள்*

இவ்வகையான இலக்கிய ஆக்கத்திலும் முக்கியமாக மூன்று கூறுகள் அமையும். அவை 1. உள்ளடக்கம் 2. உருவம், 3 உத்தி என்பன.

உள்ளடக்கம் (content) இலக்கிய வகைக்கேற்ப உரிப்பொருள் — அடிக்கருத்து — கரு— கருத்து என்றிவாறு கூறப்படும். இது படைப்பில் கூறப்படும் செய்தியைக் குறிப்பதாகும். செய்தி அல்லது கருத்து இன்றிப் படைப்பில்லை. இதுவே. படைப்பிலக்கியத்தின் முதல் முக்கிய கூறாகும்.

உருவம் (Structure) அல்லது வடிவம் (Form) என்பது படைப்பிலக்கியத்தின் இரண்டாவது முக்கியக் கூறாக அமையும். ஒவ்வொரு இலக்கிய வகையும் ஒவ்வொரு வடிவ அமைப்பினைப் பெற்று அமையும். தமிழ் இலக்கிய வரலாற்றில் தொடக்க காலம் முதல் இக்காலம் வரை படைக்கப்பட்டுள்ள இலக்கிய வகைகளை நோக்கிப் பார்த்து இவ்வுண்மையை உணரலாம். செய்யுள் இலக்கியங்கள் பல வடிவங்களில் — பல யாப்புக்களில் படைக்கப்பட்டுள்ளன. அவ்வாறே இக்கால, உரை (prose) வகையில் அமைந்த இலக்கிய வகைகளுக்கும் வேறு வேறான வடிவ இலக்கண அமைப்புக்கள் அமைகின்றன. வடிவத்தைப் பொறுத்தும் இலக்கிய வகைகளின் பெயர்களும் அமையும்.

உத்தி (Technique) என்பது இலக்கியப் படைப்பில் மூன்றாவதான, ஆனால் மிகவும் முக்கியமானதான கூறாக அமைவது. இது இலக்கியத்தைப் படைக்கும் முறை பற்றியது; படைப்பாளரின் புலமை அல்லது ஆளுமை தொடர்பானது. உத்திகள், படைப்பில் காணலாகும் அழகுகளான அலகுகள். உத்தி என்பது சிறுகதையின் கருத்தை எளிதில் படிப்போர்க்கு உணர்த்துவதோடு எழுத்தாளரின் திறனை அறியவும் உதவும். படைப்பாளர் தம் திறனுக்கேற்பப் பல்வகை உத்திகளைத் தம் படைப்-

புக்களில் பயன்படுத்துவர். உத்திகளைத் தம் படைப்பில் பயன்படுத்தும் வகையில் தான் ஒவ்வொரு படைப்பாசிரியரும் தம் தனித்த படைப்புத் தகுதியையும், சிறப்பையும் புலப்படுத்த முடியும். ஆதலின் இலக்கியப் படைப்பில் படைப்பாசிரியர் பயன்படுத்தும் உத்திகள்தாம் அவர்தம் ஆளுமையை வெளிப்படுத்துவனவாக அமையும்.

## உத்திகள்

ஒவ்வொரு இலக்கிய வகைக்கும் சில உத்திகள் பொதுவானதாகவும், சில தனித்தனியாகவும் அமையும். சிறுகதை மற்றும் புதினம் என்னும் கதை இலக்கியத்திற்கென சில உத்திகள் அமைதல் கருதத் தக்கன. அவற்றுள் கதைக்கான தலைப்பைத் தேர்தல், கதை மாந்தர்களைத் தேர்தல், கதை கூறும் முறை, கதைக்குத் தொடக்கமும் முடிவும் அமைத்தல், கதையில் திருப்பம் அமைத்தல் என்பன முக்கியமானவை, குறியீடாகக் கூறுதல், வர்ணனை செய்தல், உவமைப்படுத்திக் கூறுதல், உருவகமாகப் புலப்படுத்துதல், உரையாடல்களை அமைத்தல் போல்வன படைப்பாசிரியன் ஆளுமைக்கேற்ப அமையும்.

அண்ணா தம் சிறுகதைகளில் மேற்குறித்த பல உத்திகளைப் பயன்படுத்தியிருக்கிறார்! சில உத்திகளைப் பயன்படுத்தியிருக்கும் விதத்தில் தன் தனித்தன்மையை வெளிப்படுத்தியிருக்கிறார். அவை இங்கு எடுத்துக்காட்டத்தக்கன. அண்ணாவின் சிறுகதைகள் அனைத்தையும் எடுத்துக்காட்டி அவர்தம் படைப்பாக்க உத்திகளைப் புலப்படுத்துதலே முழுமையாகும். ஆயினும் சுருங்கக்கூறும் அளவில் அவர்தம் 'சொல்லாதது' 'காமக்குரங்கு' 'தீர்ப்பளியுங்கள், 'சுடுமூஞ்சி' 'அந்தரங்கம்' என்னும் ஐந்து சிறுகதைகளைச் சான்றுகளாக்கி அவருடைய சிறுகதைப் படைப்பு உத்திகள் இங்கு எடுத்துக்காட்டப்படுகின்றன. மேற்குறித்த ஐந்து சிறுகதைகளும்' 'அண்ணாவின் சிறுகதைகள்' எனும் ஒரு தொகுப்பில், திருச்சி, திராவிடப்பண்ணை வெளியீட்டில் இடம்பெற்றுள்ளன.

## கதைத் தலைப்புகள்

கதைக்குத் தலைப்பு என்பது உடலுக்கமைந்த தலை போன்றது; ஒரு பெரிய கோட்டையின் சிறிய வாயிலைப் போன்றது. ஆதலின் தலைப்பு முக்கியமானது. இத்தலைப்பினைத் தரும் நிலையில் ஒரு படைப்பாளர் தம் தனித்திறனைக் காட்ட-முடியும். கதைத் தலைப்புக்கள் பல வகையில் தேர்ந்து அமைக்கப்-படும். '.கதை மாந்தரைக்குறிக்கும் வகையில் அமைத்தல், 2. கதையில் வரும் பொருளைக் குறிக்கும் வகையில் அமைத்தல் 3. கதைக் கருவின் அடிப்படையில் அமைத்தல், 4 கதை நிகழ் பொழுது. நிகழிடம் அடிப்படையில் அமைத்தல், 5 நிகழ்ச்சி அடிப்படையில் அமைத்தல், 6. உருவகமாக அமைத்தல் என்றிவ்வாறான நிலையிில் சிறுகதைகளுக்கான தலைப்புக்கள் பெரும்பான்மையு அமையும்.

அண்ணாவின் சிறுகதைகளில் பெரும்பான்மை கதை மாந்தர்களைக் குறிக்கும் வகையில் தலைப்புக்கள் அமைதல் காணத்தக்கதாகும். ஏனெனில் அவர்தம் கதைகளில் பெரும்பான்; அமயும் மையப்படுத்தப்படுவன. கதைமாந்தர்கள் சமூக அமைப்பால் பல்வேறு நிலையிலான மனிதர்களின் வாழ்வியலை-யும், அவர்களின் குண இயல்புகளையும் புலப்படுத்துவனவாகவே அண்ணாவின் கதைகள் அமைகின்றன. கதைமாந்தர்களின் இயல்புகளாலான பெயர்களுள் 'காமக்குரங்கு' 'சுடுமூஞ்சி' என்றிவ்வாறு இரு சிறுகதைகளுக்குத் தலைப்புக்களாகத் தரப்-பட்டுள்ளன. 'காமக்குரங்கு' கதையில், ஐம்பது வயதான, மிராசுதார் மீனாட்சிசுந்தரின் மகள் மதுரவல்லியை மணப்பதும்அவளை மணந்த நாளில் சதிர்க் கச்சேரியில் பெண் வேடமிட்டு ஆட-வந்த சீதாபதி என்னும் ஆடவனை ஆடலழகியாகக் கருதிக் கூடவும், லீலைகள் புரியவும் விழைந்த விளைவு, அதனால் தான் புதிதாக மணந்தமனைவியை இழந்தது என்பதான கதைப்பின்னல் இடம் பெறுகின்றது. கதையின் இறுதியில் மிட்டாதாரின் குரங்குத் தனமான கிழக்காதலை மையமிட்ட வகையில் 'காமக்குரங்கு' என்ற நாடகம் ஊர்தோறும் நடத்தப்பெற்று வைரவிழாக் கண்டது என்றும் கூறப்படுகின்றது.

'சுடுமூஞ்சி' கதையில் இராமி என்னும் இளம்பெண் அரிசி மண்டிக் கடைக்காரரான ஆறுமுக முதலியார் 'என்னும் கிழவர் தான் விரும்பிய, மணம் முடிக்க நினைத்திருந்த ஏகாம்பரம் என்னும் இளைஞனை மணக்க முடியாமல் ஜாதகத்தைத் திருத்தத் செய்து ஏமாற்றித் தன்னை அவர் மணந்து கொண்டதாலும், 'வேதம்' என்னும் வேசிப் பெண்ணோடு அவர் கூடிக்களித்த தாலும் அவள் 'சுடுமூஞ்சி' ஆன கதை கூறப்படுகின்றது.

'தீர்ப்பளியுங்கள்' என்னும் கதைத் தலைப்பு, கதைப் பொருளோடு தொடர்பு கொண்டும் கதையின் முடிவை நோக்கியும் அமைந்ததாகும். குற்றவாளி இல்லாதவனைச் சாட்சிகள் குற்றவாளியாக்குகின்ற பொழுது, தீர்ப்புச் சொல்ல முடியாத மன உளைச்சலில் அவதிப்படும் நீதி தவறாத மஜிஸ்ட்ரேட் மருதவானம்பிள்ளை, அவர் கூறவேண்டிய தீர்ப்பை வாசகர்களே தேர்ந்து கொள்ள வேண்டும் என்ற நிலையில் இக்கதை முடிகிறது. 'நீதிதேவன் மயக்கம்' என்ற தலைப்பிலேயும் இக்கதை வெளியிடப்பட்டுள்ளது.

'அந்தரங்கம்' என்ற கதையில் அந்தரங்கமான தேவலோகத்தில் நிகழும் அந்தரங்கமான நிகழ்வுகளும் அவை பற்றிய கருத்துரைகளும் இடம்பெறுகின்றன. தேவர்கள், தேவமாதர்கள் முனிவர்கள், கடவுளர்கள் முதலானவர்கள் பற்றிய எதிரான, பகுத்தறிவான கருத்துடைய அண்ணா மேற்குறித்தவர்களின் வாழ்வியலை எள்ளலோடு விமர்சனம் செய்வதாக அக்கதையினைப்படைத்துள்ளார், தேவலோக வாழ்க்கை இன்பமயமானது என எண்ணியிருக்கும் பூலோக மக்களுக்குத் தேவலோகம் என்ற ஒன்று இருப்பின் அவ்வுலக வாழ்க்கை துன்பமயமானது என்பதைக் கூறும் கதை இது. தேவர்களால் ஆடவும் முனிவர்களோடு கூடவும் ஏவல் செய்யப்படுகின்ற தேவப் பெண்களாகிய மேனகை, ரம்பை, திலோத்தமை போன்றவர்கள் பூலோக வாழ்க்கையை விரும்புவதாகவும், அவ்வாழ்க்கை மேன்மையானதெனக் கூறுவதாகவும் கதைகூறப்பெற்றுள்ளது. அந்தரங்கமான அந்த அரங்கத்தின் அந்தரங்கங்களைக்கூறும் கதை 'அந்தரங்கம்' எனத்தலைப்புப் பெற்றுள்ளது. இதுகதை நிகழ்விடம் பற்றியும், கதைப் பொருள் பற்றியும் எனப்பல பொருளில் அமைந்த தலைப்பாகும்.

'சொல்லாதது' என்னும் கதைத்தலைப்பு சிறப்பாக விளக்கத்தக்கது, கதை கூறும் உத்தியினைத் தலைப்பாக அமைப்பது படைப்பில் அரிதாகக் காணப்படுவது. அண்ணா இக்கதையினைக் கூறும் முறைமையைத் தலைப்பாக்கித் தந்துள்ளார். கதைகள் கதைபடைக்கும் ஆசிரியர் அல்லது கதையில் வரும் கதைமாந்தர் அல்லது கதை மாந்தர்கள் கூற்றுக்களில் அமையும். கதையை, கதை நிகழ்வுகளை நேர் கூற்றாகக் கூறி அமைப்பதுதான் முறைமை. ஆனால் அண்ணா எதிர்க்கூற்றாக கதை மாந்தர்கள் பற்றியும், அவர்களின் மன உணர்வுகளைப் பற்றியும் அவர்தம் வாழ்க்கை நிகழ்வுகளைப் பற்றியும் 'சொல்லவில்லை' என்று சொல்லிச் சொல்லியே தர் கூற்றிலும் கதை மாந்தர் கூற்றிலும் இக்கதையினைப் படைக்கிறார். பதினைந்து பக்கங்களில் நீண்டதான இக்கதையில் 'சொல்லவில்லை' என்றசொல்லாட்சி முப்பதுக்கும் மேற்பட்ட இடங்களில் இடம் பெறுகின்றது. இச்சொல்லே கதை நிகழ்வுகளை இணைக்கின்றது.

கதைகூறும் முறையில் சிறந்ததான இக்கதையின் சில பகுதிகள் காட்டத்தக்கன :

''குட்டி பெரியவளானால் மகா ரூபியாக இருப்பாள், கண்களே போதும் ஆளை மயக்க...அந்த புன்சிரிப்பு இருக்கிறதே அதுபோல நான் கண்டதேஇல்லை. சுருண்டு, கருத்து அடர்ந்து, காற்றிலே அலையும் அவளுடைய கூந்தல் இருக்கிறதே அடடா என்ன நேர்த்தி, இலாவண்யம் என்று சுந்தரியின் பாலப்பருவ ரசிகர்கள் சொல்லவில்லையே தவிர, அவ்விதமும் அதற்கு மேலும் நினைக்காதவர்களே கிடையாது ''(அண்ணாவின் சிறுகதைகள், பக் 34),

''எனக்கு மட்டும் கொஞ்சம் சொத்து, ஒரு சொந்த வீடு இருந்துவிட்டால் என் தங்கத்துக்கு ஏற்றவனாக ஒருவனைத் தேடிப்பிடித்துக் கல்யாணம் செய்துவைக்க முடியும்..... ஆப்பக்காசியின் பெண்ணாயிற்றே. எந்தத் தடியனோ வெறியனோ, எவனோ ஒருவனுக்குத்தானே வாழ்க்கைப்பட்டாக வேண்டும் என்று தனபாக்கியம் சொல்லவில்லை. அவளுடைய கண்ணீர்... (அண்ணாவின் சிறுகதைகள் ப-4).

''அவள் ஆப்பக்காரிக்கா பிறக்கவேண்டும். அரசமரத்தை ஆறு வருஷம் சுற்றியும் பயனில்லாமல் அடுத்த தெருவிலே அழுது கொண்டிருக்கிறாளே தாசில்தாரின் சம்சாரம் தில்லை, அவள் வயிற்றிலே பிறந்திருக்கக்கூடாதா? நமது பையனுக்குக் கல்யாணம் செய்துகொள்ளலாமே என்று லோகு முதலில் சொல்லவில்லை. மனதிலே பலமுறை அவர் நினைத்தார்'' (அண்ணாவின் சிறுகதைகள், ப. 5)

''எனக்கு என்னமோ அப்பா அந்தக் கடைப்பக்கம் ஒரு நாளைக்கு ஒரு தடைவையாவது போய் வராவிட்டால் சந்தோஷம் உண்டாவதில்லை...தூக்கமே இருப்பதில்லை. தவறித் தூங்கினாலோ, கனவுதான். கனவிலே அந்தக் கிளிமொழியாள் பிரசன்னமாகிறாள் அப்பா ... சுந்தரிதான் எனக்கு வேண்டும் இல்லாவிட்டால் கல்யாணமே வேண்டாம். என்று கனகசபேசன் சொல்லவில்லை. தந்தையிடம் தனயன் இதுபோலப் பேசுவது தகுமா'' (அண்ணாவின் சிறுகதைகள், ப.5).

''என்னைத்தான் கலியாணம் செய்து கொள்ளப் போவதாகக் கூறுகிறான், என் காதில் படும்படி, என்று சொல்லவில்லை'' (அண்ணாவின் சிறுகதைகள் ப.6)

மேற்கண்டவாறு கதை நிகழ்வுகள் முழுமையும் கதையில் இடம்பெறும் கதைமாந்தர்களின் எண்ணங்களாக, மனக்கூற்றுக் களாகக் கூறப்படும் வகையில் 'சொல்லாதது' என்னும் இக் கதையினை அண்ணா படைத்திருக்கிறார். இக்கதை 'தாய் மகளுக்குக் கட்டிய தாலி' என்ற திரைப்படமாக ஆக்கப்பட்டது என்பதும் குறிப்பிடத்தக்கது.

### கதை மாந்தர்படைப்பு

கதைக்குக் கதைமாந்தர் தேர்வும் மிக முக்கியமானதாகும். கதைமாந்தரைக் கதாசிரியர் படைப்பவர் என்றாலும், அப் படைப்பில் செயற்கை இல்லாத இயல்பான தன்மை இருக்க வேண்டும், கதைப் பொருளுக்கும் கதைமாந்தருக்கும் ஒருங்கி- ணைவு இருக்கவேண்டும், கதை நடப்பியலானதாக இருப்பினும் அதன் கதைமாந்தர்களின் பெயர்களைமாற்றித்தருவதும், மாற்றி யிருப்பதாகக் கூறுவதும் மரபு. ஆயினும் கதைமாந்தர்கள் கதைக்கு இயல்பானவர்களாக இருத்தலைப் படிப்பாளர் உணரும்படியாகப் படைத்தல் படைப்பாளரின் ஆளுமைச்சிறப்பை வெளிக்காட்டும்.

கதை மாந்தரின் பெயர்கள்கூட இயல்பாக அமைந்தது போல இருக்கவேண்டும். ஆயின் அண்ணாவின் பல கதைமாந்தர் களின் பெயர்கள் இங்ஙனம் அமையவில்லை அண்ணா தம் பல கதைமாந்தர்களின் பெயர்களை வெறும் பெயர்களாக மட்டுமன்றி அவர்களின் தகுதிப்பாடு, தொழில், ஊர், இனம் என்பவற்றைத் தெரிவிக்கும் வகையில் முன்னொட்டுக்களையும் பின்னொட்டுக் களையும் சேர்த்துக் குறிப்பிடுகிறார் சில கதைமாந்தர்களின் பெயர்கள் காட்டத்தக்கன.

மாஜிஸ்ட்ரேட் மருதவாணம் பிள்ளை (தீர்ப்பளியுங்கள்
மிராசுதார் மீனாட்சிசுந்தரர் (காமக்குரங்கு)
அரிசிமண்டி ஆறுமுக முதலியார் (சுடுமூஞ்சி)
மாகாளிபட்டி மகாலிங்க ஐயர் (காமக்குரங்கு)
தோட்டக்காரன் துரைசாமி (தீர்ப்பளியுங்கள்)
தோட்டக்காரன் வரதன் (தீர்ப்பளியுங்கள்)
மாகாளிபட்டி மிட்டாதார் மகிபாலர் (காமக்குரங்கு)

மேற்குறித்த கதை மாந்தர்களின் பெயர்களில் அமைந்த முன்னொட்டுக்கள், இயற்பெயர்களுக்கேற்றவாறு மோனையும் எதுகையும் பெற்று அமைந்தனவாகத் தோன்றுதல் அறியத்தக்க தாகும். இங்ஙனம் அமைந்த பெயர்கள் அண்ணாவின் கதை களில் இடம்பெற்றிருத்தல் கதையின் நடப்பியல் தன்மையை கதைமாந்தர்களின் இயல்பான தன்மை ஆகியவற்றிற்கு எதி ரான உணர்வையே வாசகர்களுக்கு ஏற்படுத்தும். இங்ஙனம் அமைந்த கதைமாந்தர்களின் பெயர்கள் அண்ணாவின் பேச்சுத் தன்மையில் அமைந்தன எனக் கருதலாம். ஏனெனில் எதுகை மோனையோடு கூடிய அடுக்கு மொழிகளில் பேசுவது அண்ணா விற்கு இயல்பானது.

'காமக்குரங்கு' என்னும் கதையில் காணலாகும் பெரும் பான்மையான கதைமாந்தர்களின் பெயர்கள் 'மகர' எழுத்துவரிசையில் தொடக்கம் கொள்வனவாக அமைந்திருத்தல் சுட்டிக்காட்டத் தக்கதாகும். மதுரவல்லி, மகிபாலர், மலர்க்கொடி, மகாலிங்க ஐயர், மீனாட்சிசுந்தரர் என்பன அக்கதையில் வரும் கதைமாந் தர்களின் பெயர்கள். இங்ஙனம் ஓர் அகரவரிசையில் அமைந்த

பெயர்களை ஒரு கதையில் வரும் கதைமாந்தர்களுக்கு அமைத்தல் வேண்டும் என்பது அண்ணாவின் திட்டம் அல்லது கருத்தாகக்கூட இருந்திருக்கவேண்டும்.

அண்ணா தாம் படைத்துள்ள கதைகளில் பலகதைமாந்தர்களின் பெயர்களை, அவை முதன்முதலில் முழுமையாகவும், பின்னர் சுருக்கியும் கூறுதல் காட்டத்தக்கது.

கனகசபேசன்—கனகன், கனகு (சொல்லாதது)
மருதவாணர் —மருது (தீர்ப்பளியுங்கள்)
திலோத்தமை—திலோ (அந்தரங்கம்)
தங்கராசன் —தங்கம் சொல்லாதது)

பெயர்களின் முதல் எழுத்துக்களைக் (Initials) கூறுவது போலக் கதைமாந்தர்களின் பெயர்களைச் சுருக்கி அமைத்தல் அண்ணாவின் படைப்புக்கூறுகளில் தனித்தன்மையுடைய ஒரு கூறாகக் காணலாம்.

கதைமாந்தர்கள் இயற்பெயர்களாலன்றி அவர்களின் பண்புகள்—குண இயல்புகள்—செயற்பாடுகள் ஆகியவற்றைக் குறித்த காரண காரியப் பெயர்களாலும் அண்ணாவின் கதைகளில் குறிக்கப்படுகின்றன. இப்பெயர்கள் கதைகளில் வரும் கதைமாந்தர்கள். பிற கதைமாந்தர்களைக் குறித்துக் கூறும் பெயர்களாக அமைகின்றன. காமக்குரங்கு, கிழக்குரங்கு, சுடுமுஞ்சி, பணம்பிடுங்கி, தின்னுகூலி, சோம்பேரி, அல்லி(தர்பார்) எனக் கூறப்படுவன காட்டத்தக்கன.

ஏழை ஆப்பக்காரியைத் 'தனபாக்கியவதி' என்றும் வேசிப் பெண்ணை 'வேதம்' என்றும், உதவும் நல்லியல்பு கொண்ட கதைமாந்தரை 'அருமைநாயகம்' என்னும் அமைத்திருத்தலும் குறிப்பிடத்தக்கதாகும். வயதாகியும் காமக்களிப்பில் குரங்காக விளங்கும் மிட்டாதார்க்கு 'மகிபாலர்'' எனப்பெயர் தந்திருப்பதும் சுட்டத்தக்கது. தீர்ப்பளியுங்கள் என்னும் கதையில் கதைகூறும் கதைமாந்தராக வரும் கதைமாந்தரின் பெயர் குறிக்கபடா-

மலேயே மாஜிஸ்ட்ரேட் மருதவாணரின் நண்பர் என்றே கூறப்படுகின்றது. கதையின் முடிவைக் கருத்தில் கொண்டு நோக்குகையில், நண்பராகப் படைக்கப்பட்டிருப்பவர் அண்ணாவாகவே இருக்கலாம் எனக்கருதலாம்.

மேற்குறித்தவாறு கதைமாந்தர்களின் பெயர்களை அண்ணா தம் கதைகளில் அமைத்துக் கொண்டாலும், அப்பெயர்களுக்குரியவர்கள் அனைவரும் கதைகளின் பொருண்மைகளுக்கேற்பத் தேர்ந்து கொள்ளப்பட்டவர்கள் எனத் தெரியலாம். முதலியார், பிள்ளை என்றிவ்வாறு குறிக்கப்படுகின்றவர்கள், மிராசுதார்களாகவும், மிட்டாதார்களாகவும், வசதியும் வாய்ப்பும் உடையவர்களாகவும், மனம்போன போக்கில் காமக்களிக்குரியவர்களாகவும் அண்ணாவின் கதைகளில் காட்டப்படுகின்றனர்.

## கதைத் தொடக்கம்

நல்ல தொடக்கம் கதைக்கு இன்றியமையாததாகும். கதையின் தொடக்கம் படிப்போரின் ஆர்வத்தைத் தூண்டுவதாக அமைதல் வேண்டும். கதையின் தொடக்கத்தை வைத்தே கதையோட்டத்தையும் கதைமுடிவையும் அறிந்துகொள்ள முடியும்.

கதைகளில் தொடக்கம் பலவகையில் அமையும். வருணனைத் தொடக்கம் நிகழ்ச்சித் தொடக்கம், கதைமாந்தர் அறிமுகத் தொடக்கம் என்பன சில. அண்ணாவின் கதைகளில் பெரும்பான்மையான தொடக்கங்கள் கதைமாந்தர்களை அறிமுகம் செய்வதாகவே அமைகின்றன.

''அவளுக்கு சுந்தரி என்ற பெயர் காரணப் பெயராகவே அமைந்தது என்று எந்த இலக்கணப் புலவரும் சொல்லவில்லை. சொல்வானேன், மலரை எடுத்துக்கொண்டு, ஆஹா என்ன மணம்? எவ்வளவு இன்பம் என்று சொல்லாமலே எவ்வளவு பேர் முகந்து ரசிக்கவில்லையா?'' (சொல்லாதது).

''என் நண்பர் மாஜிஸ்ட்ரேட் மருதவாணம் பிள்ளை கோர்ட்டில் மட்டுந்தான் கோபமாகக் காணப்படுவார். அதைக்கூட அவர்

கோபமென்று ஒப்புக்கொள்வதில்லை. நீதியின் உருவம் என்று கூறுவார். 'என்னமோ மருது, நீதி இப்படி மிரட்டும் உருவிலே இருப்பது எனக்குப் பிடிப்பதில்லை' என்று நான் கூறுவதுண்டு கோர்ட்டு நேரத்தில் அல்ல....'' (தீர்ப்பளியுங்கள்).

மேற்குறித்தவற்றில் முக்கிய கதைமாந்தர்களின் அறிமுகம் அமைகின்றது. அழகான சுந்தரி, நீதியின் உருவமான மாஜிஸ்ட்ரேட் என்று அறிமுகம் செய்யும் தொடக்கம் பின்கதைக்கும் முடிவுக்கும் ஏற்றதானதாக அமைதல் தெரியலாம்.

'சுடுமூஞ்சி' என்னும் கதையில், அரிசிமண்டி ஆறுமுகம் முதலியார் பற்றி அக்கதையில் வரும் பலகதைமாந்தர்களும் தாம் உணர்ந்தனவற்றை அவர்கள் அமைத்துக் கதைமாந்தரை, மாந்தர்களை அறிமுகம் செய்யும் தொடக்கம் அமைகின்றது:

''சனியன் என்ன இன்னும் தொலைவதாகக் காணோம். மணி ஆறாகப் போகிறதே' —கணக்கப்பிள்ளை.

''சீக்கிரம் சீக்கிரமாகக் கட்டி முடியம்மா மாலையை, மணி ஆறாகப் போகிறது. அந்த உருத்திராட்சப் பூனை வருகிறநேரமாகுது.
—மாலை விற்பவன்.

''ஒரு நாள்கூடத் தவறமாட்டார். பெரிய பக்திமானல்லவோ அவர்! மணி இன்னும் ஆறு ஆகவில்லையே, வந்து விடுவார்''
—குருக்கள்.

''நாளைக்குப் பார்த்துக்கொள்வோம் தானம் சரியாக வருகிறதான்னு, மணி ஆறு ஆகப்போகுது. அந்தக் கிழக்குரங்கு வருகிற நேரமாகுது''—வேதம்.

''மணி ஆறா? சரிதான், இப்பத்தான் பைத்தியம் கோவிலுக்குக் கிளம்பி இருக்கும்''—இராமி.

நாடகத் தன்மை அமைந்த இத்தொடக்கத்தில், கதையின் மைய மாந்தர் ஒருவரைப் பற்றி, மாலை ஆறு மணியிலான

அவாது புறப்பாட்டில் சனியன், உருத்திராட்சப் பூனை, பத்தி-மான், கிழக்குரங்கு, பைத்தியம் என்று அவரை அர்ச்சித்தல் தெரியலாம்.

கதையில் கூறப்போகும் அல்லது விவாதிக்கும் செய்தியை மையமிட்டதாக 'அந்தரங்கம்' கதையின் தொடக்கம் அமை-கின்றது.

"என்ன பிழைப்படி இது, என்ன பிழைப்பு! எழிலும் இள-மையும் இருந்தென்ன, ஆடல் பாடல் அறிந்தென்ன! அடிமை வாழ்வுதானே —செச்சே! என்னென்ன இழி செயலுக்கு உடன்பட வேண்டி இருக்கிறது. உடன்படுவதா? துரத்தப்படுகிறோம்! இந்தக் கேவலமான நிலைமையைப் பெறவாதவமாய் தவமிருந்து தேவமாதரானோம். எனக்கு வர வர, ரம்பா! இந்த விண்ணுலக வாழ்வு வேம்பாகி வருகிறதடி' என்று திலோத்தமை கூறினாள்-கண்களில் நீர் துளிர்த்தது" (அந்தரங்கம்).

'காமக்குரங்கு' என்னும் கதை குறையீட்டு நிலையில் அமைந்தது. அக்குறியீடான செய்தி பற்றிய விவரிப்பு அக்கதை-யின் தொடக்கமாக அமைகிறது.

அண்ணாவின் கதைத் தொடக்கங்கள் பெரும்பான்மையும் கதைமாந்தர் கூற்றில் தொடக்கம் பெறுகின்றமையும் அறியத்-தக்கது.

கதை முடிவு

கதை முடிவே கதையை நிறைவு செய்வது. கதை படைக்கப் பட்டதன் பயன் கதையின் முடிவில்தான் பெறப்படும். 'கதையின் முடிவானது கதையில் எடுத்தாளப்பட்ட சிக்கலைப் பற்றியோ, கதைமாந்தர் பண்புகளைப் பற்றியோ, கதைப் பொருளைப் பற்றியோ, எழுப்பிய உணர்வுகள் பற்றியோ, மேன்மேலும் சிந்திக்கத் தூண்டுவதாய் அமைந்தால் சிறப்பானது. அதனால் தான் மனதில் நிற்கும் முடிவு ஒரு நல்ல சிறுகதையின் அங்கம்' என அறிஞர் சு. வேங்கடராமன் குறிப்பிடுவது (அகிலன் சிறு கதை ஒரு திறனாய்வு, ப. 160) கதை முடிவுகளை ஆய்ந்துகாண உதவும்.

கதையின் முடிவு கதைக்கான தீர்வோடும், தீர்வின்றியும் அமைதல் கூடும். அந்நிலையில் கதை முடிவு பெறாத உணர்வு படிப்போர்க்கு உண்டாகும். 'அண்ணாவின் தீர்ப்பளியுங்கள்' என்னும் கதை இங்ஙனம் அமைந்ததாகும். அக்கதையில் ஒரு வழக்கில் தீர்ப்புக் கூறவேண்டிய நீதிபதியின் தீர்ப்புக் கூறப்பட வில்லை. வாசகர்களின் தீர்ப்பே கதையின் முடிவாகக் கொள்ளத் தக்கது என்ற அளவில் கதை முடிக்கப்படுகின்றது.

''பொதுவாகவே, ஏழைகள் செய்யுங் குற்றங்களுக்குக் காரணம் அவர்களின் ஏழ்மை; ஆகவே தண்டிக்கப்பட வேண்டியது ஆட்களல்ல, பொருளாதார பேத அமைப்பு முறை. இது என் தீர்ப்பு ஆனால் மாஜி ட்ரேட் மருதவாணம் பிள்ளை சட்டப்படி இந்த மகாலிங்கம் வழக்கிலே என்ன தீர்ப்பு அளிப்பது எனக் கேட்கிறார். சொல்லுங்கள் பார்ப்போம்'' (அண்ணாவின் சிறு-கதைகள், ப. 55) என்பது இக்கதையின் முடிவு.

அண்ணாவின் சிறுகதைகளில் முடிவுகளுக்குப் பின்னும் புறனடை போலவும் பின்னிணைப்புப் போலவும் கதைகள் தொடர்புபட்ட செய்திகள் இடம் பெறுதல் சுட்டிக் காட்டத் தக்கது. 'காமக்குரங்கு' என்னும் கதையில். முடிவுக்குக் பின் பின்வரும் பகுதி தனித்துக் காட்டப்படுகின்றது.

''மதுர மனோரஞ்சித சபையின் பிரதம நடிகராகச் சீதா-பதி புகழ்பெற்றார். 'தெரியுமோ விஷயம்! சீதாபதிக்கு, வரப்-பிரசாதம் மதுரவல்லித்தாயார் கடாட்சத்தால் கிடைத்தது? என்று ஊரிலே பலர் வம்பு பேசினர். அதாவது, சீதபதி என்ற நடி-கனுக்கும் மிராசுதாரர் மகள் மதுரவல்லிக்கும் தொடர்பு என்று வம்பளப்பு! அதனுடைய உண்மை யாருக்குத் தெரியுமோ! மதுர-வல்லி மட்டும், கடைசிவரை மிட்டாதாரர் மாளிகைக்குப் போக மறுத்துவிட்டாள்! மதுர மனோரஞ்சித சபை நாடகங்களுக்குப் போவதற்கும் தவறுவதில்லை! அந்தக் கம்பெனியார், 'காமக் குரங்கு' என்ற நாடகத்தை எந்த ஊரிலே நடத்தும்போது மதுர-வல்லியைக் காணலாம். அந்த நாடகத்தை நடத்தாமலிருக்கச் செய்ய மாகாளிப்பட்டி மிட்டாதாரர் எவ்வளவோ முயன்றார்' முடியவில்லை என்றும் ஊரிலே வதந்தி. ஆனால் அந்த நாடகம்

தான் அக்கம்பெனியின் முதல்தர நாடகம், வைரவிழா நாடகம்! அவ்வளவு ஆதரவு அதற்கு'' (அண்ணாவின் சிறுகதைகள், ப- 17)

இருபத்தைந்து பக்கங்களில் இக்கதையினைக் கூறி முடித்த பின், சிறுகதை என்ற அளவில் நிறுத்தம் தந்து, அக்கதையின்பின் நீட்சியையும் அக்கதைமாந்தர்களின் பின் விளைவுகளையும் விவரிக்காது சுருக்கமாக எழுதியிருக்கிறார் அண்ணா.

'சொல்லாதது' கதையின் முடிவுப் பகுதி நாடக அமைப்பில், கதைமாந்தர்களின் உரையாடல்கள் இடம்பெறுவது போல அமைந்து காணப்படுகின்றது :

சுந்தரி :- ஐயோ! பாவம்! என்னாலே உங்களுக்கு இத்தனை கஷ்டம்.

(அறைக்கு வெளியே சிறுவன்)

தங்கம் :- அப்பா! தண்ணீர்.

(அறைக்குள்ளே சுந்தரி)

சுந்தரி :- விடுங்கள், வந்துவிடுவான்

(உள்ளே நுழைந்த சிறுவன்)

தங்கம் :- அப்பா வலி போயிடுத்து?

சுந்தரி :- ஓ! கிலியும் போயிடுத்து.

(அண்ணாவின் சிறுகதைகள், பக். 16—17)

அண்ணாவின் பல சிறுகதைகளில் முடிவுகளில்தான் கதையின் உச்சமும் திருப்பமும் அமைகின்றன. 'காமக்குரங்கு' 'அந்தரங்கம்' 'சுடுமூஞ்சி' ஆகிய கதைகளில் இத்தன்மையினைக் காட்டலாம்.

தேவர்களால் ஆட்படுத்தப்படும் திலோத்தமை, ரம்பை, மேனகை ஆகியோர் தேவர்களுக்கு எதிராகப் புரட்சி செய்துவிட்டுப் பூலோகம் செல்லவேண்டும் எனத் தம்மைத் தயார்ப்-

படுத்தும் மனநிலையில் இருக்கையில் அவர்கள், தமக்கு அமைந்த வழக்கமான வாழ்க்கைக்கு அடிமைப்பட்டவர்கள் போல ஆதல் ,அந்தரங்கம்' கதையின் முடிவில் அமைகின்றது.

''கலகலவென மணியோசை கேட்டது'' மூவரும் திடுக்கிட்டுப் போயினர்.

''இந்திர சபையில் என் நடனம்'' என்று கூறிக்கொண்டு எழுந்தாள் திலோத்தமை.

''சந்திரனுடைய வெப்பத்தைத் தணிக்க இன்று நான் தொண்டு செய்ய வேண்டும்'' என்று கூறினாள் ரம்பை,

''நீ ?'' என்று இருவரும் மேனகையைக் கேட்டனர்,

''நானா ? இன்று யமனிடம் செல்கிறேன் என்று கூறிவிட்டு ச் சிரித்தாள்.

என்ற கதையின் இறுதிப்பகுதி, மேற்குறித்த செய்தியினை விளக்கக் காணலாம்.

குறியீடு

பழந்தமிழ் இலக்கியத்தில் உள்ளுறை, இறைச்சி போன்ற குறிப்புப் பொருள்கள் இடம் பெறுவது போல இக்கால இலக்கியத்தில் குறியீடுகள், படிமங்கள் இடம் பெறுகின்றன, குறியீடுகள் பெரும்பான்மையும் கதை இலக்கியத்தில் இடம் பெறும். குறியீடு கதைப் பொருளை—கதைக்கருவை, கதைமாந்தரை விளக்கம் செய்யும் வகையில் அமையும். சிறந்த படைப்பாசிரியர்களின் கதைகளில் குறியீடுகள் இடம்பெறக் காணலாம்.

அண்ணாவின் சிறுகதைகளில் குறியீடுகள் அமைந்திருக்கின்றன. 'காமக்குரங்கு' என்னும் கதை முழுமையும் குறியீட்டால் எடுத்துச் சொல்லப்பட்டுள்ளது. இக்கதையில் குறியீடான பகுதி, ஒரு தனிக்கதை அல்லது துணைக் கதை போல அமை-

கின்றது. தலைமைக் கதையையும், கதை நிகழ்வையும், கதை மாந்தரையும் உணர்த்தும் வகையில் குறியீடாக அமையும் கதை விளங்குகின்றது.

இக்கதையில் மிராசுதார் மீனாட்சி சுந்தரர் அவருடைய இருபது வயதுடைய மகள் மதுரவல்லியை ஐம்பது வயதுடைய மாகாளிபட்டி மிட்டாதாரர் மகிபாலருக்கு மணம் செது வைக்-கிறார். மதுரவல்லிக்கு, விருப்பம் இல்லையெனினும் அம்மணத்-தினை மறுக்க மனவுறுதி இல்லை. பொருத்தமில்லாத மணம்' பொருந்தாத மனம். மிட்டாதாரர், மதுரவல்லியை மணம் முடித்த நாளின் மகிழ்ச்சிக்கு ஏற்பாடு செய்திருந்த சதிர்க்கச் சேரியில் ஆடவந்த 'ஆடலழகி'யோடு (பெண்வேடத்தில் ஆடவந்த ஆடவன் அவன்) கூடிக்களிக்க முயற்சிக்கிறார். அதிலிருந்து த்பிந்த அபறவேரடு (ஆடவனோடு) மதுரவல்லிக்கு நட்பு-ஏற்படுகிறது. பின்னர் மதுரவல்லி, மிட்டாதாரை நீங்கி, மேற், குறித்த சீதாபதி என்னும் 'ஆடலழகி' யோடு சேர்வதாகக் கதை அமைகின்றது. இக்கதை நிகழ்வுகளைக் குறிக்கும் வகையில் கதையின் தொடக்கத்திலிருந்து மிராசுதாரரின் புதிய குதிரையும் பழைய வண்டியும் பற்றிய செய்திகள் இடம் பெறுகின்றன. புதிய குதிரை, மிராசுதாரரின் மகள் இளையவளான மதுரவல்லியையும்,பழைய வண்டி-மதுரவல்லியை மணந்த வயதான மிட்டாதாரரையும் குறிப்பனவாக அமைகின்றன. கதையின் முடிவுப்ப-குதியில் புதிய குதிரை மதுரவல்லி, பழைய வண்டி மிட்டாதாரர் என்று வெளிப்படையாகவும் கூறப்படுகின்றது.

புதிய குதிரைக்கும், பழைய வண்டிக்கும் பொருத்தமின்மையைக் கூறும் நிலையில் மதுரவல்லிக்கும் மிட்டாதாருக்கும் பொருத்தமின்மை கதையில் உணர்த்தப்படுகின்றது. இதனை விளக்கும் சில பகுதிகள் காட்டத்தக்கன.

''முதல் தரமான குதிரை; கால் சுத்தமாக இருக்கிறது... முகத்திலே களையும் இருக்கிறது. குதிரை சிலாக்கியமானது தான். ஆனால் வண்டி மட்டும் ஏற்றதல்ல. குதிரையின் போக்கைச் சமாளிக்குக் சக்தி இல்லை வண்டிக்கு .. வேறே வண்டியாக மட்டும் இருந்தால் ஜோர்தான்'' (அண்ணாவின் சிறுகதைகள், ப. 19.)

''ஊர் முழுவதும் இதே போலத்தான் பேசிற்று. வண்டி பழையது, குதிரை புதியது, குதிரைக்கேற்ற வண்டியல்ல என்று''

''என் அருமை பெருமைகளைக் கண்டு புகழ்கிறீர். வண்டி எனக்கேற்றதல்லவே என்றும் சொல்கிறீர், சொல்லியும் அதி-லேயே என்னைப் பூட்டி ஓட்டுகிறீரே இது முறையா? என்று எப்படிக் கூறும்? இது குதிரை கூறுவதாக அமைந்தது (அண்ணாவின் சிறுகதைகள் ப. 20.)

பழைய வண்டியில் புதிய குதிரையைப்பூட்டி ஓட்டுகின்ற போது எதுவோ ஒரு மாடு மிரண்டு ஓடிவரக் குதிரை காலைக் கிளப்பியடிக்க, வண்டி மரத்தில் மோதித்தூள் தூளாகிப் போகிறது. கதையின் பிற்பகுதியில் ஸ்ரீபார்ட்காரன் மிட்டாதாரருக்குப்பயந்து மதுரவல்லியிடம் வந்துசேர, மிட்டாதாரர்க்கும் மதுரவல்லிக்கும் ஏற்படுத்தப்பட்ட மணவாழ்க்கை உறவு சிதைந்து போவது காட்டப்படுவது மேற்குறித்ததோடு ஒப்புநோக்கத்தக்கது.

கதையின் இடையில், இங்ஙனம் பொருத்தமில்லாத நிலையில் ஏற்படுத்தப்படும் மணவாழ்க்கையை எதிர்க்க வேண்டும் என்ற கருத்தை அண்ணா குறிப்பிட்டாலும்,அத்தகைய திருமணங்களும் நடக்கத்தான் செய்கின்றன; 'விதி' என்றே மக்கள் அதனை விட்டுவிடுகின்றனர் என்கிறார்.

''குதிரைக்குத்தான் கூறிடும் திறமை இல்லை; குமரிகளுக்கு வாயிருந்தும் தமக்குக் கிடைக்கும் வாழ்க்கை வண்டிகளின் வக்கி-ரத்தை எடுத்துக்கூறி, வேண்டாம் என்று கூறமுடிகிறதா? குதிரையை இழுத்து வண்டியிலே பூட்டுவதைப் போலத்தான் குமரிகளையும் பிணைத்து விடுகிறார்கள். வாழ்க்கைச் சவாரியும் நடந்து கொண்டுதான் இருக்கிறது. விபத்துக்கள் நேரிடும்போது இருக்கவே இருக்கிறது 'விதி' என்ற வெட்டிப்பேச்சு'' (அண்ணாவின் சிறுகதைகள், பக் 20—21).

இங்ஙனம் இக்கதை முழுவதிலும் மிராசுதார் மகிபாலர் என்ற கிழவருக்கும், மதுரவல்லி என்ற இளநங்கைக்கும் ஏற்-படுத்தப்பட்ட மணவாழ்க்கையைப் பழையவண்டி—புதிய குதிரை

என்பவற்றின் இணைநிலைக் குறியீட்டில் விளக்கியிருக்கிறார் அண்ணா.

அண்ணா தம் சிறுகதைகளில் சில நிகழ்ச்சிகளை நிகழ்வுகளை வெளிப்படையாகத் தெரிவிக்காமல் மறை பொருளாகக் குறிப்புலப்படுத்தவும் செய்கிறார்.

'சுடுமூஞ்சி' சிறுகதையில் அரிசிமண்டி ஆறுமுகம் முதலியார் 'வேதம் என்னும் வேசியோடு கூடிக் களித்தது, 'வேதம் படித்ததாகக் கூறப்படுகின்றது. 'சொல்லாதது' என்ற கதையில் கனகசபேசன் அவனுடைய மனைவி காவேரியுடன் வாழ்ந்து கூடியிருந்தது கனகசபேசன் காவேரியிலே ஸ்நானம் செய்ததாகக் கூறப்படுகின்றது.

கதைப்பின்னல்

அண்ணாவின் சிறுகதைகளில் அமைந்த கதைப்பின்னல்கள் இயல்பானவை - சிக்கல் இல்லாதவை. கதைகளில் கதை நிகழ்ச்சிகள் நடக்கும் வரிசை நிலையில் கூறப்படுகின்றன. முன் பின் நிகழ்வுகளைப் பின்னோக்கு உத்தியில் கூறும் முறை இல்லை. ஆதலின் மரபுவழிப்பட்ட நிலையிலேயே கதைகள் கூறப்படுகின்றன.

அண்ணாவின் சிறுகதைகளில் பெரும்பான்மை, கதைமாந்தர் கூற்றில், அவர்தம் உரையாடல்களில் அமைகின்றன. ஆசிரியர் கூற்று என்று ஆங்காங்கே அமையும். 'தீர்ப்பளியுங்கள்' கதை மாஜிஸ்ட்ரேட், அவரது நண்பர் ஆகிய இருவரின் கூற்றில் கூறப்பட்டுள்ளது. 'அந்தரங்கம்' என்ற கதை திலோத்தமை, ரம்பா, ஊர்வசி ஆகியமூவரின் விவாத உரையாடலில் அமைகின்றது. அண்ணாவின் சிறுகதைகள் சிலவற்றில் சில இடங்களில் நாடகக் கூற்று அமைப்பு காணப்படுகின்றது. 'சொல்லாதது' கதையின் முடிவுப் பகுதி, 'சுடுமூஞ்சி' கதையின் தொடக்கப்பகுதி இங்ஙனம் அமைகின்றன.

*வர்ணனை*

இலக்கியப் படைப்பாக்கத்தில் வர்ணனை செய்வதும், இடம் பெறுவதும் காணக்ககிறது. வர்ணனை இலக்கியப் படைப்பிற்கு அழகு சேர்க்கும்; இலக்கியத்தைப் படிக்கும் தன்மையை ஏற்படுத்தும் பாட்டிலக்கியத்திற்கும், உரைநடை (Prose) போன்ற கதை இலக்கியத்திற்கும் வர்ணனை பொதுவானதாகும். வர்ணனை செய்யும் நிலையிலும் ஒரு படைப்பாசிரியர் தம் தனித் தன்மையைப் புலப்படுத்தக்கூடும்.

அண்ணாவின் சிறுகதைகளில் வர்ணனைகள் மிகுதியாக இடம் பெறுகின்றன. சிறுகதைகளில் வர்ணனைகள் அதிகமாக இடம் பெறுபெறுகின்ற பொழுது அக்கதைகள் நீண்ட நெடுங்கதைகளாகக்கூட அமையும். ஆனாலும், சிறுகதைப் படைப்பில் வர்ணனை இன்றியமையாததாகும்.

கதைகளில் கதைமாந்தர்களைப் பற்றிய—அவர்தம் தோற்றம் அழகு. குண இயல்பு. செயல்பாடு போன்றவை பற்றிய வர்ணனைகள் அதிகமாக இடம் பெறக்காணலாம். கதை நடைபெறும் அல்லது கதைக்குத் தொடர்புடைய இடம், சூழல் பற்றிய வர்ணனைகளும் கதைகளில் இடம்பெறும். அண்ணாவின் சிறுகதைகளில் இடம்பெறும் பெரும்பான்மையான வர்ணனைகள் கதைமாந்தர்கள் பற்றியவைவாகவே அமைகின்றன; அடுத்து கதைக்குத் தொடர்புடைய சூழல், இடம் பற்றிய வர்ணனைகள் இடம்பெறுகின்றன.

"மதுரவல்லி யாரையாவது மணக்கித்தான் வாழவேண்டுமென்ற நிலையா அவளுக்கு, மிராசுதாரரின் ஏகபுத்திரி! அவள் மேனியும் முகவெட்டும் அமைந்திருந்த விதம், பிறரை மயக்கும் விதமாக இருந்தது. அதசே கொடியிலே கூத்தாடும் மலரின் மணம், வண்டுகளை இழுக்கவில்லையா? கானாற்றின் ஒலி காட்டுமிருகங்களுக்குக் கீதமாகவில்லையா? வானத்திலே ஒளி வீசும் நட்சத்திரங்கள் கண்களுக்கு விருந்தளிக்கவில்லையா? அதுபோலத்தான் மதுரவல்லி..., கண்டோர் கண்களுக்கு விளங்கினாள்,

''அந்தஸ்து, அழகு, அலங்காரம் என்னும் மும்மணிக் கோவையாளுக்குக் கொவ்வை இதழ், குளிர்மதிப் பார்வை, குறுநகை, கோகிலத்வனி இவ்வளவும் கூட்டுச்சரக்காயின'' (அண்ணாவின் சிறுகதைகள், ப.21)

இவை கதைமாந்தர் பற்றிய வர்ணனைகள்.

''விண்ணுலகத்துத் தருக்கள் யாங்கள் என்று கர்வம் கொண்டிருப்பது போல தேவதாரு மரங்கள் ஓங்கி வளர்ந்திருந்தன. எம்முடன் அடிக்கடி வானவில் போட்டியிட்டுத் தோற்று மறைவது வாழ்க்கை என்று கூறுவது போலப் பல வண்ணப் பூக்கள் நிரம்பிக் கிடந்ததோர் பொழில். குழலும் யாழும் என்ன இனிமையைத் தரமுடியுமோ அதை இதோ நாங்கள் தருகிறோம், கேண்மின் என்று கூறுவது போல சிற்றாறு ஓடிக்கொண்டிருந்தது. எங்கும் மணம்—விழாக்கோலம். பாசி படராத, தூசி விழுந்தால் தெரிந்துவிடத்தக்க தெளிந்த நீர்கொண்ட தடாகம், 'ஸ்படிக' கண்ணாடியில் தமது முக 'இலாவண்யத்தைக் கண்டு களித்திடும் காரிகையர் போல மலர் சுமந்து கிடந்த தருக்கள் தமது வனப்பைக் கண்டு மகிழ்வதற்காகவே இந்தத் தடாகம் ஏற்பட்டது என்றுகூடக் கூறலாம்'' (அண்ணாவின் சிறுகதைகள் ப.66)

இது கதை நிகழிடம் குறித்து அண்ணா எழுதியிருக்கும் வருணனைப் பகுதி.

பொதுவாக எதுகை, மோனையோடு கவிதைத் தன்மையில் எழுதுகிற, பேசுகிறவர்களுக்கு வர்ணனைகள் அதிகமாக வரும். இத்தன்மையில் சிறந்த அண்ணாவின் படைப்புக்களில் வர்ணனைகள் மிகுதியாக இடம் பெறுதல் இயல்பானதெனக் கூறலாம்.

*பிற*

உவமைகள், பழமொழிகள் உருவகங்கள் மூலமாகக் கதைமாந்தர்களையும், கதைப் பொருளையும், கதை நிகழிடங்களையும் கூறுதல் இலக்கியப்படைப்பில் காணத்தகும். அண்ணாவின் சிறுகதைகளில் இவை பயன்பாட்டோடு அமைகின்றன.

படைப்பாசிரியர்கள் சிலபோது கடிதங்கள் மூலமாகத் திருப்பங்களை, கதைத் தொடர்ச்சிகளை அமைத்துக் கதைப்பின்னலை உருவாக்குதலும் உண்டு. அண்ணா தம் 'காமக்குரங்கு' கதையில் அக்கதையின் திருப்பத்திற்கும், பின் நிகழ்வுக்கும் ஒரு கடிதத்தை இடம் பெறச் செய்கிறார். அக்கடிதம் கதைப் போக்கை மாற்றியமைப்பதாகவும் அமைகிறது.

*முடிவுரை*

அண்ணா அவர்களின் படைப்புக்களைப் படிப்போர், சிறந்த படைப்பாளர் அவர் என உணர்வார்கள் அங்ஙனம் உணரத்தக் உத்திகளைப் பயன்படுத்தி. தம் தனித்திறன்களைக் காட்டிச் சிறந்த படைப்புக்களை அண்ணா தந்திருக்கிறார். தலைப்படுதல், கதைமாந்தரைத் தேர்தல், தொடக்கம் செய்தல், முடிவு அமைத்தல், கதைப்பின்னல், குறியீடாகக் கூறல், வர்ணனை செய்தல் ஆகிய அனைத்து நிலைகளிலும் அண்ணாவின் தனித் திறன்களாகச் சிலவற்றைக் கண்டறிய முடியும். அரசியல் வாழ்வில் பேற்பெற்ற அண்ணா இலக்கியப் படைப்பிலும் பெரும்பேர் பெற்றிருத்தலை எடுத்துக் காட்டுதல் தமிழறிஞர்களின் கடமையாகும்.

## துணைபுரிந்த நூல்கள்

1 அண்ணாதுரை. சி.என்., அண்ணாவின் சிறுகதைகள், திராவிடப் பண்ணை. திருச்சி, 1969.

2. இராமலிங்கம் மா. விடுதலைக்கு முன் தமிழ்ச் சிறுகதைகள், தமிழ்ப் புத்தகாலயம், சென்னை 1977.

3. சிவத்தம்பி, கா., தமிழில் சிறுகதையின் தோற்றமும் வளர்ச்சியும், பாரிநிலையம், சென்னை, 1967.

4. வேங்கடராமன், சு., அகிலன் சிறுகதைகள் ஒரு திறனாய்வு, தமிழ்ப் புத்தகாலயம், சென்னை, 1987.

5. Dictrich, R.F &Sundell, The Art of Fiction Holt Renehart and Winston, INC, NewYork, 1974.

6. Rene Wellek & Austin warrer, The Theory of Literature, Penguin Books, London 1970.

# சி.என். அண்ணாதுரையின் அரசியல் தொடர்பியல் கொள்கைகள்

தொ. மனோன்மணி

பத்தொன்பது மற்றும் இருபதாம் நூற்றாண்டுகளில் ஏற்பட்ட இயந்திரமயமாதல், தொழிற்புரட்சி, நவீனமயமாதல், நகரியமாதல் மற்றும் வளர்ச்சி ஆகியன ஒரு புறமும் பழைய ஆதிக்க மரபிற்கு எதிரான விடுதலைப் போராட்டங்கள், இயக்கங்கள், உலகப்போர்கள் மற்றும் அழிவுகள் ஆகியன மறுபுறமும் பல நாடுகளில் ஒரு சேர நிகழ்ந்தன. இவற்றோடு புதிதாக உருவான தொழிலாளர்கள் குழுக்கள் மற்றும் நிறுவனமயமான தொழிற்சங்கங்களின் வளர்ச்சியும் இணைந்து பல சமூகங்களில் புதிய அரசியல்பண்பாட்டு (Poiitical culture) மரபுகளைத் தோற்றுவித்தன. உரிமை, சமத்துவம், சுதந்திரம், மீட்சி, நீதி ஆகிய தத்துவங்களின் அடிப்படையில் பழைய அரசியல் கோட்பாடுகளில் மாற்றங்கள் நிகழ்த்தப்பட்டு, மாற்று (alternative) அல்லது எதிர் (counter) அரசியல்பண்பாட்டு நிலைகள் உருவாயின.

அச்சியந்திரக் கண்டுபிடிப்பும் அதைத் தொடர்ந்த பிற தொடர்பியல் தொழில் நுட்பங்களும் புதிய அரசியல் பண்பாட்டு மரபை வலுப்படுத்திப் பரவலாக்கியதில் பெரும்பங்கு வகித்தன. அச்சியந்திரம் தகவல் ஜனநாயகத்திற்கு (democratization of news) அடிகோலியது என்பது ஒருபுறமிருப்பினும் அது அரசியல் தொடர்பியலின் நீட்சியாகத்தான் அமைந்தது. அதுவரையிலும் மேட்டுக்குடிப் பண்பாட்டுத்தளமாக இருந்த அரசியல்தொடர்பியல் புதுவடிவில் சாதாரண மக்களிடமும் நடைமுறையாகிப் போனது. சுதந்திரம் பெற்ற நாடுகளில் இதழியலும், அரசியலும் ஒன்றையொன்று சார்ந்தும் இணைந்தும் வளர்ந்தமையே இதற்குச் சான்றாகும். ஊடகங்கள் (media) அரசியலின புகலிடமாயின. அரசியலை முன்வைத்துத் தகவல்களை வெளியிடும் போக்கு இதழியல் மரபானது. பொதுமக்கள் கருத்துருவாக்கம் (public opinion) அரசியல் கட்சி நிறுவனங்களின் நிலைப்பாட்டினுள் அடங்கவேண்டியதாயிற்று (International Encyclopedia of communications, 1982, vol. 3, PP 53—55).

இந்தியாவிலும் மேற்குறித்த புதிய அரசியல்பண்பாடு, இந்தியத் தேசீய விடுதலைப் போராட்டத்துடன் தொடங்கியது- எனினும் அதற்கிணையாக மாற்று அல்லது எதிர் மரபுகளும் தமிழகம் உள்ளிட்ட சில மாநிலங்களில் முகிழ்த்தன. சமூகம் அரசியல், பொருளாதாரம், சமயம் முதலான அனைத்துத் தளங், களிலும் ஆதிக்கம் செலுத்தி வந்த சிறுபான்மை பிராமணீயச் சமூகக் கட்டமைப்போடு ஏற்கனவே முரண்பட்டிருந்த வேளாளப் பெருங்குடியினர் (பிள்ளைமார், முதலியார், செட்டியார், கொங்குவேளாளர்) விடுதலைப் போராட்டமும் இந்தியத் தேசீயக் காங்கிரசும் கூடப்பிராமணீயமாகிப் போவதை உணர்ந்து தமிழ்ச் சமுதாயத்தில் மறுப்பு மற்றும் எதிர்ப்பு மரபுகளை உரு வாக்கினர். இவர்கள் தோற்றுவித்த திராவிட இயக்கங்களான திராவிடர்க்கழகம் (1944) மற்றும் திராவிடர் முன்னேற்றக் கழகம் (1949) ஆகியவை தமிழ்த் தேசீயம் குறித்துப் பேசின. மிகப் பெரிய வர்க்கப் போராட்டம் போல் சமூக இயக்கமாகக் கருக் கொண்ட இவ்வியக்கங்களில் சி.என். அண்ணாதுரையால் தொடங் கப்பட்ட தி மு க. மிகக் குறுகிய காலத்திற்குள் தன்னை அரசியல் இயக்கமாக, உருமாற்றம் செய்து கொண்டமைகுறிப்பிடத்தக்கது. இவ்வியக்கங்கள் பிராமணீயத்திற்கு மாற்றாக/எதிராக ஏற்படுத்- திய புதிய அரசியல்பண்பாட்டுச் சூழல் தமிழகத்தில் பொது வான சமூக, அரசியல் விழிப்புணர்வை ஏற்படுத்தின என்பது மட்டுமல்லாமல் தனிமனித அளவிலும் சுயவிழிப்பை (self-awareness) உண்டாக்கின என்பதை மறுத்தற்கியலாது.

திராவிட இயக்கங்கள் தங்கள் இயக்கக் கருத்தியலைப் பொதுமக்களிடம் செல்லுபடியாக்கியதிலும், அவர்களின் ஒத்துழைப்பையும் பங்களிப்பையும் பெற்றதிலும் அவர்கள் கையாண்ட தொடர்பியல் திட்டமும் (Communication strategy) வெகுஜனத் தொடர்பியல் ஊடகங்களைப் பயன்படுத்திய லாகவகமுமே பெரும் பங்கு வகித்தன. இவர்களது பன்முக ஊடக அணுகுமுறையும் (multi media approach) மக்கள் சார்ப் புத் (mass appeals) தொடர்பியல் முறைகளும் கவனப்படுத்- தற்குரியவை.

விடுதலைப் போராட்டமும், இந்தியத் தேசீயக் காங்கிர- சும் பிராமணர்களின் ஆதிக்க மையங்களானபொழுது வெகு-

ஜன ஊடக நிறுவனங்கள் (இதழ்நிறுவனங்கள்) மையச் சார்பு-டையவையாயின. ஏனெனில் இந்தியன் எக்ஸ்பிரஸ், இந்து டைம்ஸ் ஆப் இந்தியா, இந்துஸ்தான் டைம்ஸ், சுதேசமித்திரன், தினமணி, தினமலர், நவமணி, ஆனந்தவிகடன், கல்கி ஆகிய நிறுவனங்களின் முதலாளிகளும் பிராமணர்களாகவிருந்தனர். அகில இந்திய வானொலியும் அரசுடைமையானது. இவை-யணைத்தும் மையக் கருத்தியலைத் தாங்கிய மைய நீரோட்ட ஊடகங்களாகத் (mainstream media) திகழ்ந்தன. அவை தி.க மற்றும்தி.மு.க.இயக்கத் தகவல்களைவெளியிடாது இருட்டடிப்புச் செய்ததோடு திரித்தும் எழுதி வந்ததென்றும், அதனால் தங்கள் இயக்கத்திற்கென்று இதழ்களைத் தொடங்க வேண்டுமெனவும் அண்ணா தம் கடிதங்களில் சுட்டிக்காட்டியுள்ளார். (அண்ணா-துரை, தம்பிக்கு அண்ணாவின் கடிதங்கள் 1951, ப 2) அதன்-படி இவ்வியக்கத்தின் முன்னணித்தலைவர்களனைவரும் தனித்-தனியே நாளிதழ்கள், வாரஇதழ்களைத் தோற்றுவித்தனர். ஏறத்தாழ 43 இதழ்கள் இயக்க இதழ்களாக வெளிவந்தன; நாடகங்களை எழுதி நடித்தனர்; திரைப்படத் துறையைக் கையகப்படுத்தினர். பொதுமேடைப் பேச்சைத் தொடர்ந்தனர். இங்ஙனம் கலை, இலக்கியம், சமூக அரசியல், பண்பாட்டில் புதிய மாற்று, மற்றும் எதிர் மரபுகள் தோற்றம் கண்டதைப் போன்றே வெகுஜனத்(இதழியல்) தொடர்பியலிலும் புதிய-மரபுகள் தமிழகத்தில் உதயம் கண்டன. விளிம்புநிலைக்கருத்தியலை இம்மாற்று ஊடகங்கள் தாங்கி வர வேண்டியிருந்ததால வெகுஜனத் தொடர்பியல் கொள்கைகளும் அரசியலைச் சார்ந்-திருந்தன.

விடுதலை இயக்கம் தமிழ் இதழியலில் ஏற்படுத்திய மரபுகளைப் போன்றே திராவிடக் கழகங்கள் ஏறபடுத்திய இதழியல் மரபுகளும் குறிப்பிடத் தகுந்தவை. சுதேசமித்திரனைத் தொடர்ந்து திராவிடர் இயக்க இதழ்கள் அரசியல் தொடர்-பியலைத் தமிழகத்தில் அறிமுகம் செய்தன. இவை வெளியிட்ட அரசியல் தொடர்பான சொற்பிரயோகங்களும, சொற்றொடர்-களும், குறியீடுகளும, கருத்துக்களும வெகுவாகப பொதுமக்களி-டம் சென்றடைதத்ன. அதறகேற்ற வண்ணம தொடர்பியல் கொள்கைகளையும் அவை உருவாக்கிக்கொண்டன.

இதழ்களில சமூகச் சீர்திருத்தக் கருத்துக்கள் பின்னுக்குத் தள்ளப்பட்டு அரசியல் கருத்துக்கள் முன்னிறுததப்பட்டன. கட்சி

யின் அடிநிலைத் தொண்டர்கள் தமது இயக்க இதழ்களைப் படிக்க வேண்டும், கட்சிச் செய்திகளை அறிந்து கொள்ள வேண்டும் என்பதற்காக இலவசப் படிப்பகங்களை ஊர்தோறும் இக் கட்சிகள் ஏற்படுத்தின. தமிழக மக்களிடையே ஊடகப்பழக்கம் (media habit) மற்றும் படிக்கும் பழக்கம் ஆகியவற்றை உருவாக்கியதில் தி.மு.க.விற்குப் பெரும் பங்குண்டு.

அண்ணாதுரை, பேனாப்போர் (pen fight) முறையைத் திராவிடன், திராவிடநாடு இதழ்களில் அறிமுகம் செய்தார்; இதழ்களில் எதிர்க்கட்சியினருடன் தொடுத்த வாதங்கள், விவாதங்கள், எதிர் வாதங்கள் ஆகியவை இதழ்களின் பக்கங்களை நிரப்பின. இப்போக்கு வாசகர்களை மிகுதியாகக் கவர்ந்தன 'தம்பிக்கு' எனும் தலைப்பிட்டு அண்ணா எழுதிய கடிதங்கள் அடிநிலைத் தொண்டர்களோடு நேரடியாக உரையாடுவது போன்ற நெருக்கத்தை ஏற்படுத்தின. இவரைத் தொடர்ந்து பிற தலைவர்களான கருணாநிதி 'உடன்பிறப்பே' என்றும், நாஞ்சில் மனோகரன்' அருமை அடலேறே என்றும் எம்.ஜி.ஆர். 'ரத்தத்தின் ரத்தமான உடன் பிறப்பே' என்றும் தொண்டர்களை விளித்துப் பேசலாயினர்' அண்ணாவின் அடுக்கு மொழியும், எதுகை, மோனைப் பிரவாகமும், தமிழ்மொழித் தொடரமைப்பில் உண்டாக்கியப் புதுமையும் புதிய தொடர்பியல் கொள்கைகளாயின.

மேற்கூறியத் தொடர்பியல் முறைகளைத் தவிர அண்ணா-கருத்தேற்ற உத்திகளுடன் (persuasive stechniques) கூடிய பிரச்சாரத் தொடர்பியல் கொள்கைகளையும் அறிமுகம் செய்தார்

*அரசியல் தொடர்பியல்* (Political Communication)

மானிடத் தொடர்பியல் நிகழ்வே (Human communication process) அரசியல் செயல்பாடாகும். ''செவிமடுப்போரின் (audience) மனதில் தாம் கருதிய பொருளைப் பிரதிபலிப்பிப்பதற்காகக், கூறுவோர் தம் தகவலைக் குறியீடுகளாக்கிப் பகுத்து, தொகுத்து மற்றும் வடிவமைத்து (encoding) அஞ்சல் செய்ய, செவிமடுப்போரும் அக்குறியீடுகளைத் தம் அறிவுக் களஞ்சிய நிகழ்வால் (Coginitive process) பகுத்து தொகுத்துப் பொருள் கொள்ளும் (decoding) நிகழ்வு

தொடர்பியலாகும் (Dean Burnland, 1979 P.112). இங்ஙனம் கூறுவோரும் கேட்போரும் தத்தமக்குச் சாதகமாக மொழிக்குறியீடுகளை லாகவமாகக் கையாளும் முயற்சியேதொடர்பியல் என்பது இங்குப் பெறப்படுகிறது. மானிடத் தொடர்பியலே ஒரு வகையான 'மனச்சுரண்டல்' (mind mani palation) அல்லது அரசியல் (politics). இதையொத்தே அரசியல் தொடர்பியல் விளக்கமும் அமைகிறது.

"ஒரு சமுதாயத்தில் நிலவும் ஆதிக்கம் மற்றும் அதிகாரப் பயன்பாட்டு நிலையில் பாதிப்பை ஏற்படுத்தும் வகையில் திட்டமிட்டு மிகக் கவனமாக ஒரு நோக்கத்தோடு கூடிய தகவலை அஞ்சல் செய்யும் தொடர்பியல் முறையை அரசியல் தொடர்பியல் எனலாம்". (International Encyclo pedial of communications 1982, vol-3, P - 58). ஆதிக்க நிலைகளில் பாதிப்பை ஏற்படுத்த வேண்டுமெனில் பொதுமக்களின் பங்களிப்பும் அவசியமாகிறது. அதனால் பிரச்சார உத்திகளின் அடிப்படையில் அரசியல் தொடர்பியல் கட்டமைக்கப்படுகிறது பிரச்சாரம் என்பதும் ஒரு தனிப்பட்டக் கழகத்தின் அல்லது இயக்கத்தின் கொள்கைகளைப் பொதுமக்கள் ஏற்றுச் செயல்படும் வகையில் கையாளப்படும் ஊடகங்கள் அனைத்தையும் பயன்படுத்திப் பரப்பும் செயல்பாடு ஆகும். அது பிரச்சாரகனது விருப்பத்தோடு கூடிய நோக்கை அடையும் வகையில் மிகக் கவனமாகவும் முறையாகவும் கேட்போரின் புலனுணர்விற்கு (perception) வடிவு கொடுத்து அவரது அறியும் திறனைச் சரியாகப் பயன்படுத்தி மனப்பான்மை மாற்றத்தை ஏற்படுத்தும் முயற்சியாகும். இங்ஙனம் கருத்தேற்ற உத்திகளோடு (persuasive techniques)ஒரு தகவல் அமையும் பொழுது தான் பிரச்சாரம் முழுமையடைகிறது. (தொ. மனோன்மணி, 1991, ப,85)

இவ்வகையில் அண்ணாதுரை என்ற அரசியல் தொடர்பியலாளர் தாம் விரும்பிய இலக்கை அடையும்பொருட்டுத் தம் இயக்கக் கருத்தியல்களைப் பொதுமக்களிடம் உருவேற்றும் வகையில் கருத்தேற்ற உத்திகளுடன் பிரச்சாரத் தொடர்பியல் முறையைப் பயன்படுத்தியுள்ளார். பொதுவாக இனங்காட்டப்பட்டுள்ள ஈர்ப்பு (appeals) உத்திகளான கூறுவோர் ஈர்ப்புகளான

தகவல் மூலம் அல்லது தகவலர் நம்பகத்தன்மை, அதை உறுதிப் படுத்தும் காரணிகளான தகவலரிடத்துக் காணப்படும் தனித்தி-தமை(அண்ணாவிடம் மிகுதிப்பட்டிருந்த மொழிப்புலமை, பேச்சு, எழுத்து, படைப்பாற்றல் மற்றும் அறிவுத்திறன்கள் ஆகியவை அவர் மீது நம்பிக்கையை ஏற்படுத்தின), அஞ்சாமை, பொது நலப் பண்பு, நல்லெண்ணத் தகவல் ஆகியவையும் தகவல் ஈர்ப்புக்கான (message appeals) காரண, காரியத்தோடு கூடிய விவாதம், நியாயப்படுத்துதல், கேட்போரை எச்சரித்தல், அச்சமூட்டுதல், சினமூட்டுதல் பின்னர் அச்சம்தவிர்த்து நம்பிக்கையூட்டுதல் முதலியன ஆகியவை இவரது தொடர்பியல் முறைகளின பின் பற்றப் பட்டிருப்பினும் சிறப்பு நிலையில் அண்ணாவின் தனித் தன்மையான தொடர்பியல் கொள்கைகள் அவரது பேச்சிலும் எழுத்திலும் இடம்பெறுகின்றன. இக்கொள்கைகளை இனம் பிரித்துப் பார்ப்பதின் மூலம் அரசியல் மற்றும் பிரச்சாரத் தொடர்பியல்களில் புதிய கோட்பாடுகளை உருவாக்கமுடியும்.

அண்ணாவின் தொடர்பியல் முறை மிகவும் செறிவூட்ட மாக உள்ளது. இவரது முதன்மைக் குறிக்கோள் மக்களின் கவனத்தை ஈர்ப்பது, கட்சியின் (தனது) பெயரை அவர்கள் மனதில் பதியவைப்பது, இறுதியில் அவர்களைத் தன்னிலை காளக (subjects) மாற்றித் தம் இலக்கான அரசியல் வெற்றியை அடைவது ஆகிய மூன்று நிலைகள் காணப்படுகின்றன. இந்-நிலகளைக் கீழ்க்கண்ட தலைப்புக்களில் ஆராயலாம். அவை 1. சமூகவிலாக்கம் (Socialisation) 2. முன்கூட்டித் தீர்மானித்த இடுமானக் குறியீட்டாக்கம் (preinpposed encoding) 3. தடமே தகவல் (medium is the message) 4. தகவல் மற்றும் மொழி அரசியலாக்கம் (polittcization) ஆகியவை ஆகும்.

## சமூகவியலாக்கம்

அரசியலைச் சமூகவியலாக்கி வாழ்வியலோடு இணைந்த சமூகமயமாதல் நிகழ்விற்கு (Sociolisation Process) உட்-படுத்திய தன்மை இவரது கருத்தேற்ற உத்திகளில் பிரதானமாக அமைகிறது. இத்தொடர்பியல் முறை பொதுமக்களை வயப்-படுத்துதற்குப் பயன்பட்டதோடல்லாமல் தமிழகத்தில் புதிய

அரசியல் தொடர்பியலை அறிமுகம் செய்ததற்கும், அரசியல் பண்பாட்டைப் பரவலாக்கியதற்கும் பயன்பட்டது. மேலும் அது அவரது அரசியல் வெற்றிக்கும் அடிப்படையானது எனலாம். 'சமூதாயத்தில மக்கள் தங்கள வாழ்க்கை முறையோடு அரசியலை ஐக்யப்படுத்தி அரசியல்நோக்க மனப்பான்மையை வளர்த்துக் கொண்டு அதனடிப்படையில் நடத்தையை (behaviour) உருவாக்கிக்கொள்ளும் நிகழ்வு'' என அரசியல் சமூகவியலாக்கம் பற்றிய (Socialisation of Politics) விளக்கத்தைக் கூறலாம். (International Encyclopedia of communications, 1982, P. 50). அரசியல் வாழ்வியலில் அரசியல் கண்ணோட்டம் தனிமனித மனப்பான்மை மாற்றத்தில் தொடங்கி சமூக அளவில் நிகழும் பொழுது அங்கு அரசியலுக்கும் சமூகவியலுக்கும் வேறுபாடில்லாமல் அனைத்தும அரசியலாகும் நிலை உருவாகிறது. தமிழ்ச்சமூகத்தில் இப்புதிய அரசியல்பண்பாட்டு உருவாக்கத்தில் அண்ணாதுரையின் பங்கு கணிசமானது எனலாம்.

சமூகவியலாக்கத்தின் முதல்படியாக, அண்ணாதுரை கட்சித் தொண்டர்கள் அனைவரையும் (வயது வேறுபாடின்றி) ''தம்பி'' என விளித்து உரையாடும் உத்தியைக் கையாள்கிறார். அண்ணாதுரை என்ற இவரது இயற்பெயரின் சுருக்கமாக ''அண்ணா'' என்று சகத்தலைவர்கள் (திராவிடக்கழகத்திலிருந்தபொழுது) விளித்த நிலையை ''அண்ணன்'' என்ற உறவுமுறைப் பெயராகத் தொண்டர்கள் மத்தியில் அறிமுகம் செய்து கொள்வதற்காகத் ''தம்பி'' என்ற உறவுப் பெயரைத் தம் கடிதங்களிலும் மேடைப் பேச்சிலும் பயன்படுத்தத் தொடங்குகிறார். திராவிட நாடு, காஞ்சி ஆகிய இதழ்களில் 'தம்பிக்கு' என்றதலைப்பில் தொடர்ந்து நூற்றுக் கணக்கில் எழுதப்பட்டக் கடிதங்கள் கவனத்திற்குரின. இக்கடிதங்களில் தம்பி, நான், நீங்கள், நீ ஆகிய விளிகள் மிகுதியாக உள்ளன. இவ் அணுக்க விளிகள் அடிநிலைத் தொண்டரோடு நேரடியாக உரையாடுவது போன்ற நெருக்கத்தை ஏற்படுத்தும் நோக்கில் பயன்படுத்தியுளமையைக் காணமுடிகிறது. இவர் எழுத்திலும் பேச்சிலும் தம்பி என்று திரும்பத் திரும்ப விளிக்கும் பொழுது அது தொண்டர்கள் மத்தியில் ,அண்ணன்' என்ற உறவை உணர்வுப் பூர்வமாக நங்கூரம் பாய்ச்சிவிடக்கூடும். அண்ணாவின் இத்தகைய புதை கருத்தேற்ற உத்தி (hidden persuaders) தொண்டர்களிடம் ஊடுருவு விளைவை (Interpellation effect) ஏற்படுத்தும் திறன் கொண்டது.

மேலும் தம்பி, நான், நீ, நீங்கள் போன்ற பெயரடைகள் தகவலில் மிகுதியாக அமைத்துக்கொடுக்கப் படும் பொழுது அவை தொடர்பியலில் கூறுவோர் மற்றும் கேட்போருக்கிடையிலான இடைவெளியைக் குறைத்து இருவருக்கிடையில் நெருக்கத்தை ஏற்படுத்தும் காரணிகளாகின்றன. இந்நிலையில் தகவல், கேட்போரை எளிதாகச் சென்றடையும். இவ்விளிகள் கேட்போரை எப்பொழுதும் ஒரு வட்டத்தினுள் நிறுத்தி அவர்களிடம் கருத்தியலை ஏற்றுக் கொள்ளும் மனப்பான்மையை உருவாக்கும்.

தன்னிலையாக்கம் (Subjection)

அண்ணாவின் தொடர்பியல் கொள்கைகளில் மக்களைத் தன்னிலைகளாக மாற்றும் உத்தி முதன்மை இடத்தை வக்கிகிறது. அண்ணா பயன்படுத்தும் 'தம்பி' என்ற சொற்பொருளே ஒரு சங்கேதக் குறிப்பீட்டுத் தொடராகிறது. இது திரும்பத் திரும்பத் தொடரும் பொழுது, 'அண்ணன்' என்ற உறவு முறையின் பண்பாட்டு அர்த்தத்தால் தொண்டர்களின் முரண்பாடுகள் அழிக்கபட்டு விடுகின்றன. பதிலாக 'மௌனமே' மொழியாகிறது. இத்தகையச் செயல்பாட்டில் தான் ஒருதொண்டர் தன்னிலையாக மாற்றப்படுகிறார். மேலும் அண்ணன் என்பது போன்ற உறவு நிலையின் பண்பாட்டுச் சித்தரிப்புக்களுக்கு ஆட்படும் தன்னிலை, அந்தச் சித்தரிப்புக்குத் தான் தான் பொறுப்பாளி என்ற உணர்வைப் பெறுகிறார். சான்றாக, லூயி அல்தூஸர் கருத்துருவம் பற்றிக் குறிப்பிடும்பொழுது ஊடுருவு விளைவு (Inter pellation effect) பற்றிக்குறிப்பிடுவார். பொதுஇடத்தில் போலீஸ்காரர், ''ஏய்! யாரங்கே! எனக் கேட்பது நம்மைத்தான் எனத்தீர்மானித்துத் திரும்பிப்பார்ப்பது போல அண்ணாவின் 'தம்பி' என்ற கருத்துருவ விளியும் தனிநபர்களை ஊடுருவித் தன்னிலைகளாக மாற்றுகின்றன. இங்கு அண்ணன், தம்பி, நான், நீ என்ற பெயரடைகள் ஒரு தனிநபரைக் குறிப்பன அல்ல-மாறாக அது ஒரு கருத்துருவ அமைப்பு. அண்ணா × தம்பி, நான் × நீ, நீங்கள் என்ற எதிர்வுகள் தொடர்ந்து தகவல்களில் கட்டமைக்கப்படும் பொழுது அவை பல அர்த்தக் குறியீடுகளை உற்பத்தி செய்துவிடுகின்றன.

இக்கருத்துருவக் கட்டமைப்புகள் அரசியலைச் சமூகவியலாக்கியதன் மூலம் விசுவாசம் (loyalty) என்ற விழுமி-

யமும் கருத்துருவேற்றமும் (indoctrination) பண்பாட்டின் அங்கங்களாகி விடுகின்றன. இச் செயல்பாடுகளே தகவல் மூல (அண்ணாவின் மீதான) நம்பகத்தன்மையை உறுதி செய்யும் காரணிகளாகின்றன. தகவல் மூல நம்பகத் தன்மை பிரச்சாரத்தில் முதலிடம் வகிக்கும் காரணியாகும்.

'தம்பி' என்ற விளியால் ஒரு அரசியல் கட்சி, சமுதாயத்தின் அடிப்படை அலகான குடும்பம் என்ற கட்டமைப்பைப் பெற்றுவிடுகிறது. தி. மு. க. ஒரு குடும்பம் என்று அண்ணா பல இடங்களில் தம் கடிதங்களில் குறிப்பிடுகிறார். தமிழ்ச் சமூகத்தின் குடும்ப அமைப்பில் மரபாக வருகின்ற அதிகாரப் படிநிலைகள், அவற்றிற்குரிய விழுமியங்கள் (values) மற்றும் உணர்வு பூர்வச் செயல்கள் ஆகியவை இங்கும் வேரூன்றுகின்றன. ஒவ்வொரு தொண்டரின் குடும்பமும் ஒரு தி.மு.க வாகிறது. அதனால் சமூக மயமாக்கல் நிகழ்வில் (socialisation process) குடும்ப அங்கத்தினர்கள் (தாய், தந்தை) ஈடுபடும்பொழுது தி.மு.க.வும் கணக்கில் எடுத்துக் கொள்ளப்படுகிறது. அதனால் இக்கட்சி தந்தை, மகன், பேரன் என்ற ரீதியில் தொண்டர்களின் குடும்பத்தில் பரம்பரைக் குறியீடாகிறது. இங்ஙனம் ஒரு அரசியல் கட்சி சமூகவியலாக்கப்படுவது எளிதாகிறது.

புதிய அரசியல் பண்பாட்டு மரபில் பொதுமக்கள் கருத்து உருவாக்கத்தைக் கட்சி நிறுவனங்கள் நிர்ணயித்ததால், கட்சி நிறுவனங்கள் தம் செயல்பாடுகளால் போலிமதநிறுவனங்களாயின (Pseudo Religion). ரஷ்யப் புரட்சியின்போது ஜேகொபின் 'குடியரசிஸம்' போலிமதநிறுவனமாக மாற்றம் கண்டதைப் போல் தி. மு. க. வும் அத்தகைய நிலையை நோக்கி நகரத் தொடங்கியது எனலாம். தமிழகம் முழுவதும் கட்சிக் கிளைகளை ஏற்படுத்தியதும், படிப்பகங்களைத் தோற்றுவித்துக் கட்சியின்கருத்தியலையும் அதன் அன்றாடச் செயல்பாடுகளையும் அறிவித்ததும் தொண்டர்கள் நாள்தோறும் ஓரிடத்தில் கூடிக் கருத்துப் பரிமாற்றம் செய்து கொள்ள வழி வகுத்தன. இச்செயல்கள் 'அண்ணா' என்ற ஆளுமையையும் அதனுதவியால் தி.மு.க.வையும் வலுப்படுத்த உதவின. இவை தொண்டர்களிடம் கட்சி போதனைகளை உருவேற்றப் பயன்பட்டன. இத்தகையத் தொடர்பியல் திட்டத்தைத் தமிழகத்தில் வேறெந்த அரசியல் இயக்கமும் பின்பற்றவில்லை என்றே கூறலாம்.

மேற்கூறியவற்றோடு, அண்ணாவின் தலைமையில் நடத்தப்பட்டக் கட்சி மாநாடுகள், சிறப்பு மாநில மாநாடுகள், தேர்தல் மாநாடுகள், கருத்தரங்குகள் ஆகியன சமயத்திருவிழாக்களின் பதிலியாகச் செயல்பட்டன. மிகப் பகட்டாக நடத்தப்பட்ட இம் மாநாடுகள் சமூகவியலாக்கலின் அங்கமாகும். மாநிலம் தழுவிய அளவில் தொண்டர்களை ஓரிடத்தில் கூடச் செய்தல், தலைவனைக் கண்டுகளித்தல், அதன் நீட்சியாக தலைவனை வணங்குதல், கருத்தரங்க உரைகளை ரசித்தல், விருந்துண்ணுதல், கலைநிகழ்ச்சிகளைக் கண்டுகளித்தல், கண் காட்சிகளை ரசித்தல், பேரணியாக ஊர்வலம் வருதல் ஆகிய செயல்பாடுகள் சமயத்திரு விழாக்களை நினைவூட்டுகின்றன. 1951, 57, 62, 66 ஆகிய ஆண்டுகளில் சென்னை, திருச்சி, கோவை போன்ற மாநகரங்களில் நடத்தப்பட்ட இம்மாநாட்டு நிகழ்ச்சிகளின் அடிப்படையில் அமைக்கப்பட்ட கீழ்க்கண்ட ஒப்புமைகள் தி. மு. கவின் மாநாடுகள் சமயத் திருவிழாக்களை ஒத்திருந்தமைக்குச் சான்றாகும்.

கோயில் = கட்சி, திருவிழா = மாநாடு, காப்புக் கட்டிக் கொடியேற்றுதல் = மாநாட்டுக் கொடியேற்றுதல், மூலவரை ஊர்வலமாக எடுத்துவரல் = கட்சியின் பொதுச் செயலாளர் (அண்ணா) அலங்கார வண்டியில் ஊர்வலமாக மாநாட்டுப் பந்தலுக்கு அழைந்துவரப்படல், மக்கள் கோயில் பந்தலில் கூடுதல்=மாநாட்டுப் பந்தலில் தொண்டர்கள் கூடுதல், கோயில் பண்கள் பாடுதல் = திராவிடப் பண்பாடுதல், தொடர்ந்த அர்ச்சனைகள், பூசைகள் = கருத்தரங்கங்கள், உரைகள், சமய நம்பிக்கையை உருவேற்றுதல்=கட்சிக்கருத்தியலை உருவேற்றுதல், விருந்துண்ணல் = மாநாட்டில் விருந்துண்ணல், இரவில் கலைநிகழ்ச்சிகள் = இரவில் கலைநிகழ்ச்சிகள், இறுதிநாளில் தேர் ஊர்வலம் = இறுதி நாளில் தொண்டர்கள் அணிவகுக்கும் பேரணி தெருக்கள் வழியாக வலம்வருதல், கடைகள், கண்காட்சிகள் = கட்சிக் கண்காட்சிகள்

அரசியல் மாநாடுகள் தொண்டர்களிடம் சமயத்திருவிழாக்களைப் பிரதிபலிப்பதால் தொண்டர்கள் அரசியலையும் மதத்தையும் இனம்பிரித்துக் காணமுடியாத மனநிலையை பெற்றுவிடுகிறார்கள் மதநம்பிக்கையைப் போன்றே கட்சி

தம்பிக்கையும் ஊனோடும் உணர்வோடும் கலந்துவிடும் மன-வெழுச்சியை இம்மாநாடுகள் உருவாக்குகின்றன.

இடுமானக் குறியீட்டாக்கக் கொள்கைகள் (Encoding Principles) :

அண்ணாவின் தொடர்பியல் முறையில் பெரும்பாலும் தகலைச் காட்டிலும் தகவல்மைப்பில் அவர் மிகுதியாகக் கவனம் செலுத்தியுள்ளார். அதனால் தொடர்பியல் நிகழ்வில் இடுமானக் குறியீட்டாக்கம் சிறப்பிடம் பெற்றுள்ளது. கூறுவோர் கேட்-போரிடம் தாம் கருதிய பொருளைப் புலப்படுத்த வேண்டித் தகவலை மொழிக்குறியீடுகளால் வடிவமைக்கும் நிகழ்வு இடு-மானக்குறியீட்டாக்கமாகும். அண்ணா தம் தொண்டர்களின் கவனத்தை ஈர்த்து, அவர்களை வயப்படுத்தித் தக்க வைத்துக் கொள்ளும் முயற்சிகளைத் தகவல் அமைப்பில் மேற்கொள்கிறார் அண்ணாவின் மேடைப் பேச்சிலும் அவாது கடிதங்களிலும் முகப்பில் ''தம்பி! நான் என்ன கூறப்போகிறேன் என்று உனக்கு நன்றாகத் தெரியும்'' (அண்ணாதுரை, தம்பிக்கு அண்ணாவின் கடிதங்கள், 1953, பக் 90) என்று வயப்படுத்தும் தொடரை அமைப்பதன் மூலம் தொடக்கத்திலேயே தொண்டர்களைத் தன் பொறிக்குள் சிக்கவைத்து விடுகிறார். தொண்டர்களின் கவனச் சிதறலைத் தவிர்க்க இக்கூற்றுப் பயன்படும். ஒவ்வொரு தொண்டரும் தமக்குத் தெரிந்த விஷயத்தைக் கூறப்போகிறார் என்ற எதிர்பார்ப்பில் இறுதிவரையிலும் தகவலில் தம் கவனத்தை நிலை நிறுத்த இவ்வுத்தி பயன்படக்கூடும். மேலும் இங்குத் தலைவன், தொண்டன் என்ற பேதத்தையும், கூறுவோர், கேட்போருக்கிடையிலான இடைவெளியையும் இக்கூற்று தவிர்த்து விடுகிறது.

இரண்டாவதாக, கேட்போரிடமிருந்து எதிர்பார்க்கும் மறுமொழி, பிரதிச்செயல் (response) மற்றும் தமது அனுமானங்களையும் பொதிந்து வைத்து இடுமானக் குறியீட்டாக்கம் செய்து தகவலைத் (presupposed encoding) தருவது அண்ணாவின் கொள்கையாகக் காணப்படுகிறது. அஃதாவது கேட்போர்

(தொண்டர்கள்) என்ன பொருளைக் குறியீட்டாக்கம் செய்து கொள்ள வேண்டும் (decoding), எப்படி அர்த்தப்படுத்திக் கொள்ள வேண்டும் என்பதையும் தமது இடுமானக் குறியீட்டிலேயே அமைத்துக் கொடுக்கும் உத்தியை அண்ணாவிடம் காணமுடிகிறது. இதன் மூலம் தொண்டர்கள் மறுப்பின்றித் தம் கருத்தை அப்படியே ஏற்றுக் கொள்ளவேண்டும் என்ற அவரது நோக்கமே வெளிப்படுகிறது.

"தம்பி! அடிக்கடி நீ என்னிடம் மல்லுக்கு நிற்கிறாய். மாற்றார்கள், உற்றார்களாக இருக்க வேண்டியவர்கள் கூடத் தம் மனம்போன போக்கிலே நம்மைக் கேவலமாகப் பேசுகிறார்கள். பழிச்சொல் வீசுகிறார்கள். வேதனையாகவும் இருக்கிறது. ஏன் நாம் பதிலளிக்கக் கூடாது? ஏன் நாம் அவர்களின் குட்டுக்களை உடைத்திடக் கூடாது அவர்களிடம் உள்ளக் கொள்கைக் குழப்பங்களையும் முரண்பாடுகளையும் உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேசும் கேவலப் போக்கினையும் ஏன் அம்பலப்படுத்தக் கூடாது என்றெல்லாம் கேட்கத்துடிக்கிறாய் அல்லவா?" (அண்ணாதுரை, தம்பிக்கு அண்ணாவின் கடிதங்கள், 1957,ப.95).

காங்கிரஸார் தி.மு.க. வினரின் அடுக்குமொழிப் பேச்சை நையாண்டி செய்தபொழுது இப்பகுதியை ஒரு கடிதத்தில் அமைத்துள்ளார். ஆதிக்கத்தொடர் பியலாளருக்கே (Dominant Communicators) இத்தகைய இடுமானக் குறியீட்டாக்கம் கைவரப்பெறும். இது வயப்படுத்தும் தன்மையில் மட்டும் அமையாது. வலியுறுத்தல் மற்றும் வற்புறுத்துதல் தன்மையில் அமைந்துள்ளது எனலாம்.

தடமே தகவல் (medi um is the message)

தொடர்பியல் நிகழ்வில் சொல்மொழி (verbal). மற்றும் சொல்லல்லா மொழி (non-verbal) ஆகியவை தகவலை அஞ்சல் செய்யும் தடமாகப் (Channel) பயன்படும் கூறுகளாகும். ஆனால் அண்ணாவின் தொடர்பியல் முறையில் மொழி என்ற தடமே தகவலாக உருமாறித் தொண்டர்களை வயப்படுத்தும் காரணியாகப் பயன்படுவதைக் காணலாம். எதிரணியினர் மற்றும் எதிர்க்கட்சியினரின் கூற்றுக்கள் மற்றும் அவர்களின் செயல்களுக்கு மறுமொழி வழங்குவதாகவே அண்ணாவின் கடி-

தங்கள் அமைகின்றன. ஒன்று முதல் வெகு சில மெய்மைகளைக் கொண்ட சிறிய தகவல்களே கடிதங்களில் விவாதிக்கப்பட்டுள்ளன. ஆனால் இத்தகையத் தகவல் வெளிப்பாட்டுமுறை அவரது மொழித்திறனை அம்பலப்படுத்துவதாக அமைகிறது. குட்டிக் கதைகள், உவமைகள், உருவகங்கள், விவாதப் போக்கு, கவிதை அமைப்பு, அடுக்குத் தொடர்கள், எதுகை மோனைப் பிரவாகம் ஆகியவற்றைக் கொண்டு கட்டமைக்கப்பட்ட நீண்ட கடிதமாக அத்தகவல் காணப்படுகிறது. அதனால் ஒரே தகவல் மீண்டும் மீண்டும் பல்வேறு முறைகளில் வெளிப்படுத்தும் போக்கைக் கடிதங்கள் சுட்டுகின்றன. இத்தகைய மொழிப் பகட்டு மட்டுமின்றித் தமிழ் மொழியின் தொடரமைப்பு மரபையும் பயனிலை, செயப்படு பொருள், எழுவாய் என்ற அமைப்பில் மாற்றம் செய்துள்ளமையும் குறிப்பிடத்தகுந்தது. இப்போக்குக் கேட்போரின் கவனத்தைத் தகவலிலிருந்து விலக்கி மொழியமைப்பிலேயே தக்கவைத்து விடுகின்ற நிலையைத் தந்துவிடுகிறது. இதனால், இவரது தொடர்பியல் முறையில் தகவல்கள் பின்னுக்குத் தள்ளப்பட்டு, மொழி என்ற தடமே முன்னிறுத்தப்படுவதால் மொழியே தகவலாகும் நிலையை எய்துகிறது. இதனால் அவரது மொழிப் புலமையைச் சிலாகித்துப் பேசும் தன்மை உருவாகியது. அவர் என்ன கூறினார் என்பதை விட அதை எப்படிக் கூறினார் என்பதே கேட்போரின் கவனத்தில் நின்றது. மொழித்திறனே அவரது ஒட்டுமொத்தத் திறனாகக்கூட மதிக்கப்பட்டது எனலாம். ஆக அண்ணாவின் மொழியே சமுதாயத்தில் தொடர்ந்த தொடர்பியலுக்குத் தகவலாக மாறியது. அதனால் அண்ணாவின் தகவல் தரும் கருத்து மீதான பொதுமக்கள் கருத்து உருவாவதிலிருந்து விலகி நின்று, மொழிக்கான அஃதாவது மொழியைப் பயன்படுத்தியவர் மீதான கருத்துருவாக்கம் ஏற்பட்டது எனலாம். அண்ணாவின் அரசியல் தொடர்பியல் முறை, கேட்போரிடம். இயக்கக் கருத்தியலை முழுமையாகப் புரிந்து கொண்டு (அறிவுபெற்று) செயல்படத்தூண்டும் வாய்ப்பை ஏற்படுத்தாமல், ஊடக அளவில் (மொழி) வயப்படத்தக்க நிலையை ஏற்படுத்தியுள்ளன. இத்தகையத் தொடர்பியல் போக்கையே தொடர்பியல் அறிஞர் மார்ஷல் மக்லூஹன் ''தடமே தகவல்'' என்ற சொற்றொடரால் விளக்கினார். அண்ணாவின் வேகமான சொல் வீச்சும், மொழிப் புலமையும் தமிழக மக்களை வெகுவாக ஈர்த்தன. ''கீழை மொழி

யினர் மொழிக்கு மயங்குபவர்கள்'' என்ற விமல் தீச நாயகெயின் கருத்து இவ்விடத்துச் சுட்டிக் காட்டத் தக்கது (தொ. மனோன்மணி, 1995, V.65).

*முடிவுகள்*

இந்திய விடுதலைப் போராட்டத்துடன் தொடங்கிய புதிய அரசியல் பண்பாட்டு மரபுகளுடன் தமிழகத்தில் எதிர்ப்பு/மாற்று மரபுகளும் தோன்றின. இதில் திராவிட இயக்கங்களான தி. க. மற்றும் தி. மு. கவிற்குப் பெரும் பங்குண்டு.

அண்ணாவின் தலைமையிலமைந்த தி. மு க. குறுகிய காலத்திற்குள் புதிய அரசியல் இயக்கமாக உருமாறியது. அரசியல் பண்பாட்டு மரபுகளைப் போன்ற அவற்றைப் பரவலாக்கிய அரசியல் தொடர்பியல் மற்றும் இதழியல் மரபுகளும் தமிழகத்திற்கு அறிமுகமாயின.

அண்ணாவின் வெற்றிக்கு அவர் கையாண்ட தொடர்பியல் திட்டமும் பன்முக ஊடக அணுகுமுறையும் ஊடகங்களைக் கையாண்ட லாகவமுமே காரணங்களாகும்.

அண்ணாவின் அரசியல் தொடர்பியல் கருத்தேற்ற உத்திகளை அடிப்படையாகக் கொண்ட பிரச்சார முறையிலமைந்தது.

ஏற்கனவே இனங்காட்டப்பட்டுள்ள கருத்தேற்ற உத்திகளைத் தவிர அண்ணா சிறப்பாகத் தமக்குரிய உத்திகளை அறிமுகப்படுத்தியுள்ளார். இவைதான் அவரது இலக்கை அடைய உதவின. இவரது உத்திகளை இனங்கண்டால் அவை பிரச்சாரத் தொடர்பியலில் புதிய கோட்பாடுகள் தோன்ற வழிவகுக்கும்.

அண்ணாவின் பிரச்சாரத் தொடர்பியல் முறை மிகவும் செறிவூட்டமாக அமைகிறது. அவரது குறிக்கோள் மக்களின் கவனத்தைக் கவர்வது, கட்சியின் (தனது) பெயரை அவர்கள் மனதில் பதிய வைப்பது, அவர்களைத் தன்னிலைகளாக மாற்றித் தாம் விரும்பிய இலக்கை எட்டுவதில் அவர்களைப் பயன்படுத்துவது ஆகிய மூன்று நிலைகளில் அமைகின்றன.

இந்நோக்கங்களில் வெற்றி பெறும் விதமாக அவர் தம் தொடர்பியல் கொள்கைகளை வகுத்துக் கொண்டுள்ளார். அரசி-

யலைச் சமூகவியலாக்கியமை (Socialisation of politics), முன்-கூட்டியத் தீர்மானக் குறியீட்டாக்கக் கொள்கைகள் (Pre-supposed encoding Principles) தடமே தகவலாதல் (medium is the message முதலான உத்திகள் சிறப்பிடம் பெறுகின்றன.

சமூகவியலாக்க நிகழ்வில் அவர் கையாண்ட 'தம்பி' என்ற விளி பல பொருள்களை உற்பத்தி செய்கின்றன. அண்ணன், தம்பி உறவு முறையும், குடும்ப உணர்வுகளும் பண்பாட்டுச் சித்தரிப்புகளுடன் அமைவதால், அவ்வுணர்வுகளே கட்சித் தொண்டர்களிடத்தில் நம்கூரம் பாய்ச்சப்பயன்படுகின்றன.

தனிநபர்கள் தன்னிலையாக மாறும் பொழுது முரண்-பாடுகள் அழிக்கப்பட்டு மௌனமே மொழியாகிறது.

அரசியல் கட்சி போலிமதநிறுவனக் கட்டமைப்பைப் பெற்ற நிலையும் அரசியலைச் சமூகவியலாக்கப் பயன்பட்டது.

அண்ணாவின் இடுமானக் குறியீட்டாக்கம் (encoding) வலியுறுத்துதல் மற்றும் வற்புறுத்துதல் தன்மையில் கேட்போர் கூறவேண்டிய மறுமொழியையும் உள்ளடக்கியது.

தகவலை வெளிப்படுத்தும் தடமே (Channel) தகவலாக மாறிய தன்மை, மக்கள் அவரது மொழிப் புலமைக்கு அடிமைப்-படும் நிலையை ஏற்படுத்தியது.

## துணை நூற்கள்

1. அண்ணாதுரை, சி.என்., 1957, தம்பிக்கு அண்ணாவின் கடி-தங்கள், பாரிநிலையம், சென்னை.

2. அண்ணாதுரை, சி.என்., 1952, தம்பிக்கு அண்ணாவின் கடிதங்கள், பாரிநிலையம், சென்னை.

3. சாந்தா, அ., 1981, தினத்தந்தியின் இதழியல் உத்திகள், வெளியிடப்படாத முனைவர் பட்ட ஆய்வேடு, மதுரை காமராசர் பல்கலைக் கழகம், மதுரை.

4. சிவக்குமார், அ , 1995, உடலே திரையாக ... ..., காவ்யா பதிப்பகம், பெங்களூர்.

5. மனோன்மணி, தொ , 1992, ''பிரச்சாரகர் பாரதிதாசனார்'' தமிழியல் ஆய்வுகள், தமிழியற்புல வெளியீடு, மதுரை காமராசர் பல்கலைக் கழகம், மதுரை.

6. Little John, stephen, w,, 1989, Theories of Human Communication, Wadsworth Publishing Company, London.

7. Macdonell, Diane, 1982, Theories of Discourse — An Introduction, Penguin Books, London.

8. Toolen, Michael, J., 1989, Halt Rinehart and wins ton INC, Newyork.

9. International Encyclopedia of Communications, 1982, Vol - 3.

| பக் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| பதிப்புரை (2) | 12 | தமிழ்க்கூறு | தமிழ்கூறு |
| 1 | 9 | பன்பு | பண்பு |
| 1 | 12 | பாரட்டப் | பாராட்டப் |
| 3 | 1 | போரட்டங் களைத் | போராட்டங்களைத் |
| 3 | 8 | பிரிதொரு | பிறிதொரு |
| 3 | 25 | அறியலா | அறியலாம். |
| 7 | 6 | பற்றிசாடுதல் | பற்றிச்சாடுதல் |
| 7 | 8 | காண்டிருந்த | கொண்டிருந்த |
| 7 | 17 | நாகரீக | நாகரிக |
| 7 | 18 | அடிகளாரு | அடிகளாரும் |
| 13 | 5 | என்னுகிறான் | எண்ணுகிறான் |
| 15 | 7 | என்றி | என்று |
| 18 | 19 | ராஜாதிராஜா | ராஜாடி ராஜா |
| 22 | 15 | ரு கதையும் | ஒரு கதையும் |
| 25 | 31 | மணக் கண்முன்பு | மனக்கண் முன்பு |
| 26 | 25 | நண்பணிடம் | நண்பனிடம் |
| 28 | 25 | உருவக்கப்பட்ட | உருவாக்கப்பட்ட |
| 29 | 1 | ஐாதகத்தை | ஜாதகத்தை |
| 30 | 28 | தகபபனாகி | தகப்பனாகி |
| 33 | 24 | மடடும் | மட்டும் |
| 33 | 24 | சுட்டபபடுகிறது | சுட்டப்படுகிறது |
| 34 | 5 | நுகர்விற்குமுரி யவர்களாகடே | நுகர்விற்குமுரியவர் களாகவே |
| 38 | 7 | அரும்பானால் | இரும்பானால் |
| 42 | 7 | இ,தற்கு | இதற்கு |
| 50 | கடைசிவரி | எனவேதன் | எனவேதான் |
| 52 | 3 | தொடச்கம் | தொடக்கம் |
| 54 | 19 | உலகு | உலக |
| 58 | 18 | இத்தகை | இத்தகைய |
| 63 | கடைசிவரி | அளந்தரியும் | அளந்தறியும் |
| 64 | 2 | எழு | எழும் |
| 66 | 8 | எற்படும் | ஏற்படும் |
| 73 | 13 | காண்டுவந்தார் | கொண்டுவந்தார் |
| 77 | 7 | துனிவுடன் | துணிவுடன் |
| 79 | 12 | வண்டிகாரன் | வண்டிக்காரன் |

| | | | |
|---|---|---|---|
| 80 | 1 | செயகுந்தர் | செங்குந்தர் |
| 92 | 21 | பயன்படுத்தி யுள்ளார் | பயன்படுத்தியுள்ளார். |
| 95 | 17 | இசை × நூல் | இசை + நூல் |
| 96 | 12 | பல சொல்லின் | பல பொருள் ஒரு சொல்லின் |
| 96 | 13 | பொருளை கொள்ள | பொருளைத் தெரிந்து கொள்ள |
| 96 | 17 | பாங்கினை | பாங்கினைக் |
| 96 | 24 | பயணற்ற - காரியம் | பயனற்றகாரியம் |
| 98 | 10 | அண்ணா மொழியினைக் கருதுகின்றது | (வரி நீக்குக) |
| 98 | 22 | மொழியை | மொழியைக் |
| 100 | 9 | மண்டிகிடந்த | மண்டிக்கிடந்த |
| 102 | 13 | பன்மைச் | பழமைச் |
| 103 | 18 | கொள்கைகளு | கொள்கைகளும் |
| 106 | கடைசிவரி | துடித்து | தடுத்து |
| 107 | 22 | இடைவிணை களிலும் | இடைவினைகளிலும் |
| 110 | 1 | கொண்டானா? | கொண்டாரா? |
| 113 | 10 | கற்காலிகமாகப் | தற்காலிகமாகப் |
| 117 | 26 | நேர்ந்தததையும் | நேர்ந்ததையும் |
| 118 | 4 | துளாக்கி | தூளாக்கி |
| 122 | கடைசிவரி | (We - Teeling) | (We - Feeling) |
| 124 | 20 | கண்ணாயிரத் திரத்தின் | கண்ணாயிரத்தின் |
| 125 | 8 | கடிதம் | கழகம் |
| 127 | 30 | கங்கபாலவும் | கங்கபாலாவும் |
| 130 | 15 | முடிவும் | முடியும் |
| 131 | 32 | முலம் | மூலம் |
| 131 | 34 | க்தி | சக்தி |
| 133 | 14 | அல்லது | அல்ல. |
| 135 | 27 | இயைபுடைய தகா | இயைபுடையதாக |
| 143 | 19 | இத்முறைதயை தகையாள்வதை | இந்தமுறையைக் கையாள்வதை |
| 143 | 21 | தேச தபதி | தேச பக்தி |
| 143 | 21 | லையில் | தலையில் |

| | | | |
|---|---|---|---|
| 143 | 24 | தடைவிதித்ாலும் | தடைவிதித்தாலும் |
| 144 | 5 | இதணை | இதனை |
| 146 | 4 | இருந்தபோதும் | இறந்தபோதும் |
| 158 | 14 | உன்மைதான் | உண்மைதான் |
| 166 | 16 | சான்றாகுல். | சான்றாகும். |
| 167 | 9 | எண்னி | எண்ணி |
| 169 | 1 | உறைநடையில் | உரைநடையில் |
| 177 | 7 | இவ்வகையசன | எவ்வகையான |
| 178 | 8 | வகைக்ம் குசில | வகைக்கும் சில |
| 179 | 15 | பெரும்ஜான்மையு | பெரும்பான்மையும் |
| 179 | 16 | பெரும்பான்; அடியும் | பெரும்பான்மையும் |
| 183 | 14 | தோட்டக்காரன் வரதன் | வண்டிக்காரன் வரதன் |
| 186 | 16 | உறுத்திராட்ச | உருத்திராட்ச |
| 186 | கடைசிவரி | மூகிய | முக்கிய |
| 188 | 11 | மாஜிட்ரேட் | மாஜிஸ்ட்ரேட் |
| 188 | 22 | கடாட்கத்தால் | கடாட்சத்தால் |
| 189 | 8 | சொல்லாத்து | சொல்லாதது |
| 191 | 31 | சமாளிக்குக் | சமாளிக்கும் |
| 196 | 11 | தலைப்படுதல் | தலைப்பிடுதல் |
| 19 | 16 | யேற்பெற்ற | பேர்பெற்ற |
| 198 | 30 | approuch | approach |
| 199 | 7 | இவை யணைத்தும் | இலையனைத்தும் |
| 200 | 23 | stechniques | techniques |